## தற்காலத்திய பாக்டரிகள்



# குட்லாஸ் நெரோலாக்

## பெயின்டுகள் கொண்டு வர்ணம் பூசப்படுகின்றன

குட்லாஸ்
நெரோலாக்
பெயின்டுகளையே
வாங்குங்கள்




இந்த
பெயின்டுகள்
மனங்கவரும்
வர்ணமூட்டும்

குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் பிரைவேட் லிட்.

ஏஜன்டுகள் :

ஹாரிஸன்ஸ் & க்ராஸ்பீல்ட் லிட்.
தபால் பெட்டி நெ. 4, கோச்சின்

டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ.
தபால் பெட்டி நெ. 200, சென்னை

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

பின்னியின் ஷர்டிங் அணிந்து

ராஜாவைப் போல விளங்குங்கள்



எங்களிடமிருந்து வாங்குங்கள்



# வெங்கடேஷ் வஸ்திராலயா

ரீடெய்ல் ஷோரூம்கள்—

ஹைகோர்ட் எதிரில் & 2 தம்புசெட்டித் தெரு, மதராஸ் 1

**ஷோ ரூம் நெ. 1** இங்கு நாங்கள் பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டுமே விற்கிறோம்.

**ஷோ ரூம் நெ. 2** இங்கு நாங்கள் பக்கிங்ஹாம் & கர்நாடிக் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டுமே விற்கிறோம்.

**ஷோ ரூம் நெ. 3** இங்கு நாங்கள் பின்னி மில்லில் உற்பத்தியான துணிகளையும் மற்றும் இதர உயர்ந்த ரக துணிகளையும் விற்கிறோம்.

VV 175



மலர் 17 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | ஹேவிளம்பி
இதழ் 31 | | மார்கழி 19உ

# ஆஸாத் அமரரானார்!

அபுல்கலாம் ஆஸாத் காலமாகி விட்டார் என்ற செய்தியைக் கேட்டவுடன் காஷ்மீர் முதல் கன்யாகுமரி வரையுள்ள பாரத மக்கள் துக்கத்தில் ஆழ்ந்து விட்டனர். மத வேறுபாடின்றி, இன வேறுபாடின்றி, மொழி வேறுபாடின்றி எல்லாரும் 'ஆஸாத் போய் விட்டாரா! அத்தகைய பெரியாரை இனி எப்போது பார்க்கப் போகிறோம்?' என்றுதான் ஏங்கினர்.

''மின்னும் நிலையில மன்னுயிர் யாக்கைகள்
என்னு மிடத்து இறை உன்னுமின் நீரே!''

என்று ஆழ்வார் பாடியது முதற்கொண்டு, 'மண்டை வந்த நாளிலே, மரணமுண்டு தோளிலே' என்று நாமக்கல் கவிஞர் பாடும் வரையில் வாழ்க்கை நிலையாமையைப் பற்றி எத்தனையோபேர் எத்தனையோ விதமாகச் சொல்லி யிருக்கிறார்கள். அவற்றை நினைவுபடுத்திக் கொண்டால், மரணத்தைப்பற்றி வருத்தப்பட வேண்டிய அவசியமில்லை தான். இருப்பினும் பேதை மனம், யாராகிலும் நமக்கு வேண்டியவர் இறந்துவிட்டால் பேதலிக்கத்தான் செய்கிறது. இறந்தவர் வாழ்ந்த காலத்தில் அவர் புரிந்த செயல்களும், வாழ்ந்த முறையும், அன்பும்தான் நமக்கு ஆறுதல் தருகின்றன.

உபநிஷத் மந்திரமும் இதுவே: ''அழியாததும் ஓரிடம் நில்லாததுமான காற்றை அடைந்தது உயிர். உடல் சாம்பலாயிற்று. மனமே, செய்த செயல்கள் தான் மிச்சம். இதைத் திரும்பத் திரும்ப எண்ணுவாய்.''

அபுல்கலாம் ஆஸாத் அவர்களுடைய பண்பாட்டையும், அறிவையும், பரந்த மனப்பான்மையையும் நினைத்து இன்று பாரதம் புகழ்கிறது!

ஆஸாத் உண்மையான இஸ்லாம் மதபக்தர். அவர் இஸ்லாமிய மதத்தினரின் வேதமாகிய குர்ஆனுக்கு அரிய விரிவுரை எழுதியுள்ளார். அப்படிப்பட்டவர் பாரத நாட்டு இந்துக்கள் கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லா மதத்தினரின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமானார். 'இஸ்லாம் மதம் எந்த மதத்தையும் வெறுக்கச் சொல்லவில்லை; எல்லா மக்களையும் நேசிக்கும்படிதான் சொல்லுகிறது' என்று பூரண நம்பிக்கையுடன் பிரசாரம் செய்தார். ஆயுள் முழுதும் இந்து - முஸ்லிம் ஒற்றுமைக்காகவும், பாரதப் பண்பாட்டின் உயர்வுக்காகவும் பாடுபட்டார்.

அவருடைய தேசபக்தி அபாரமானது. காந்தி மகான், ''அவருக்கு மதத்தில் எவ்வளவு பக்தியோ, அவ்வளவு தேசபக்தி'' என்று ஒரு சமயம் குறிப்பிட்டார். அந்த நாட்களில் முஸ்லிம் மக்களில் பெரும்பாலோர் அதிகாரவர்க்கத்தின் கைப்பாவைகளாக விளங்கி வந்தார்கள். மௌலானா ஷௌக்கத் அலி அவர்களும் ஆஸாத் அவர்களும் இந்தப் பேதைமையைக் கடிந்து, தீவிரப் பிரசாரம் செய்தார்கள். முஸ்லிம் மக்களைத் தீவிர தேசபக்தி கொண்டவர்களாகச் செய்தார்கள். இதன்பயனாக முஸ்லிம் சமூகத்தினரின் பிற்போக்காளர்களிடம் அவர் அனுபவித்த இன்னல்கள் கொஞ்சமல்ல. அதிகாரவர்க்கத்திடம் அனுபவித்த இன்னல்களும் உண்டு. அவர் சொந்த மாகாணமாகிய வங்கத்தைவிட்டு வெளியேற்றப்பட்டார்; பஞ்சாபுக்குள் நுழைய அனுமதி மறுக்கப்பட்டார். பல முறை சிறைப்படுத்தப்பட்டார்.

மகாத்மா காந்தியின் கொள்கைகளைப் பூரணமாக ஒப்புக் கொண்டு எல்லா மக்களின் அன்பையும் பெற்றார். மனம், வாக்கு, காயம் மூன்றிலும் பெருந்தன்மையோடு நடந்து முஸ்லிம்கள் இந்துக்கள் எல்லாருக்குமே வழிகாட்டியாக வாழ்ந்தார்.

அபுல்கலாம் ஆஸாத் அவர்கள் இலக்கிய ஆர்வம் மிக்கவர். அவர் உருது மொழியில் செய்யும் பிரசங்கங்கள் கருத்தாழமும், அழகிய சொற்கட்டும் அமைந்து



**ஆஸாதின் இறுதி யாத்திரையில் தலைவர்களும் ஐந்து லட்ச மக்களும் கலந்து கொண்டு தங்கள் மரியாதையைச் செலுத்தினர்!**

நல்விருந்தாக இருக்கும் என்று சொல்லுகிறார்கள். அவர் இளமையில் கவிதை பல செய்திருக்கிறார். ''ஆஸாத்'' என்றால் சுதந்திரம். இதுவே அவர், தமக்கு வைத்துக் கொண்ட புனைபெயர்.

ஆஸாத் காங்கிரஸ் அக்கிராசனராகப் பதவி வகித்த காலத்தில்தான் கிரிப்ஸ் தூது கோஷ்டியும், அதற்குப் பின்னால் பல தூது கோஷ்டிகளும் வந்தன. ஆஸாத் அக்கிராசன பதவியில் இருந்து கொண்டு பாரதத்தின் பூரண சுதந்திரக் கொள்கையை வற்புறுத்தி, நாட்டுக்கு அரிய சேவை செய்திருக்கிறார்.

ஆஸாத் அவர்களுக்கு ஆங்கிலம் தெரியாது என்று பொதுவாகச் சொல்வார்கள். அவர் இளமை முதல் எகிப்து சர்வகலாசாலையில் படித்ததால், சரளமாகப் பேசும் அளவுக்கு ஆங்கிலம் பழகிக் கொள்ளவில்லை. ஆயினும் ஆங்கிலப் பேச்சுக்களையும் பிரசங்கங்களையும் நன்றாய்ப் புரிந்துகொள்ள முடியும். ஆங்கிலத்தில் எழுதியுள்ள நூல்களையும் படித்துப் புரிந்து கொள்ள முடியும்.

சுதந்திர பாரதத்தில் கல்வி மந்திரி ஸ்தானத்தை வகித்தார். பத்து ஆண்டுகள் அந்த இலாகாவை நிர்வகித்து வந்தார். சமீபத்தில் அபுல்கலாம் ஆஸாத் ஒரு எச்சரிக்கை செய்தார். பாரத நாட்டில் ஆங்கிலப் படிப்பின் தரம் குறைந்து வருகிறது. அப்படிக் குறைய விடக் கூடாது. ஆங்கிலக் கல்வியை இழந்து விட்டால், தற்காலத்துக்கு வேண்டிய அறிவை அடையாமற் போவோம் என்று எச்சரிக்கை விடுத்தார்.

இக்கட்டான சமயங்களில் நேருஜிக்கு ஆலோசகராக இருந்து வந்தது இவர் ஒருவரே என்றுகூடச் சொல்லலாம். எந்தவிதமாக முடிவு செய்வது என்று குழப்பமான நிலையிலிருக்கும் போது, நேருஜி ஆஸாதின் இல்லத்துக்கு விரைந்து இரண்டு மணி நேரம் பேசி விட்டு வருவது புதுதில்லியிலுள்ளவர்கள் சர்வசாதாரணமாக அறிந்த விஷயம். பல்லாண்டுகளாக நேருஜியின் குடும்பத்துக்கே நெருங்கிய நண்பராக இருந்ததும், ஆஸாதின் நற்குணங்களும், மேதாவிலாசமும் இருவருக்கும் உள்ள மொழி ஒற்றுமையும் இதற்குக் காரணங்கள் என்பார்கள். பிரச்னையைச் சீர்தூக்கிப் பார்த்துத் தெளிவாகப் பரிகாரம் கூறுபவர் ஆஸாத்தான். எந்த விஷயத்தையும் விருப்பு வெறுப்பின்றி நடுநிலைமையில் நின்று சீர்தூக்கிப் பார்த்து யோசனைகள் கூறும் சிறந்த நண்பரை நேருஜி இழந்துவிட்டது தேசத்தின் துர்ப்பாக்கிய மாகும்.

காந்திமகானின் அன்புக்குப் பாத்திரமான பெருந் தலைவர்களை ஒருவர் பின் ஒருவராக இழந்து வருகிறோம். இனி ஆஸாத் போன்ற தேசபக்தரைக் காண்பது அரிது. அவரது பண்பாட்டையும், குணங்களையும் மனத்தில் கொண்டு இளைஞர்கள் ஊக்கமும் உற்சாகமும் பெறவேண்டும்.



மௌலானா அபுல்கலாம் ஆஸாத்

தோற்றம்:1888 மறைவு:1958

# அரபு நாடுகளில் புதிய குடியரசு

எகிப்தும் சிரியாவும் சேர்ந்து ஒரு புது இணை குடியரசு அமைத்து விட்டன. இதற்கு எகிப்து மக்களும், சிரியா மக்களும் ஒருமுகமாகத் தங்கள் ஆதரவு தந்து விட்டார்கள். எகிப்தின் தலைவர் நாஸரே இப்புதுகுடியரசின் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். சிரியாவின் தலைவர் குவாட்லி இதை வரவேற்றிருக்கிறார்.

சிரியாவும் எகிப்தும் இணைந்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு நாடாக இருந்தது! எகிப்தின் சுல்தான் ஸலாடின் ஆட்சியில் சிரியா, எகிப்தின் ஒரு பகுதியாக இருந்தது. மேற்கேயிருந்து வரும் படையெடுப்புக்களைச் சிரியா தடுத்து வந்தது. ஸலாடின் ஆட்சி மறைந்து போன பிறகு அந்த நாட்டு மக்கள் பல நூற்றாண்டுகளாக இந்த இணைப்பு மீண்டும் நேருமா என்று கனவு கண்டு வந்தார்கள். அந்தக் கனவு இன்று நனவாயிற்று!

ஆனால் இது மேற்கத்திய வல்லரசுகளின் ராஜதந்திரிகளுக்கு ஒரு சூடு. அரபு மக்களைப் பிரிட்டிஷாரும், பிரஞ்சு மக்களும் நீண்ட நாட்களாக அடக்கி ஆண்டு வந்தனர். இரண்டாவது உலக மகாயுத்தத்துக்குப் பிறகு அரபு நாடுகளிடையே ஒரு விழிப்பு புதிதாக ஏற்பட்டு, சுதந்திரக் கிளர்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. பிரிட்டிஷ் ஆதிக்கத்தின்கீழ் இருந்த அரபு நாடுகள், இப்பொழுது பூரண சுதந்திரம் அனுபவித்து வருகின்றன. என்றாலும் வேறு முறையில் அரபு நாடுகளிடையே ஆதிக்கம் இருக்க வேண்டும் என்று ஐரோப்பிய நாடுகளுக்கு ஆசை உண்டு. இந்த ஆசையின் காரணமாகப் பிரிட்டன் சூயஸ் விஷயமாக, எகிப்தின் மீது போர் தொடுத்தது. ஆனால் அந்த ஆசை அமெரிக்காவுக்கும், உலக நாடுகளுக்கும் பிடிக்கவில்லை.

இப்பொழுது பிரிட்டன் இழந்துவிட்ட செல்வாக்கை அமெரிக்காவும் ருஷ்யாவும் பெறப் போட்டியிடுகின்றன. இவற்றின் ஆதிக்கத்துக்கு உட்படாமல் உதவிகள் மட்டும் பெற வேண்டும் என்றும், இரு சாராருக்கும் பொதுவாக இருக்கவேண்டும் என்றும் நாஸர் இப்புது முயற்சியைத் தொடங்கியிருக்கிறார்.

மேற்கத்திய வல்லரசுகள் மித்திர பேதம் செய்வதிலும், பிரித்தாளும் தந்திரத்திலும் மிக பயிற்சி பெற்றவை. அரபு இணை குடியரசு சற்று ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும்.

சிரியா, எகிப்து இணைந்ததிலிருந்து, எஞ்சிய அரபு நாடுகளும் இந்தக் குடியரசுடன் இணைய வேண்டும் என்பது நாஸர்-குவாட்லி இவர்களுடைய ஆசை. அது நடவாமல் இருப்பதற்கு மேற்கத்திய வல்லரசுத் தலைவர்கள் முயற்சி செய்வார்கள்.

பாகிஸ்தான் இப்புதிய குடியரசை மனமில்லாமல் வரவேற்றிருக்கிறது. உண்மையில், வரவேற்றதோடு நிற்காமல் அந்தரங்கசுத்தியோடு அதனுடன் சேர்ந்து வேலை செய்தால் நம்முடைய அண்டை நாட்டின் இயல்பே மாறி விடலாம்.

# என்ன சேதி?

## உபயதுல்லாவின் மறைவு

செந்தமிழ்நாட்டு முஸ்லிம் சமூகத்தினர், தேசபக்தியில் மற்ற எந்தச் சமூகத்தினரையும் விடப் பின்தங்கிவிடவில்லை என்பதற்கு உபயதுல்லா அவர்கள் ஓர் சிறந்த உதாரண புருஷராக விளங்கி வந்தார். தமிழ் நாட்டுக் காங்கிரஸ் சரித்திரத்தில் முக மிக்கிய பங்கு எடுத்துக் கொண்டார். பிரிவினை சக்திகள் தலையெடுத்த போதெல்லாம் உபயதுல்லா தீரத்துடன் போராடினார். தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகப் பணியாற்றியிருக்கிறார். உபயதுல்லாவின் மறைவு தமிழ் நாட்டுக்குப் பெரு நஷ்டம். அவரது பிரிவினால் வருத்தமுற்றிருக்கும் அவரது குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்!

## பிரிட்டனில் புது உணர்ச்சி

அணுகுண்டு ஜலஜகுண்டு சம்பந்தமாக மேனாட்டினருக்கு ராஜாஜி விடுத்த அறிக்கைகளும், கடிதங்களும் பயன் அளிக்கத் தொடங்கியிருக்கின்றன என்றே சொல்ல வேண்டும்.

உலகில் உண்மையை எடுத்துச் சொல்வதற்கென்று ஒரு சிலர் இருந்து கொண்டுதான் இருக்கிறார்கள். உள்ளத்தில் உண்மையென்று தோன்றியதைச் சொல்லக்கூடிய சிலர் பிரிட்டனிலும் இருக்கவே செய்கிறார்கள். அணு-ஜலஜ குண்டுகள் சோதனைகளை நிறுத்த வேண்டும், உற்பத்தியைத் தடைசெய்ய வேண்டும் என்ற தீவிர உணர்ச்சி கொண்ட பெட்ராண்டு ரஸ்ஸல், ஜே. பி. பிரீஸ்ட்லி போன்றவர்கள், வல்லரசுகளின் தலைவர்களுக்கும், கட்சித் தலைவர்களுக்கும் வேண்டுகோள் விடுப்பதை விட்டு, பொது மேடைகளில் ஏறிப் பிரசங்கம் செய்து பொதுஜன ஆதரவு திரட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். இதற்கு பிரிட்டிஷ் பொதுமக்கள் நல்ல ஆதரவு அளித்து வருகிறார்கள் என்று செய்தி வருகிறது.

இது ஒரு நல்ல சகுனம்!

பிரிட்டிஷ் பொதுமக்களின் இந்த உணர்ச்சியைப் பார்த்து, இப்பொழுது

# சரித்திர புருஷர் ஆஸாத்

① குழந்தைப் பருவமுதல் புத்தகங்கள் படிக்கத் தொடங்கி,

② அறிவின் கலங்கரை விளக்காகத் திகழ்ந்தார்.

③ காந்தி மகானுக்கு உற்ற நண்பராகி,

④ எல்லா எதிர்ப்புகளையும் நிலை கலங்காமல் தாங்கினார்.

⑤ சிறந்த பேச்சாளராக விளங்கினார்.

⑦ வாழ் நாள் முழுவதும் வகுப்பு வாதப் பாம்போடு போராடினார்.

⑧ நேருஜியின் பணிகளுக்குத் துணை நின்றார்.

⑨ கம்பீர புருஷராக வாழ்ந்து சரித்திர புருஷராகி விட்டார்.

ஆட்சி பீடத்திலுள்ள கன்ஸர்வடிவ் கட்சியினர் 'இந்த முடிவை நாம் ஏற்றுக் கொள்ளலாமா ?' என்று யோசித்து வருவதாக ஒரு வதந்தி. இப்படிச் செய்தால், தேர்தல் வருவதற்கு முன்பே தொழிற் கட்சியை கன்ஸர்வடிவ் கட்சியினர் வெற்றி கொண்டதாகிவிடும் ஆனால் உலக மக்கள், எந்தக் கட்சியாவது தங்களை அணுகுண்டு விஷத்திலிருந்து காப்பாற்றினால் போதும் என்று தான் கோருகிறார்கள்!

## நேயர்களுக்கு ஒரு விருந்து

சிறந்த கருத்து விருந்தை இவ்விதழ் 9-ம் பக்கத்தில் அளித்திருக்கிறோம். ஸ்ரீமதி மீராபென் அவர்கள் கட்டுரையைத்தான் குறிப்பிடுகிறோம். ஸ்ரீமதி மீராபென் இங்கிலாந்தைச் சேர்ந்தவர். கப்பல் தளபதியின் புதல்வி. காந்தி மகானின் கருத்துக்களிலும், நிர்மாண வேலைத் திட்டத்திலும், மிகுந்த ஈடுபாடு கொண்டு, தமது நாட்டைத் துறந்து முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் இந்தியாவுக்கு வந்தார். காந்தி மகானின் வளர்ப்புப் புதல்வியாக இருந்து, அவருக்குகந்த பணிகளையெல்லாம் செய்து வந்தார். காந்தி மகானுக்குப் பிறகும், அவர் காட்டிய வழியில் பாரதத்தின் வடகோடியில் இமாசலப் பிரதேசத்தில் 'பசுசம்ரட்சணை' போன்ற பிராணிகளுக்கான அருட் பணி புரிந்து வருகிறார். எனினும் நாட்டு நடப்பு முறைகளையும் கூர்ந்து பார்த்துத் தமது எண்ணங்களைக் கல்கிநேயர்களுக்கென்று பிரத்தியேகமாக எழுதியிருக்கிறார். நேயர்கள் படித்துச் சிந்தனைக் கிளர்ச்சியுறுவார்கள் என்று நம்புகிறோம்

## வைத்தியநாதய்யர் நினைவு

மதுரையில் திரு ஏ. வைத்தியநாதய்யர் நினைவு நாளில் பங்கெடுத்துக் கொண்ட மந்திரி திரு கக்கன் ஹரிஜன மக்களுக்கு ஏ. வைத்தியநாதய்யர் செய்துள்ள சேவையை மனமுருகிப் பேசியிருக்கிறார். திரு வைத்தியநாதய்யரின் பெருமுயற்சியில்லாவிடில், ஹரிஜன மக்கள், மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயப் பிரவேசம் பெற்றிருக்க மாட்டார்கள் என்று பேசியிருக்கிறார். இந்த வைபவத்துக்குத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு கே. ராஜாராம் நாயுடு அவர்கள் தலைமை வகித்திருக்கிறார். இவர்கள் எல்லாரும் சேர்ந்து மதுரையில் ஏ. வைத்தியநாதய்யர் அவர்களுக்குத் தக்க ஞாபகார்த்தம் நிறுவ வேண்டும் என்று முடிவு செய்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

இதற்கென்று திரு எல். அழகு சுந்தரம் தலைமையில் பதினறு பேர்கள் கொண்ட கமிட்டியையும் நிறுவியிருக்கிறார்கள் என்று அறிகிறோம். கமிட்டி சுறுசுறுப்பாக வேலைசெய்து ஏ.வைத்தியநாதய்யருக்குத் தக்க ஞாபகார்த்தம் நிறுவும் என்று எதிர்பார்க்கிறோம்.

## ருஷ்யா வழிகாட்டுகிறது

ருஷ்யச் சார்புள்ள அரபு நாடுகளில் ருஷ்ய அரசாங்கம் ஆங்கிலத்தைப் போதிக்கப் பள்ளிக்கூடங்களில் ஏற்பாடு செய்து வருகிறது. இதற்குக் காரணம் என்ன ? ருஷ்யா ஆங்கிலம் உலக மொழி என்பதைக் கண்டதுதான். மக்கள் கற்றுக்கொள்ள வேண்டிய எல்லா விஷயங்களும் - விஞ்ஞானம், இலக்கியம், யந்திர அறிவு யாவும் அம்மொழியில் அதிகமாக இருக்கின்றன. அந்த மொழி, முன்னேற்றத்துக்கு அவசியம் என்று ருஷ்யா உணர்ந்திருப்பதால்தான் இத்தகைய ஏற்பாட்டைச் செய்தது. ஆங்கிலத்தைப் புறக்கணிப்பது முன்னேற்றத்துக்குப் பதில் பின்னேற்றத்துக்குத் தான் வழி.

# மீராபென் அவர்களின் கருத்து

நான் தென்னாட்டுக்கு வந்து வெகு நாட்களாகி விட்டன. இருந்தாலும் தென்னாட்டின் இயற்கை வனப்பையும் மக்களின் அழகிய பண்பாட்டையும் இன்னும் என்னால் மறக்க முடியவில்லை. வட நாட்டிலிருந்து தென்னாட்டுக்குச் செல்வது வேறு ஒரு உலகத்துக்குப் போவது போலத்தான் இருக்கிறது. வேறு தேசத்துக்குப் போவதுபோல் இருக்கிறது என்று சொல்லி யிருப்பேன். ஆனால் இப்போது மக்கள் தவறான பொருள் கொண்டு கோபித்துக் கொள்வார்கள்.

பிரிட்டிஷ் ஆதிக்கத்தை நீக்கிக் கொள்ள முயற்சி செய்தபோது பாரத நாடு ஒன்று என்பதை வற்புறுத்துவதே மக்களின் மனோபாவமாக இருந்து வந்தது. இந்திய ஏகத்துவத்தை வற்புறுத்திச் சொல்ல வேண்டிய அவசியம் அப்போது இருந்தது. அப்படிச் செய்ததும் சரிதான். ஆனால் தற்போது அதை வட நாட்டினர் சற்று மித மிஞ்சியே வற்புறுத்துகிறார்கள் என்று தோன்றுகிறது. ஒற்றுமை மக்களுக்கு இன்பம் தந்து நீடித்து நிலைத்திருக்க வேண்டுமானால் இந்த விஷயத்தைப் 'பூவைத் தொடுப்பது போல் கூசி'ப் பரிமாற வேண்டும். மொத்த இணைப்புக்குள் அடங்கும் பகுதிகள் ஒவ்வொன்றுக்கும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு சுவாதந்திரியம் தர வேண்டும். இணைப்பு விஷயத்தில் இணையும் பகுதிகளுக்கு மனமுவந்த சம்மதமும் மத்திய ஆட்சியுடன் கூட்டுறவுக்கு மனமார்ந்த ஒப்புதலும் இல்லாவிடில் மனத்தில் குடைந்து கொண்டிருக்கும் குறைகளும் ஏமாற்றங்களும் மனக்கசப்பும் வளர்ந்து நிலைமை மோசமாகும். அத்தகைய இணைப்பை விடப் பிரிந்திருப்பதே மேலாகும்.

இந்தியா ஒரு கண்டத்துக்குச் சமானமாகும். ஐரோப்பா கண்டத்தில் அடங்கியுள்ள பல்வேறுபட்ட மக்கள் தொகுதிகளைப் போலவே இந்திய உபகண்டத்திலும் இருக்கிறார்கள். ஐரோப்பிய நாடுகளில் பரஸ்பரப் போரும் சச்சரவும் நடைபெற்று வருகின்றன. இந்தியாவில் அத்தகைய சண்டைகள் நேரா மல் காப்பாற்றுவதற்காகப் பல்வகைப்பட்ட மக்களும் தங்கள் மொழி, பண்பாடு ஆகிய வற்றைத் தாங்கள் விரும்பும் வகையில் வளர்த்து வழங்கி வர உதவ வேண்டும் அல்லவா ? பல்வேறுபட்ட மக்களை இவ்வழியில் பிணைத்து உலகத்துக்கு வழி காட்ட வேண்டும். இந்தப் பணி இந்தியாவில்தான் செய்ய முடியும்.

அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட பாரதத்தின் பல்வேறு பகுதிகளில் புதிய விழிப்பைக் காண்கிறேன். மக்கள் தங்கள் உணர்ச்சிகளைச் சுதந்திரமாக வெளியிடத் தொடங்கியிருக்கின்றனர். இந்த சுதந்திரோதயம் நல்ல ஆரோக்கியமான மங்கள அறிகுறியாகும். இதை உணர்ந்து மத்திய சர்க்கார் ஆணவத்தை அடக்கி, நீண்டநாள் அடிமைப்பட்ட மக்களிடையே காணும் இயல்பான சுதந்திர உணர்ச்சி இது என்று ஏற்றுக் கொண்டு அனுதாபத்துடன் கையாள வேண்டும். இது என்னுடைய அபிப்பிராயம்.

அப்படிச் செய்யாமல் முரட்டுஅதிகாரத்தை உபயோகித்தால் நம் ஒற்றுமை குலைந்து போகும்; நோக்கம் சிதைந்து போகும்.

ராஜ்யங்களின் புது அமைப்புத் திட்டம், மொழிப் பிரச்னை முதலியவை மத்திய அரசாங்கத்தின் பேரில் எரிச்சலும் மனக்கசப்பும் மக்களிடையே கிளப்பி யிருக்கின்றன. மக்களுக்கு மத்திய சர்க்காரிடம் மட்டும் அல்ல கோபம். உதாரணமாக, நான் இருக்கும் இடத்தில் காண்பது என்னவென்றால் இமாசலப் பிரதேசத்தின் மலைவாசிகளுக்குச் சமவெளிப் பிரதேச மக்களின் ஆட்சி கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. முன்னம் மலைப்பகுதி மக்களை ராஜாக்களும் ஜமீன்தார்களும் ஆண்டு வந்தார்கள். அப்பொழுதும் மக்களுக்குப் பல குறைகள் இருந்துதான் வந்தன. என்றாலும் அவை அவர்களுடைய சொந்த விவகாரமாகப் பாவிக்கப்பட்டன. சட்டமும் அரசாங்கமும் அந்தப் பகுதி மக்களாலேயே, அவர்கள் கஷ்ட சுகங்களும் பழக்க வழக்கங்களும் அறிந்த மக்களாலேயே நடத்தப்பட்டு வந்தன. ஆனால் இப்பொழுதோ தங்களை யாரோ, தங்களுடைய விஷயங்களை அறியாத அன்னியர்கள் ஆள்வதாக எண்ணுகிறார்கள். இது பாரத நாட்டின் எல்லைப் பிரதேச மக்களின் உணர்ச்சி. அறிவுடைய எந்த அரசாங்கமும் தனது நாட்டின் எல்லைப் பகுதியில் இப்படி ஒரு அதிருப்தி வளர இடம் தராது.

மக்களின் அன்பைப் பெறுவதற்கு வழி 'அதிகாரங்களைக் கேந்திரத்தில் சேர்த்துக் கொள்வது அல்ல. மையத்து அதிகாரங்களைப் பகிர்ந்து கொடுப்பதுதான் முறை. ஆனால் இந்த முறைக்கு நேர்மாறான முறைதான் நாட்டில் கையாளப்பட்டு வருகிறது என்பது வருத்தம் தருகிறது. நாட்டின் எந்தப் பகுதியிலாவது மத்திய ஆட்சியின் செல்வாக்கு குறைவதுபோல் தோன்றினால் உடனே ஆதிக்கத்தை முன்னைவிட அதிகமாக வலுப்படுத்திக் கொள்ள வேலை செய்கிறது. இதன் காரணமாக மத்திய சர்க்காரிடம் வெறுப்புத்தான் வளருகிறது.

ஒவ்வொரு நாளும் மந்திரிகள் இங்குமங்கும் ஓடுகிறார்கள். மேடைகளில் ஏறிப் பிரசங்கம் செய்கிறார்கள். அவர்களால் மக்களின் உள்ளத்தைத் தொட முடியவில்லை. மக்களின் பிரச்னைகளைத் தீர்க்க முடியவில்லை. அவர்கள் பிரசங்கங்களை நிறுத்திக் கொண்டு மக்களின் குறைகளைச் சற்று ஆராய்ந்தால் எவ்வளவோ லாபகரமாக இருக்கும்.

முன் காலத்தில் அரசர்கள் அடிக்கடி மாறுவேடம் பூண்டு, மக்களிடையே சென்று, குறைகளை அறிந்து வருவது தங்களுடைய கடமையாகக் கொண்டிருந்தார்கள். இவ்வாறு நமது பெரிய மந்திரிகளும் செய்தால் உண்மையை அறிவார்கள்.

தாங்கள் மிக நம்பியிருக்கும் அரசியல் கட்டடமும் கோபுரமும் உறுதியான அஸ்திவாரத்தின் மேல் நிற்கவில்லை; அசையும் மணற்தளத்தின் மேல்தான் கட்டப்பட்டிருக்கிறது என்பதை உணர்வார்கள். ஜனநாயகம் என்பது பெயரளவில்தான் இருக்கிறது என்பதைக் காண்பார்கள். அப்பொழுதுதான் அவர்களுடைய பார்வை தம்மைச் சுற்றிக் கண்ணைமறைக்கும் அதிகாரவர்க்கத் திரையை ஊடுருவிச் சென்று நாட்டுக்கு வேண்டியதைச் செய்யும் அறிவைப் பெறுவார்கள்.

# பிரச்னை தீர வழி

கொழும்பு, பிப்ரவரி 21வ.

அரசாங்க உத்தியோகங்களில் புதிதாக நியமிக்கப்படுவோர் அனைவரும் நியமனம் பெற்ற மூன்று வருடங்களுக்குள்ளாகச் சிங்கள பாஷையில் தேர்ச்சி பெற வேண்டுமென்றும் இல்லாவிட்டால் அவர்கள் அரசாங்கப் பதவிகளை இழக்க நேரிடலாமென்றும் இவ்வாரம் ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த உத்தரவு தமிழ் மக்களுக்கு மிகுந்த கவலையையும் வேதனையையும் கொடுத்திருக்கிறது. தமிழர்கள் தமிழ் மொழியிலும் சிங்களவர்கள் சிங்கள மொழியிலும் உயர்தரக் கல்வி பயிலலாம் என்பதுதான் அரசாங்கத்தின் தற்போதையக் கல்விக் கொள்கை. தமிழ்க் குழந்தைகள் சிங்களத்திலோ சிங்களக் குழந்தைகள் தமிழிலோ கல்வி பயில அனுமதிக்கப் படுவதில்லை. நிலைமை இப்படியிருக்கும்பொழுது சிங்களத்தில் தேர்ச்சி பெற்றால் மட்டுமே அரசாங்க உத்தியோகம் என்று உத்தரவிடுவது தமிழ்ப் பள்ளிக்கூடங்களை அடியோடு உபயோகமற்றதாக்குவதாயும் சர்க்கார் உத்தியோகங்களைச் சிங்களவர்களின் ஏகபோக உரிமையாக்குவதாயும் இருக்கும். தமிழர்களுக்கு அவர்களுடைய தாய் மொழியில் கல்வி பயில வசதியளித்திருப்பதாக அரசாங்கம் சொல்லிக் கொள்ளுவதிலும் அர்த்தமில்லை. இதையெல்லாம் கண்டு தமிழ் மக்கள் ஏமாந்து விடுவார்களா? தமிழ் மக்களைத் திருப்திப்படுத்த ஒரு புறம் கண் துடைப்பு ஒப்பந்தங்கள் செய்து கொண்டு மற்றொரு புறம் அதற்கு நேர் மாறான நடவடிக்கைகளைச் சர்க்கார் எடுத்து வருகிறார்கள். சென்ற வருடம் மொழி வெறியினால் நாட்டில் ஏற்பட்ட பயங்கரமான நிலைமையை இவ்வளவு சீக்கிரத்தில் மந்திரிகள் மறந்து விட்டார்களா என்று கேட்கத் தோன்றுகிறது.

*** *** ***

அடுத்த மாத ஆரம்பத்தில் பிரதம மந்திரியின் அரசியல் கட்சியான ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சியின் வருடாந்திர மகாநாடு களனி என்னுமிடத்தில் கூடும்பொழுது இலங்கை இந்தியர் பிரச்னையை சுமுகமாகவும் சீக்கிரமாகவும் தீர்க்க வேண்டுமென்று வற்புறுத்தி ஒரு தீர்மானம் சமர்ப்பிக்கப்பட இருக்கிறது. இதற்கு முன்னால் மந்திரி சபையின் விசேஷக் கூட்டமொன்றை நடத்தி இந்தியப் பிரச்னையை ஆராய்ந்து ஒரு சமரசத் திட்டம் தயாரிக்கப் போவதாயும், இந்தச் சமரசத் திட்டத்தின் அடிப்படையில் சர்க்கார் கட்சி மகாநாட்டுத் தீர்மானம் இருக்குமென்றும் கூறப்படுகிறது.

இந்தியப் பிரச்னையைத் தீர்க்க இந்திய அரசாங்கங்கள் எடுத்த முயற்சிகளெல்லாம் பயனளிக்காமல் போன காரணம் பிரச்னையில் நேரடியாகச் சம்பந்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகளைக் கலந்து கொள்ளாததுதான். இந்தப் பழைய தவறை ஸ்ரீ பண்டாரநாயகா அரசாங்கம் மறுபடியும் செய்யக் கூடாதென்றும் ஸ்ரீ தொண்டமானையும் ஸ்ரீ அஸிஸையும் அழைத்துப் பேசி, இந்தியப் பிரச்னைக்கு ஒரு சுமுகமான முடிவு செய்து கொண்டு, பிறகு மந்திரி சபையைக் கூட்டி ஆலோசிக்க வேண்டுமென்றும் அரசியல் வட்டாரங்கள் வற்புறுத்தி வருகின்றன. இந்தக் கோரிக்கை இலங்கை சர்க்காரின் செவிகளில் ஏறுமா? —ரஜனி



இலங்கையில் நடைபெறும் ஆசிய-ஆப்பிரிக்கா மாதர்களின் மகாநாட்டுக்காக இந்திய அரசாங்க உதவி வெளிநாட்டு மந்திரி ஸ்ரீமதி லட்சுமிமேனன் உள்பட 19 நாடுகளிலுள்ள சுமார் நூறு பெண் பிரதிநிதிகள் வந்திருக்கிறார்கள். அவர்களுக்குக் கொழும்பிலுள்ள பல தமிழ்ப் பெண்மணிகளின் சங்கங்களும் கூட்டாக ஒரு விருந்துபசாரம் நடத்தியபொழுது எடுத்த படம்.

# அருள் வாக்கு

முக்கியமாக எந்த ஒரு ஜாதிக்குக் கஷ்டம் வந்தாலும் அதை நாம் சொந்தக் கஷ்டம் போல் பாவிக்க வேண்டும். உடன் நின்று அதனை நீக்க வேண்டும். பிறரைத் தூஷிக்காமல் சகோதர மனப்பான்மையுடன் அவர்களுடைய இன்னல்களைத் தீர்க்க முயல்வதையே ஒவ்வொருவரும் தம் கடமையாகக் கொள்ள வேண்டும். சிறிது கஷ்டம் இருக்கிறது என்பதற்காக ஸ்தாபனங்களை அழிக்கும் வேலையில் அறவே ஈடுபடக் கூடாது. அதைத் தவிர்த்து, நன்மை பயக்கும் ஆக்க வேலையில்தான் ஈடுபட வேண்டும்.

சில சமயங்களில் நமக்குச் சளி பிடிக்கிறது. இதற்காகத் தலையையே வெட்டு என்று சொல்வதா? குடும்பங்களில் பங்காளிச் சண்டை நிலவுவதைப் பார்க்கிறோம். நிலச் சொத்துக்கள் இருப்பதால் சொத்துப் பிரிவினைச் சண்டைகளும் ஏற்படுகின்றன. இதற்காகப் பங்காளிகளே இருக்கக் கூடாது, நிலங்களே இருக்கக் கூடாது என்று கூற முடியுமா?

ஒவ்வொரு பாஷையிலும் உத்தமமான தத்துவங்கள் பல பொதிந்துள்ளன. இதனை மறந்ததாலோ என்னவோ, தற்போது நம் தேசத்தில் பாஷைச் சண்டை பலமாக ஏற்பட்டிருக்கிறது. இத்தகைய சண்டை தெற்கே இலங்கைப் பகுதியிலும் வடக்கே பாகிஸ்தானிலும் கூட ஏற்பட்டிருக்கிறது. ஒரு இடத்தில் சிங்களம்-தமிழ்ப் போர், மற்ற இடத்தில் உருது-வங்காளிச் சண்டை. இப்படியாக பாஷைகள் சண்டைக்குக் காரணமாக இருப்பதால் பாஷைகளே கூடாது, நாம் எல்லோரும் ஊமைகளாக இருக்க வேண்டும் என்று சொல்ல முடியுமா?

துவேஷ மனப்பான்மையை விட்டு, சகோதர உணர்ச்சியுடன் எல்லா ஜாதி, பாஷை, மதங்களையும் நோக்க வேண்டும். அவைகள் ஒவ்வொன்றிலுமுள்ள போற்றுதற்குரிய உண்மைத் தத்துவங்களை உணர வேண்டும்.

''ஜாதி, மதங்கள் இருப்பதால், உலகத்தில் சண்டை கஷ்டங்கள் ஏற்படுகின்றன; ஆகையால் இல்லாமலிருப்பது தேவலை'' என்று கூறப் படுகிறது. அரசாங்கம், பாஷை இவைகளினால் கலகம், சண்டை, சச்சரவுகள் ஏற்பட்டாலும் அவைகளால் இருக்கும் உபயோகத்தைக் கருதி, அவைகளை வைத்துக் கொண்டுதான் இருக்கிறோம். அவைகளால் வரும் கெடுதிகளை மாத்திரம் சீர்திருத்திச் சமாளிக்க முயலுகிறோமல்லவா? அதேபோல சமய நெறிகளும், குலாசாரங்களும் சரியாக அறிந்து கொள்ளப் படாததனால், சில சமயம் சச்சரவுகளுக்குக் காரணமாயிருந்தாலும் அவைகளில் வந்துள்ள கெடுதல்களை நீக்கி, அவைகளைச் சுத்தமான முறையில் உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

—ஸ்ரீசங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்






# நல்ல இடத்துச் சம்பந்தம்

காந்தன்

"என்ன மிஸ்டர் காந்தன், 'நல்ல இடத்து சம்மந்தம்' என்று படத்தின் தலைப்பிலேயே தப்புப் போட்டிருக்கிறார்களே! படம் எப்படியிருக்குமோ!" என்று நண்பர் அலுத்துக் கொண்டார். அவர் எந்தப் பத்திரிகையில் தப்பு இருந்தாலும் பொறுக்க மாட்டார். கர்ம சிரத்தையாக அவைகளைக் குறித்து வைத்துக் கொண்டு என்னிடம் காட்டுவார்; சினிமாப் படங்கள் விஷயத்திலும் அப்படித்தான். பிழை கண்டு பிடிப்பதில் மட்டும் அவருக்குச் சிரத்தையிருப்பதாக இதைக் கொண்டு முடிவு செய்து விடக் கூடாது. எந்த விஷயமும் பிழையின்றி வர வேண்டும் என்பதில் உள்ள சிரத்தை தான் அவருடைய இந்தச் சுபாவத்துக்குக்காரணம்.

படத்தின் தலைப்பில் தான் பிழையிருக்கிறதே யொழிய, படத்தின் மற்ற அம்சங்களைக் கூடிய வரையில் பிழையின்றித் தயாரித்திருக்கிறார்கள்.

ஒரு குறிப்பிட்ட காரணத்தைக் கொண்டு இந்தப் படத்தில், எந்தப் படத்தையும் விடப் பிழைகள் குறைவாகத்தான் இருக்க முடியும் என்று நான் நிச்சயமாகச் சொல்லுவேன். அந்தக் காரணம், இந்தப் படம் சுமார் இரண்டரை மணி நேரத்தில் முடிந்து விடுகிறது என்பதுதான்! சரிதானா?

'இந்தக்காட்சி எத்தனை நேரமாகுமோ' என்று நான் எந்தத் தமிழ்ப் படத்துக்குப் போனாலும் கலங்குவதுண்டு. இந்தப் படம் 'விறுவிறு' வென்று ஓடி, என் கலக்கத்தைத் தவிர்த்தது.

வேளை தவறாமல் தண்ணீர் பாய்ச்சி, நல்ல உரம் இட்டு, சிரத்தையோடு செய்யும் பயிரில் பலன் காண்பது சிரமமாயிருக்கிறது. ஆனால் யாரும் அறியாமல் கவனிப்பாரற்றுக் கிடக்கும் குப்பை மேட்டில் தவறிப்போய் விழுந்த அவரை விதையொன்று செழித்து வளர்ந்து கூடை கூடையாகக் காய்த்துத் தள்ளுவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

அதுபோலத்தான் இந்தப் படத்தின் வெற்றியையும் குறிப்பிட வேண்டும்.

இந்தப் படம் சாதாரணக் கதையை அடிப்படையாகக் கொண்டது. படத்தில் எங்கேயும் 'காமிரா'த் திறமைகூட அதிகமாகக் காணோம். தடதட வென்று புரண்டு, கட கட வென்று உருண்டு செல்லும் வசனங்களும் இல்லை; பிரமாதமான பாடல்களும் இல்லை.

எம். ஆர். ராதா கதாநாயகனாக நடிக்கிறார் என்று அறிந்ததும், புயலையும், புரட்சியையும், பூகம்பத்தையும், எரிமலையையும் எதிர்பார்த்துப் போனேன். எம். ஆர். ராதா என்னை

அடியோடு ஏமாற்றி விட்டார். பகுத்தறிவுப் பிரசங்கமோ, சமூகத்தின் சோர்வைப் போக்கி, விழிப்பை ஊட்டும் சொற்பொழிவோ படத்தில் காணவில்லை!

முத்து ஒரு கொள்ளைக்காரன்; அருங்குணங்கள் படைத்த மரகதம் அவன் தங்கை- ஒரு நர்ஸ். முத்துவின் 'தொழில் முறை'யை அறியாத அவன் தகப்பன், ரத்தினம் என்னும் குணவதியை அவனுக்கு மணம் செய்து வைக்கிறான். ரத்தினத்தின் அண்ணன் மாணிக்கம் ஒரு கான்ஸ்டபிள்; குணத்திலும் மாணிக்கம். அவனுக்கும் நர்ஸ் மரகதத்துக்கும் காதல் உதித்துக் கனியாகிறது. கடைசியில் கயவன் முத்து ஒரு கொலைசெய்துவிட்டுக் கான்ஸ்டபிள் மாணிக்கத்தின் துப்பாக்கிக்கு இரையாகிறான். நர்ஸ் மரகதம் மாணிக்கத்தின் மனைவியாகிறாள்.

மூலக் கதையின் பொறுப்பாளரான நடிகர் வி. கே. ராமசாமியும், திரைக்கதை, வசனம் ஆகியவற்றைத் திறமையுடன் தயாரித்திருக்கும் ஏ. பி. நாகராஜனும் பாராட்டுக்கு உரியவர்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

திரைக் கதையில் அநாவசியமான சிக்கலோ அவசியத்துக்கு அப்பாற்பட்ட திருப்பமோ எதுவும் இல்லை. இது இது என்று செல்லும் கதைப் போக்கைச் சிருஷ்டித்து அதில் நல்ல உணர்ச்சிகளைப் புகுத்தி யிருப்பது தான் இதில் விசேஷம். சாதாரண நிகழ்ச்சிகளைக் கொண்டே படத்தின் பல காட்சிகள் நம் உள்ளத்தில் இடம் பிடித்துக் கொள்கின்றன.

இதற்கு உதாரணமாக ஒரு காட்சி:

நர்ஸ் மரகதம் தன் அண்ணன் முத்துவின் கல்யாணத்துக்கு ரயிலில் போகிறாள். தன் தங்கை ரத்தினத்தின் கல்யாணத்துக்குக் கான்ஸ்டபிள் மாணிக்கமும் அதே ரயிலில் போகிறான். இருவருக்கும் அறிமுகமாகிறது. அந்த அறிமுகம் அசடு வழியாமல் மிகவும் நன்றாக அமைந்திருக்கிறது.

கான்ஸ்டபிள் மாணிக்கம் ரயிலில் நின்று கொண்டே சிற்றுண்டி சாப்பிடுகிறான். தண்ணீர் இல்லாததினால் தொண்டையில் விக்கல் உண்டாகிறது. அவன் திணறுவதைப் பார்த்து நர்ஸ் மரகதம் தன் பிளாஸ்கிலிருந்து தண்ணீர் ஊற்றித் தருகிறாள்; பிறகு பக்கத்தில் இடம் தருகிறாள். கடைசியில் தன் உள்ளத்திலேயே அவனுக்கு நிரந்தரமாக இடம் தந்து விடுகிறாள்.

இந்தக் கட்டம் மிகவும் இயல்பாக நிகழும் காட்சியாகத் தோன்றினாலும் கூடவே இலேசான காதல் காட்சியையும் உருவாக்குகிறது. "பொண்ணு மாப்பிள்ளே ஒண்ணாப் போகுது ஜிகு ஜிகு வண்டியிலே..." என்ற ரயிலில் பிச்சையெடுக்கும் சிறுமிகளின் பாட்டு அந்தக் காதல் காட்சியில் மந்தமாருதமாக வீசுகிறது. திரு அ. ச. நாராயணன் இயற்றிய அந்தப் பாட்டு பொருள் பொதிந்திருக்கும் நல்ல பாட்டு.



"புதுப் பெண்ணே புதுப் பெண்ணே நிமிர்ந்து பாரு—நீ பொறந்த இடத்தை மறந்திடாதே நெனைச்சுப் பாரு..." என்ற பாட்டு கோஷ்டி கானமாக அமைந்து நன்றாயிருக்கிறது. அதையும் திரு அ. ச. நாராயணன் இயற்றியிருக்கிறார்.

நர்ஸ் மரகதமாக வரும் எம். என். ராஜம், ரயில் வண்டியில் மாணிக்கத்தின் மீது நாணம் கலந்த காதல் பார்வையை வீசும்போது நன்றாக நடித்திருக்கிறார்.

முத்துவுக்கு வாழ்க்கைப்பட்ட ரத்தினம், யாரும் அநுதாபப் படவேண்டிய பாத்திரம். அதை ஏற்று நடிக்கும் சௌகார் ஜானகியின் மீது, படத்தின் ஆரம்பத்திலேயே நமக்கு அநுதாபம் ஏற்பட்டு விடுகிறது. ஒருவரிடம் அநுதாபம் தோன்றிய பிறகு, குறைகள் சொல்ல முடியாதல்லவா?

முத்துவின் பாகம் எம். ஆர். ராதாவுக்கு எல்லாவிதத்திலும் ஏற்றதுதான். தடம் புரண்ட ரயில் வண்டியையும் கட்டவிழ்த்துக் கொண்டு கிளம்பிவிட்ட முரட்டுக் காளையையும் நினைவூட்டுகிறது அவர் ஏற்றிருக்கும் பாத்திரம். மிகவும் நன்றாய் நடித்திருக்கிறார்.

நன்றாய்ப் பாடும் பஜனை கோஷ்டியில், புதிதாய்ப் பாடுபவர் சேர்ந்து கொண்டால் அவரை மட்டும் கண்டு பிடித்து யாரும் குறை சொல்ல முடியாது. அந்தச் சௌகரியம் கான்ஸ்டபிள் மாணிக்கமாக நடிக்கும் பிரேம் நஸீருக்கு இந்தப் படத்தில் கிடைக்கிறது: எந்தச் சந்தர்ப்பத்திலும் தனியாகத் தம் உணர்ச்சியைக் காட்ட வேண்டிய அவசியம் நேராதது அவரது பாக்கியந்தான்!

ஹாஸ்ய நடிகர் கே. சாரங்கபாணிக்கு இந்தப் படத்தில் சிரிப்பதற்கே சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

வி. கே. ராமசாமியின் பாகம், அவருக்குப் பல படங்களில் நன்கு பழக்கமான பாகம்.

# வாழ்க மணமக்கள்



புதுதில்லி திரு ஜகதீசன் அவர்களின் புதல்வி திருமதி லக்ஷ்மிக்கும் திரு சந்தானம் அவர்களுக்கும் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



மதுரை பாங்கியின் டைரக்டர் ஸ்ரீ அண்ணாமலை செட்டியார் புதல்வி திருமதி வள்ளியம்மைக்கும் திரு அண்ணாமலைக்கும் திருமணம் விமரிசையாக நடந்தது.



இலங்கை திரு வயி. இராமையா அவர்களுக்கும் திருமதி காந்திமதிக்கும் கொழும்பில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



சதர்ன் ஷிப்பிங் கார்ப்பரேஷனின் மானேஜிங் டைரக்டர் திரு பி. கே. ராமன் அவர்களின் புதல்வி திருமதி கமலத்தைத் திரு ராமசந்திரன் மணந்து கொண்டார்.



திரு எ... எஸ். சேஷாத்திரி அய்யங்கார் புதல்வர் திரு ராமநாதனுக்கும் திருமதி பரிமளவல்லிக்கும் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.



டாக்டர் பி. கிருஷ்ணசாமி அவர்களின் புதல்வி திருமதி நிர்மலாவுக்கும் திரு சுந்தரம் அவர்களுக்கும் சமீபத்தில் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.



பைலட் பேனா கம்பெனியின் பிரதம
கணக்கர் திரு வி. பி. நாராயணசாமிக்
கும் திருமதி சீதாலக்ஷ்மிக்கும் சென்னையில்
திருமணம் சிறப்பாக நடைபெற்றது.



பிரபல நாடகாசிரியர் திரு என். வி.
நடராஜனுக்கும் திருமதி லலிதாவுக்கும்
திருமணம் சமீபத்தில் வெகு சிறப்பாக
நடந்தேறியது.



திரு எம். எஸ். கந்தசாமி அவர்களின்
குமாரர் திரு எம். கே. சுப்பிரமணியத்துக்
கும் திருமதி மீனாக்ஷி பி.ஏ.க்கும் பிப்ரவரி
2ந் தேதி விவாகம் சிறப்பாக நடந்தது.



புதுவை ராஜ்ய சட்ட இலாகா காரிய
தரிசி திரு பி. ஆர். சக்கரவர்த்தியின்
புதல்வர் திரு வி. ராஜகோபாலன் திருமதி
லக்ஷ்மியை விவாகம் செய்து கொண்டார்.



தென்னிந்திய ரயில்வே டிராப்ட்ஸ்மன்
திரு வி. பலராமன் திருமதி லக்ஷ்மி கமலா
சனுவை மணம் புரிந்து கொண்டார்.



வருமானவரி இலாகாவைச் சேர்ந்த திரு
ஜெ. ஜெகநாதன் அவர்களின் புதல்வர்
திரு துரைராஜ் திருமதி பத்மாவைத் திரு
மணம் புரிந்து கொண்டார்.





## சதாபிஷேக மணி விழா

மாயூரம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியின் சதாபிஷேக மணி விழா பிப்ரவரி மாதம் 8, 9, 10 தேதிகளில் சிறப்பாக நடைபெற்றது. தமிழ் நாட்டுக்கே பெருமை தரும் வகையில் சிறந்த கலை விழாவாகவும் திருவிழாவாகவும் காட்சி தந்தது.

டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் தலைமையில் முனிசிபல் உயர்நிலைப் பள்ளி சதாபிஷேக மணிவிழா நடந்தேறியது. பள்ளியின் முன்னாள் ஆசிரியர் திரு கிருஷ்ணஸ்வாமி ஐயர், பேராசிரியர் கல்கி, பள்ளியின் தற்போதையத் தலைமை ஆசிரியரான திரு சேஷகிரி அய்யர் ஆகியோரது திருவுருவப்படங்கள் திறந்து வைக்கப்பட்டன.

மூன்று நாட்களும் மாலையில் சிறந்த நாடகங்கள் நடைபெற்றன. மாயூரம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளி மேலும் மேலும் சிறப்பாக மாணவர் சமூகத்துக்குப் பணியாற்றிப் புகழுடைய வாழ்த்துகிறோம்.

இந்த விழாக் காட்சிகள் சிலவற்றைப் படங்களில் காணலாம்: 1. விழாவுக்கு வந்து சிறப்பித்திருந்த பிரமுகர்களின் பெருங்கூட்டம். 2. பேராசிரியர் கல்கி அவர்களின் படத்தை மாயூர உயர்நிலைப் பள்ளி பழைய மாணவர் திரு துமிலன் அவர்கள் திறந்து வைக்கிறார். 3. நந்தனார் நாடகத்தில் ஒரு காட்சி. 4. டாக்டர் ஸி.பி. ராமஸ்வாமி அய்யர் தலைமையுரை நிகழ்த்துகிறார். அப்பொழுது விழாவுக்கு வந்திருந்த பெண்கள் கூட்டத்தில் ஒரு பகுதி. போட்டோ–ராமகிருஷ்ணா







## வெற்றி நிச்சயம்!

தலைவர் 'ராஜாஜி' அவர்களின் மொழிக் கிளர்ச்சியை ஆதரிக்கிறேன். நான் கல்கி இதழ்களின் மூலம் தமிழ் மக்களின் எண்ணத்தையும், ஆர்வத்தையும் கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தேன். தமிழ் மக்கள் ராஜாஜியின் தலைமையின்கீழ் இக்கிளர்ச்சியில் வெற்றி காண்பார்கள் என்பது திண்ணம்.

முதலில் பாகிஸ்தானைப் பிரித்துக் கொடுத்து விடு என்று சொன்னார் ராஜாஜி. கேட்கவில்லை. பலவித நஷ்டங்கள் ஏற்பட்ட பிறகு கொடுக்க நேர்ந்தது. ஆதலால் பின்னால் நடப்பதை முன்னால் அறிவிக்கும் தீர்க்க தரிசனம் வாய்ந்த தலைவர் 'ராஜாஜி.'

இங்கு 'உருது' மொழியை ஆட்சி மொழியாக்கச் சர்க்கார் முயன்றனர், முடியவில்லை. இங்கு ஆங்கிலமே ஆட்சிமொழியாக இருக்கிறது. இதையாவது சர்க்கார் உணர்ந்து நடப்பார்களாக.

காலிஸ்பூர்
கிழக்கு பாகிஸ்தான் — கு. ஆண்டித் தேவர்
11—2—'58

## வறுமை தீர வழி உண்டா?

இலங்கைத் தோட்டப் பகுதிகளில் படித்த வாலிபர்கள் வேலையில்லாமல் திண்டாடும் நிலைமை இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. நாங்கள் எங்கு போய் வேலை கேட்டாலும் "நீ இந்த நாட்டுப் பிரஜையா?" என்று கேட்கிறார்கள். எங்கள் வறுமையைத் தீர்க்கக் கூலி வேலை கேட்டாலும் "நீங்கள் எல்லாம் படித்தவர்கள். உங்களுக்குத் தோட்டங்களில் வேலை தர முடியாது" என்று தோட்ட நிர்வாகிகள் மறுக்கிறார்கள். நாங்களோ, அரசியல் அனாதைகளாக, ஓட்டு உரிமைகள் பறிக்கப்பட்டு, யாரிடமும் எதையும் கூற இயலாத நிலையில் இருக்கிறோம். எங்களுக்கு விமோசனம் ஏற்படும் வகையில் இலங்கை இந்தியத் தலைவர்கள் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா?

இலங்கை
10—2—'58 — திண்டாடும் இந்திய வாலிபன்

## பம்பாய் வானொலி

பிப்ரவரி 16உ 'கல்கி'யில் 'ஆடல்பாடல்' பகுதியில் வெளியான கந்தர்வ உலகத்தைப் படித்தபோது பம்பாயில் நடந்த சங்கீதக் கச்சேரிகளை, நேரில் கேட்பதுபோல் இருந்தது. இவ்வளவு வித்வான்களையும் அழைத்துச் சிறப்பாக நடத்திய ஷண்முகானந்த சபையார் ஏன் ரேடியோ நிலையத்தாரை அஞ்சல் செய்யச் சொல்லவில்லை? பம்பாயிலேயே நிலையம் இருக்கும்போது, அஞ்சல் செய்வதில் கஷ்டம் எதுவும் இல்லையே?

போன வருடம் "சங்கீதக் கச்சேரிகளை ஏன் அஞ்சல் செய்யவில்லை?" என்று ரேடியோ நிலையத்தாருக்கு எழுதிக் கேட்டதில், 'அடுத்த வருடம் அஞ்சல் செய்யப் பார்க்கிறோம்' என்று எழுதி விட்டார்கள். தென் இந்தியப் பாடகர்கள், வட இந்தியாவில் பாடுவதை, தென் இந்தியர்கள் ரேடியோவில் கூடக் கேட்க முடியாமல் இருப்பது வருந்தத் தக்க விஷயம். அடுத்த வருடமாவது, ரேடியோ நிலையத்தாரும், சபைக்காரர்களும் சேர்ந்து அஞ்சல் செய்ய ஏற்பாடுகள் செய்வார்களென நினைக்கிறேன்.

மேட்டூர்
18—2—'58 — லக்ஷ்மி ரமணி

## சவுக்கடி உறைக்குமா?

கல்கி 16-2-58 இதழ் தலையங்கம் தமிழ் நாட்டில் தற்போது மிராசுதார்களுக்கும் விவசாயிகளுக்கும் உள்ள சச்சரவையும், அதைத் தீர்ப்பதற்கென்று அரசாங்கத்தார் மேன் மேலும் உபயோகமற்ற சட்டங்களை அமுலுக்குக் கொண்டு வருவதையும் நன்கு விளக்குகிறது. இத்தலையங்கமாகிய சவுக்கடி சென்னை அரசாங்கக் குதிரைக்கு உறைக்குமா?

தங்கவரம்
14-2-58 — இரா. திருமலைசாமி

## சர்க்கார் முன்வருமா?!

கண்ட்ரோல் இல்லாமல் ஜீவிக்கவே முடியாது எனச் சொல்லிக் கொண்டுதான் இருந்தார்கள். அதைத் தைரியமாய் எதிர்த்து, பிறமாகாணங்களுக்கு வழிகாட்டிய பெருமை சென்னையைச் சேர்ந்தது. அதே போல் நிலச் சீர்திருத்தச் சட்டங்களை இரண்டு வருஷங்களுக்கு ஒத்திப் போட்டால் ஒன்றும் முழுகி விடாது. சர்க்கார் தைரியமாகவும் விவேகமாகவும் இதைச் செய்ய முன்வருவார்களா?

சேலம்
18—2—'58 — சுகவனம்

## இலக்கியச் செல்வம்

'இலக்கியச் செல்வம்' என்ற கட்டுரைத் தொடரைக் கிரமமாகப் படித்து வருகிறேன். ஈழத்திலே பல மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் அக் கட்டுரைகளைச் சிந்தனை விருந்தாகப் போற்றிவருகின்றனர். மேல்நாட்டில் உதித்த கவிஞர்களின் இதய ஊற்றுக்களை, மதுரத் தமிழ் நடையிலே பிழிந்து ஊட்டவல்ல ஓர் எழுத்துச் சிற்பி தமிழ் நாட்டில் இன்றுதான் தோன்றியுள்ளார் என்றால் மிகையாகாது.

ரஸிகமணி டி. கே. சி. அனேகமாகத் தமிழ் இலக்கியங்களில் உள்ள சுவை பழுதிலேயே தமிழுலகத்துக்கு ஊட்டினார். அவர் தந்த பாத்திரங்களிலே சோறும் கறியும் சுவை மிகுந்த முக்கனிகளும் நிறைந்திருந்தன. பேராசிரியர் திரு அ. சீநிவாசராகவன் தரும் பாத்திரங்களிலோ வெவ்வேறு நாட்டு உண்டி வகைகள் முறை முறையாகத் தமிழ்ப் பண்புக் கிசைய அமைந்து உருவாகி யிருக்கின்றன. ராபர்ட் ப்ரௌனிங், வொர்ட்ஸ் வொர்த்,

# மேஜை



தாகூர், உமர்கயாம் முதலிய சாகாவரம் பெற்ற உலகக் கவிஞர்களின் சிந்தனைச் சுடர்களை அழகுறக் கதலியிலேத் தொன்னை களிலே வார்த்துத் தந்து வருகின்றார்.

பிப்ரவரி 9ல் வெளிவந்த 'பாலைகள் மகா நாடு' வெகு நயமாக அமைந்துள்ளது. அவரது எழுத்தோவியங்களைப் படித்த பிறகு இவ்வடிகள் எனது சிந்தனையில் உதித்தன.

குளிரு நாட்டின் குயில்கள் கூவும்
குதலை மொழிகள் அள்ளி
வளருமெங்கள் தமிழினுள்ளே
வார்த்துவிடுவோந் தெள்ளி.

கொழும்பு
18-2-'5ƃ

சோ. வேலாயுத பிள்ளை

## விரும்பிப் படிக்கிறோம்

கல்கி இதழில் வரும் 'வள்ளுவர் வாசகத்தை'யும் ஸ்ரீமத் சங்கராச்சாரியார் அவர்களின் மணி மொழிகளையும் சிறுவர்களாகிய நாங்கள் விரும்பிப் படிக்கிறோம். மேற் சொன்ன இரு பகுதிகளும், சிறுவர்களின் உள்ளத்தில் நன்றாகப் பதியுமானால், எதிர் காலத்தில் அவர்கள் வாழ்வு சிறந்து விளங்கும்! இவைபோன்ற சிறந்த பகுதிகளை மேன்மேலும் வெளியிடுமாறு வேண்டுகிறேன்.

சிதம்பரம்
18—2—'58

கே. ஏ. முகம்மது அலி

## கவனிப்பார்களா?

ஈரோடிலிருந்து நேராக சாம்ராஜ் நகரத்துக்கு பஸ் போக்குவரத்து இல்லை. ஈரோடிலிருந்து சத்திமங்கலம் வந்து சாம்ராஜ் நகரத்துக்கு வேறு பஸ்ஸில் பிரயாணம் செய்ய வேண்டும். ஆனால் சத்தி மங்கலத்திலிருந்து சாம்ராஜ் நகரத்துக்கு டிக்கெட் எளிதில் கிடைப்பதில்லை. இதனால் மக்களுக்கு ரொம்ப அசௌகரியமாய் இருக்கிறது. கோயமுத்தூரிலிருந்து பஸ் வருவதால் எல்லோரும் கோயமுத்தூரிலேயே ரிசர்வ் செய்து கொள்ளுகிறார்கள். ஆகையால் சாம்ராஜ் நகரத்துக்கு ஈரோடிலிருந்து நேரடியாக பஸ் சர்வீஸ் இருந்தால் மிகவும் சௌகரியமாய் இருக்கும். பொது ஜனங்களுக்குள்ள இக்குறைகளைப் பஸ் முதலாளிகள் கவனிப்பார்கள் என நினைக்கிறேன்.

ஈரோடு
18—2—'58

ஏ. அம்பி

## மக்களின் குரல்

தமிழ் நாடு தந்த தமிழ்ச் செல்வமாம் திரு ராஜாஜி தம் தள்ளாத வயதிலும் வாடாது வாதிட்டு வரும் பிரச்னையை ஆட்சியில் உள்ளோர் அறிந்தபாடில்லை. ஆனாலும் மக்கள் புரிந்து கொண்டனர். அதனால்தான் ராஜாஜி அவர்கள் பேசிய மதுரைக் கூட்டத்தில் 'இந்தி ஒழிக! ராஜாஜி நீடூழி வாழ்க!' என்று பல்லாயிரக்கணக்கான குரல்கள் எழுந்தன போதும்.

திருவாரூர்
8-2-58

ஊட்டி உலகநாதன்

## கப்பி போடாததால் கஷ்டம்

தஞ்சை ஜில்லா நன்னிலத்திலிருந்து நாச்சியார் கோயிலுக்குப் போகும் ரஸ்தா மொத்தம் பன்னிரண்டு மைல். இதில் ஒரு மைல் நாச்சியார் கோவிலிலிருந்து மாத்தூர் கிராமம் வரை நீண்ட நாட்களாகக் கப்பி ரோடாகவே இருக்கிறது. பாக்கி பதினொரு மைலைக் கப்பி போட ஆரம்பித்துச் சுமார் பதினாறு வருஷங்களுக்குமேலாகியும் மாத்தூர் கிராமத்திலிருந்து கூகூர் கிராமம் வரை கப்பி போடப்படாமல் நீண்ட நாட்களாக மண் சாலையாகவே இருக்கிறது.

இதற்குப் பிறகு இதே ஜில்லாவில் கப்பி போட ஆரம்பித்துப் பல சாலைகள் கப்பி பூர்த்தியாகி, பஸ் போக்குவரத்து ஆரம்பிக்கும் நிலையில் இருக்கின்றன. மேற்படி சாலை தஞ்சை ஜில்லாவில் நாகப்பட்டினம், நன்னிலம், கும்பகோணம், பாபநாசம், தஞ்சை

முதலான ஐந்து தாலூக்காக்களின் தலைநகரங்களை ஜில்லா தலைநகருடன் ஒன்று சேர்க்கும் முக்கியமான சாலையாக இருந்தும், இரண்டு மைல் தூரம் நீண்ட நாட்களாகப் பாக்கியிருக்கும் நிலை கண்டு பொதுமக்கள் எவ்வளவு வருந்த நேரிடுகிறது என்பதைச் சொல்லத் தேவையில்லை. மேற்படி இரண்டு மைல் தூரத்துக்கு உடனடியாகக் கப்பி போடச் செய்தால் பொதுமக்களுக்கு மிக்க உதவியாக இருக்கும்.

நன்னிலம்
7-2-58 வி. கே. வாஞ்சிநாதய்யர்

### ஊன்றுகோலும் ஒடிந்தது

நமதுநாட்டின் சாபக்கேடோ என்னவோ! பெரிய தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளை முதலில் கேட்காமல், ஏழை மக்களிடம் பரீட்சை பார்த்து அவர்கள் கஷ்டம் அனுபவித்த பின்னர், தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களிலுள்ள உண்மையை உணர்ந்து கொள்கின்றனர். பிறகு அதன்படி நடப்பது ஒரு வழக்கமாகி விட்டது.

கண்ணின் வெளிச்சம் மங்கி வருகிறது என்றார்கள் தேசவாளிகள். உடனே கண்ணைக் குணப்படுத்தாமல் 'ரிபேட்' என்ற ஊன்றுகோல் அளித்தார்கள். அந்த ஊன்றுகோலினால் மெதுவாக நடந்து வரும் பொழுது ஒன்பது நயாபைசாவிலிருந்து ஆறுநயாபைசாவாக ஒடித்து விட்டார்கள். இன்னும் கொஞ்ச நாட்களில் ஒடிந்த ஊன்றுகோலையும் பிடுங்கி விடுவேன் என்று சொல்கிறார்கள்!

நிரந்தரப் பரிகாரத்துக்கு வழி என்ன? ராஜாஜி அவர்களின் கைத்தறித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தால் கைத்தறியாளர்களுக்குக் கண் கொடுத்தது போலாகும்.

தாராபுரம்புதூர்
11-2-58 டி. வி. ராஜகோபாலன்

### அவசரம் ஏன்?

இந்தியா விவசாயிகள் மிகுந்த நாடு. நிலச் சொந்தக்காரர்களுக்கும், நிலத்தைப் பண்படுத்தி உழுபவர்களுக்கும் இடையே முரண்பாடுகளின்றி ஒற்றுமை நிலவினால் தான் உணவு உற்பத்தி பெருக வாய்ப்பு உண்டு. இருவருக்குமிடையில் ஒற்றுமை உண்டாக்க முயன்று இதுவரையில் சென்னை சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வந்துள்ள சாகுபடி உரிமை, வார நிர்ணயம் போன்ற சட்டங்களால் நன்மைகளுக்குப் பதில் அநேக தீமைகளே ஏற்பட்டுள்ளதை இன்று நாம் காணலாம்.

உண்மை நிலை இவ்வாறு இருக்கும்போது சமுதாய நியாயம் என்று சொல்லி நில உடைமைக்கு வரம்பு நிர்ணயம் செய்ய அரசியலார் முயல்வது தற்காலத்துக்கு உகந்தது அல்ல. ஏனெனில் மற்றத் தொழில் உடைமைகளுக்கு அதிக பட்ச வரம்பு நிர்ணயிக்கப்படாமலிருக்கையில், நில உடைமைக்கு மட்டும் அதிக பட்சவரம்பு நிர்ணயம் செய்வது பாரபட்சமே ஆகும்.

தமிழ்நாட்டில் பத்து வேலிகளுக்கு மேல் நிலம் உடையவர்கள் மிகவும் குறைவு. விவசாயத்துறையில் நம் நாடு பின்தங்கி இருப்ப

தற்கு முக்கிய காரணம் நில உடைமை துண்டு துண்டாக இருப்பதே. இந் நிலையில் நிலஉடைமைக்கு அதிகபட்ச வரம்பு நிர்ணயிப்பதால் கிராமங்களிலுள்ள நிலமற்ற விவசாயிகளுக் கெல்லாம் நிலம் கிடைப்பது சந்தேகம். இது வரை தரிசாகக் கிடக்கும் நிலங்களை நிலமற்றோருக்குச் சர்க்கார் விநியோகம் செய்து ஓரளவு உணவு உற்பத்தி பெருகச் செய்யலாம். தற்போது நில உடைமைக்கு அதிகபட்ச வரம்பு நிர்ணயம் செய்தால் கட்டாயம் உணவு உற்பத்தி பாதிக்கப்படும் என்பதை. ''புதிய சட்டமும், பயிர்த் தொழிலும்'' என்ற தலைப்பில் 16-2-58 கல்கி இதழில் வெளிவந்துள்ள தலையங்கத்தையேனும் அரசாங்கம் கவனித்து ஆவன செய்யுமா?

அதிராம் பட்டணம்
17-2-58

அ. உலகநாதன்

## ஒரு விண்ணப்பம்

திருச்சி ஜில்லா குளித்தலை தாலூக்காவில் இருக்கும் மருங்காபுரி மக்களும், அதற்குட்பட்ட கிராமங்களைச் சேர்ந்தவர்களும் பஸ் வசதி இல்லாமல் தவிக்கிறார்கள். அவர்கள் திருச்சி செல்ல வேண்டுமானால் இரண்டு மைல் நடந்து பஸ் ஏற வேண்டும். மணப்பாறை போகவேண்டுமானால் நாலு மைல் நடக்கவேண்டும். ஆகையால் மருங்காபுரி, கல்லாமேடு வழியாக மணப்பாறைக்கு ஒரு பஸ் சென்றால் மக்களுக்கு மிகவும் வசதியாக இருக்கும். தாமதமின்றிச் சர்க்கார் இதற்கு ஆவன செய்ய வேண்டுகிறேன்.

பழுவஞ்சி
16-2-58

பி. ஆர். ஸ்ரீநிவாசன்

## அநாதைக் கால்வாய்!

உணவுப் பெருக்குத் திட்டம் ஏட்டளவில் இருக்கிறதேயன்றிச் செயல் முறையில் காணோம். புதிய புதிய பாசனத் திட்டம் போடுவதிலும், நிலத்தைச் சிறு சிறு துண்டாக்குவதிலும் அதிகாரிகள் முனைந்துள்ளனர். ஆனால் பழைய கால்வாய் பல ஆண்டுகளாக வெட்டப்படாமல் தூர்ந்து போய், விளைவு குறைந்து வருவதை யாரும் சிந்தித்ததாகத் தெரியவில்லை.

அமுல் நடத்த முடியாத பத்தாம்பசலி குடிமராமத்துச் சட்டத்தைத் திருத்தம் செய்து தற்போது உள்ள நிலைமைக்கு ஏற்றவாறு பயன்படுத்தி விளைவைப் பெருக்கினால் 25 சதம் உணவுப் பெருக்கம் ஏற்படுமென்பதில் ஐயமில்லை. புதிதாய்த் தோன்றியுள்ள விவசாயிகள் நியாய வாரச் சட்டத்தில் பெரும் பங்கு பெறும் குடியானவர்கள் கால்வாய் வெட்ட வழியைக் காணோம். சிறு நிலச் சுவான்தார்கள் கால்வாய் வெட்ட முடியாமல் பெரிதும் துன்பமடைகிறார்கள்.

கால்வாய் ஆயிரம் ஏக்கருக்கு மேல் பாசனமுடையதாயிருந்தால், அரசாங்கம் அதை வெட்டிக் கொடுக்க வேண்டுமென்று, விதி இருந்தும், அது அமுல் நடத்தப்படுவதில்லை.

இவ்விஷயமாக மகஜர்கள் அனுப்பினாலும் கவனிப்பார் இல்லை. இன்று குடியானவர்களுக்கும் நிலச்சுவான்தார்களுக்குமுள்ள உறவு சீர்கெட்டிருக்கும்போது, கால்வாயைத் துப்புரவு செய்து கொடுக்க வேண்டியது சர்க்கார் கடமையல்லவா? இந்த நிலைமையில் மூன்றும் போகம் பயிரிட்டு உணவுப் பொருளைப் பெருக்கி விடலாமென்று நினைப்பது விந்தையாக இருக்கிறது.

காவேரிப் பிரிவு பூவேந்திரன் வாய்க்கால் சுமார் இரண்டாயிரம் ஏக்கர் பாசனமுள்ளது. ஏழு மைல் தூரம் கடந்து பாயவேண்டிய நீண்ட வாய்க்கால். பத்து ஆண்டு காலமாக இந்தக் கால்வாயை வெட்டவே இல்லை.

இவ் விவரங்களை மக்கள் பிரதிநிதிகளின் சட்டசபை அங்கத்தினர்கள் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

ஆனவேலி
17-2-58

மு. வைத்தியநாதன்

## "பொருளாதாரமும் பொதுமக்களும்"

திரு க. சந்தானத்தின் ''பொருளாதாரமும் பொதுமக்களும்'' என்ற வரிசையில் வரும் தொடர் கட்டுரைகளைப் படித்துப் பயன்பெற முடிகிறது. மிக மிகப் பயனுள்ள முயற்சி. மாணவர்கள் புரிந்துகொள்ளுமாறு ''பெரிய விஷயங்கள்'' நல்ல எளிய நடையில் அமைந்திருக்கின்றன.

புதுக்கோட்டை
16—2—58

ஸ்ரீ நரஸிம்மன்

*The following particulars regarding the ownership of the 'KALKI' the weekly newspaper, are published as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.*

**FORM IV**

1. *Place of Publication*
   Madras
2. *Periodicity of its Publication*
   Weekly
3. *Name of Printer, Publisher and Editor*
   T. Sadasivam

   *Nationality.*
   Indian

   *Address*
   20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10
4. *Name and address of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital*
   Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Srimathi M. S. Subbulakshmi, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri R. Ananthanarayanan, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri K. Rajendran, 62, Fourth Main Road, Gandhi Nagar, Madras-20. Sri M. P. Kalyanasundaram, 3, WaterWorks Colony Madras-10. Sri V. Vaidyanathan 15, Ramanathan Street, Thiagarayanagar Madras-17.

*1-3-58*

T. Sadasivam
*Publisher*

# வள்ளுவர் வாசகம்

## ராஜாஜி

## 19

துயரப்படும் மக்களுக்கு இனிய சொற்கள் சொல்லித் துயரம் தீர்த்தவன் தன் வாழ்க்கையில் வறுமையால் கஷ்டப்பட மாட்டான். உலகம் அவன் வறுமையைக் கண்டு சும்மா இராது. எந்த விதத்திலாவது அவனை ஆதரித்துத் துன்பப்படாமல் செய்யும்.

> துன்புறூஉம் துவ்வாமை
> இல்லாகும் யார்மாட்டும்
> இன்புறூஉம் இன்சொல வர்க்கு

(துவ்வாமை-தரித்திரம்)

* * *

> இன்சொல் இனிதுஈன்றல்
> காண்பான் எவன்கொலோ
> வன்சொல் வழங்கு வது.

இனிய சொற்கள் சொல்லி அதன் பயனைப் பிறர் அடையும் இன்பத்தைக் கண்ட பின்னும் மக்கள் என்ன காரணத்தைக் கொண்டு வன்சொல் பேசுகிறார்கள் என்று முனிவர் வியப்படைந்து இந்தக் குறளில் கேட்கிறார். ஒரு நல்ல பயனையும் தராத கடுஞ் சொற்கள் பேசுவது மடமையல்லவா என்று கேட்கிறார். 'எவன்கொலோ' என்றால் 'எதற்காகவோ'.

வாழ்க்கையில் நாமே கண்டிருக்கிறோம், பிறருடைய இன்சொல்லினால் நமக்குள் தோன்றும் மகிழ்ச்சியை. அந்த மகிழ்ச்சியை அநுபவித்த பின்னும், என்ன மடமை, நாம் அதை மறந்து விட்டுக் கடுஞ் சொற்களைப் பேசுவது!

இந்தக் குறளைப் படித்தபின், பேச்சு இனிய பேச்சாக இருக்க வேண்டும் என்கிற நியதியைப் பற்றி எவ்வித சந்தேகமும் இருக்க முடியாது. இதுவே வள்ளுவருடைய தனி நடை.

இன்னும் சொல்லுகிறார்:

> இனிய உளவாக
> இன்னாத கூறல்
> கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

இன்சொல்லும் பேசலாம், கடுஞ் சொல்லும் பேசலாம். மகிழ்ச்சி தரும் இனிய சொல்லை விட்டு விட்டு நோவு தரும் கடுஞ் சொல்லைப் பேசுதலுக்கு என்ன உவமை எடுத்துக் காட்டலாம்? மரத்தில் பழுத்துத் தேன் நிறைந்த பழம் தொங்குகிறது. அதை விட்டுவிட்டுத் துவர்க்கும் காயை யாராவது பறித்துத் தின்பார்களா? அதைப்போல் ஆகும், கடுஞ் சொல் பேசுவது என்கிறார் வள்ளுவர். இதற்கு மேல் என்ன சொல்லி நம்மைத் திருத்த முடியும்!

பறித்துப் பயன்படுத்திக் கொள்ளத் தயாராகத் தொங்குகிறது பழம். அதைப் போலவே இன்சொற்களும் நம் நாவினுள் பயன்படுத்திக் கொள்ளத் தயாராக இருக்கின்றன. அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளாமல் விட்டு விடுகிறோம்.

நாம் பேசும் சொற்கள் நமக்கே பயன் தருகின்றன. இன்சொற்கள் நமக்கு இனிய பயன் தருகின்றன. கடுஞ் சொற்கள் நமக்குக் கெட்ட பயனைத் தருகின்றன. நாம் பேசும் பேச்சு, பிறரை நோவச் செய்வதன்றி நமக்கே தீய பயனைத் தருகிறது. இதுவே கனியிருப்பக் காய் கவர்ந்து தின்னும் உவமானம்.

தரத்திற்கும்
உறுதிக்கும்
நிகரற்றது

ஹத்திபாயின்




ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
பாத்திரங்கள்

எப்பொழுதும் பிரகாசத்துடன் நீடித்து உழைப்பவை

* * *

ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்

122, கன்ஸரா சால், பம்பாய் 2.



# பாவை விளக்கு

அத்தியாயம் 20

## உழைப்பும் உல்லாசமும்

அகிலன்

நிழலின் அருமை வெய்யிலில், அன்பின் அருமை பிரிவில், உல்லாசத்தின் அருமை உழைப்பில் தெரியும்.

உமாவைத்தில்லிக்கு அனுப்பி வைத்த தணிகாசலத்துக்கு அவளிடமிருந்து தகவல் வரும் வரையில் உறக்கமில்லை. உறங்கும் போதெல்லாம் பயங்கரக் கனவுகள் கண்டு விழித்தான். மனப்பிராந்தியே கனவுகளாக மாறின:—

'தில்லிக்கு அவள் போய்ச்சேர்ந்தபோது பேராசிரியர் அங்கு இல்லை. வரவேண்டாம் என்று உமாவுக்குத் தந்தி கொடுத்த கையோடு வேற்றூருக்குக் கிளம்பி விட்டார். புது தில்லி ரயிலடியில் அன்றைக்கு ஒரு தமிழர் முகத்தைக் கூடக் காண முடியவில்லை. அனைவருமே வேற்று மொழி பேசும் வேற்று மனிதர்கள். ஒவ்வொரு முகமாகப் பார்த்து ஏமாற்ற மடைகிறாள். வாடகைக் காரை வைத்துக் கொண்டு அவரது இருப்பிடத்தைக் கண்டுபிடிப்பதற்குள் பொழுது சாய்ந்து விட்டது. அங்கே அவர் இருந்தால்தான் ரயிலடிக்கு வந்திருப்பாரே? பரிதாபமாய்க் கதறி அழுகிறாள். கார் டிரைவர் அவளை வேறு எங்கோ அழைத்துச் செல்கிறான். பழைய தில்லியில் காலிகளின் கூட்டம் நிறைந்த ஒரு தெருவில்.... ஐயோ, உமா!'

தணிகாசலத்தின் மேற்கண்ட கனவுகள்பொய்யாகி விட்டன. மூன்றாவது நாள் இரவு உமாவின் அவசரத் தந்தி வந்தது: 'பத்திரமாய் வந்து சேர்ந்தேன்; அப்பா அழைத்துச் சென்றார்.'



'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டான் தணிகாசலம். மறுநாள் தொடங்கி அவனுடைய வேலையில் சுறுசுறுப்பு பிறந்தது.

தொழிலகத்தின் வெளி அறையில் வெள்ளை உடைகளைக் கழற்றி வைத்து விட்டு, காக்கிக் கால் சராயை மாட்டிக் கொண்டான். இயந்திரங்களில் வழியும் எண்ணெய், இடுப்பின் மேல் படிந்த அழுக்கு, கரிப் புகை உமிழும் தூசிக்காற்று இவ்வளவும் அவனுக்கு உற்சாகம் தந்தன. அடுத்தாற்போல், தொழிற்சாலையின் மறுபிரிவான மோட்டார் பழுது பார்க்கும் கொட்டகையிலிருந்து, 'டங், டணார், டங்!' கென்று சம்மட்டிச் சத்தம் வந்து கொண்டிருந்தது. கால்களில் முரட்டுச் செருப்புக்கள் அணிந்து கொண்டிருந்ததால், வழியில் கிடந்த உலோகத் தகடுகளையும் இரும்புக் கம்பிகளையும் மிதித்துக் கொண்டே தன் இயந்திரத்துக்குச் சென்றான்.

உற்பத்தி செய்யப் பெற்ற விவசாயக் கருவிகள் ஒரு மூலையில் அடுக்கடுக்காய்க் குவிக்கப் பெற்றிருந்தன. ''உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்'' என்று முணுமுணுத்

துக் கொண்டே தன் இயந்திரத்தை அவன் முடுக்கி விட்டான். இரும்புச் சக்கரங்கள் இன்ப கீதம் பாடின.

''அண்ணாவுக்கு இன்றைக்கு ஆனந்தம் பிறந்திருக்கிறது!'' என்றான் அருகே இருந்த தொழிலாளி. ''நேற்றெல்லாம் என்னவோ போல் இருந்தீர்களே?''

''இனி என்றைக்கும் ஆனந்தந்தான்'' என்றான் தணிகாசலம்.

தணிகாசலத்திடம் என்ன சக்தி இருந்ததோ தெரியவில்லை. சக தொழிலாளர்கள் அவனிடம் சகோதர வாஞ்சை செலுத்தினார்கள். அதிபரும் அவனிடம் அன்போடு நடந்துகொண்டார். அவன் கடமையை உணர்ந்த கண்டிப்பான தொழிலாளி. உழைத்த நேரம் போக அங்கே ஓய்வுக்கும் உல்லாசத்துக்கும் ஒரு சங்கம் அமைத்திருந்தார்கள். பத்திரிகை - புத்தகம் படித்தல், அரட்டை அடித்தல், சிற்றுண்டி சாப்பிடுதல் இவற்றுக்காகவே ஒரு தாழ்வாரம் ஒதுக்கப்பட்டிருந்தது. அது ஒரு தொழிற் குடும்பம். திரும்பிய பக்கமெல்லாம் அவனை அங்கு மலர்ந்த முகம் வரவேற்கும். அதனால் பிறருக்கு இல்லாத எந்தச் சலுகைகளையும் அவன் அங்கு பெற்றுக் கொள்ளவில்லை. பிடிவாதமாகத் தன்னுடைய நாணயத்தையும் அன்புள்ளத்தையும் பாதுகாத்து வந்தான்.



உமா ஊருக்குச் சென்று இரண்டு மாதங்களாயின. மாலையில் வேலை முடிந்த பிறகு, தொழிற் சங்க விழாவுக்காக நாடக ஒத்திகையைக் கவனித்து விட்டு, இருமிக் கொண்டே வீட்டுக்கு வந்து சேர்ந்தான். அப்போது இரவு பத்து மணி. கௌரி தணிகாசலத்துக்காக வீட்டில் உறங்காமல் காத்திருந்தாள். பாட்டிக்கும் பேரனுக்கும் அது இரண்டாஞ் சாமம்.

''நான் தவறாமல் இப்படி நேரங் கழித்து வந்தால்?...'' என்று இழுத்துக் கொண்டே பரிமாறப் போனாள் கௌரி.

''ஐந்து நிமிஷம் பொறு; கடிதங்களைப் படித்து விட்டு வருகிறேன்.''

''நன்றாகப் படியுங்கள்! நீங்கள் பதில் எழுதவில்லை என்று உங்களை ஐந்து பக்கம் திட்டி ஒரு ரசிகர் எழுதியிருக்கிறார்'' என்றாள் கௌரி.

இருமிக் கொண்டே கடிதங்களைப் படித்தான் தணிகாசலம். தமிழ் நாட்டு வாசக உலகத்தில் பகுத்தறிந்து படிக்கும் புதிய விழிப்பு தோன்றியிருந்தது. கடிதங்களில் தங்கள் அன்பை அவர்கள் கொட்டியிருந்தார்கள்.

சாப்பாடு முடிந்தவுடன் மேஜைக்கு வந்து, அந்தக் கோபக்காரருக்கு முதலில் பதில் எழுதினான். ஒரு மாதமாக அவனால் கடிதங்களைக் கவனிக்க முடியவில்லை. அறுபது எழுபது கடிதங்கள் பதிலுக்குக் காத்திருந்தன. அவைகளைப் பார்த்து வருத்தத்துடன் சிரித்தான்.

''என்ன சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் கௌரி.

''அன்புக்குப் பதில் சொல்லா விட்டால் அதுவே வெறுப்பாக மாறி விடுகிறது. நான் இரும்புத் தொழிலாளி என்பது என் வாசகர்களுக்குத் தெரியுமா? எனக்கு நேரமுமில்லை; பணமுமில்லை,—நாளைக்குத் தபால் செலவுக்கு ஒரு ஐந்து ரூபாய் பார்த்துக் கொடு.''

கௌரியும் அவனோடு சேர்ந்து கொண்டு சிரித்தாள். ''மலர்க் கொத்தின் அன்பளிப்பு உங்கள் தபால் செலவுக்கே கட்டி வராதே!''

''நான் தேடிக் கொண்டிருக்கும் சொத்து என்வாசகர்கள்'' என்று சொல்லி விட்டு, மேலும் சில கடிதங்களுக்குப் பதில் எழுதினான். மணி பன்னிரண்டு அடித்தது. கௌரி மெல்ல எழுந்து வந்து அவன் அருகில் நின்றாள். ''நேரமாகிறது; பாக்கியை நாளைக்கு எழுதிக் கொள்ளலாம்'' என்று அவன் பேனாவைப் பிடுங்கி மூடி வைத்துவிட்டு, ஆதரவோடு அவனைப் படுக்கைக்கு அழைத்துச் சென்றாள்.

உழைப்புக்குப் பின் கிடைக்கும் ஓய்வு உல்லாசம் நிறைந்தது. கௌரி அவனுடைய கால்களை வருடிக் கொண்டே, ''உமா ஊருக்குப் போகாமல் இருந்தால் உங்களுக்கு இவ்வளவு சிரமம் இல்லை'' என்றாள். ''என்னால் உங்களுக்கு என்ன பிரயோசனம்? நான் ஒரு படிக்காத மண்டு!''

''சீ, கழுதை!'' என்று செல்லமாய் அவளைக் கடிந்து கொண்டான் தணிகாசலம். ''படிக்காத மண்டுவாய் இருப்பதால் வீட்டு வேலைகளைச் செய்வதற்கு உன் உடம்பில் தெம்பிருக்கிறது. நீ பார்க்கும் வேலைகளை அவளால் பார்க்க முடியாது; அவள் செய்யும் உதவிகளை உன்னால் செய்ய முடியாது. இதனால் என்ன குறைந்து விட்டது? உலகத்தில்

உள்ள எல்லா ஆண் - பெண்களும் ஒரே மாதிரியாக இருந்து விட்டால் உலகம் எப்படித்தான் நடக்கும் ?''

'' நீங்கள் மட்டும் ஏன் இப்படி விசித்திரப் பிறவியாய் இருக்கிறீர்கள் ? இரும்பு அடிக்கும் கை ஏன் பேனாப் பிடிக்கிறது ? இந்த இரண்டு வேலைகளில் ஏதாவது ஒன்றை விட்டு விடுங்களேன். நீங்கள் படும் கஷ்டத்தை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை.'' கௌரி கண்கலங்கினாள்.

அவளை அருகில் இழுத்துக் கண்களைத் துடைத்து விட்டான் தணிகாசலம்.



''இரும்பு என் உடல்; எழுத்து என் உயிர். எதை விட்டுவிடச் சொல்கிறாய் ?'' என்று கேட்டான்.

சட்டென்று தணிகாசலத்தின் வாயைப் பொத்திவிட்டு, கௌரி அவனுடைய பரந்த மார்பின் மீது சாய்ந்தாள். குற்றாலத்துக் கோயிலில் உள்ள ரதியின் சிற்பம் தன் மேல் குழைந்து நெளிவது போல் அவனுக்குத் தோன்றியது. கௌரி அவன் காதருகில் தன் வாயை வைத்துக் கொண்டு, ''உங்கள் குடும்பம் மேலும் பெரிதாகி வருகிறது; நம் தம்பிப் பயலுக்கு இன்னொரு தம்பி, அல்லது தங்கை !'' என்றாள்.

'' என்ன !'' என்று கேட்டான்.

'' ஆமாம் ; இரண்டு மாதமாகிறது ; உமா ஊருக்குப் போனதிலிருந்து...''

கௌரியும் தணிகாசலமும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை பூத்துக் கொண்டார்கள்.

மறுநாள், எழுதுவதற்காக நாற்காலியில் உட்கார்ந்தபோது தணிகாசலத்துக்கு உமாவின் நினைவு வந்தது. தினந்தோறும் ஒரு மணி நேரமாவது உடன் இருந்து உழைப்பாள். அவள் தில்லிக்குப் போனதிலிருந்து, அந்தச் சிறு பொழுதைச் சரிக்கட்ட முடியாமல், வேலைகள் குவிந்து விட்டன. மனிதன் பழக்கத்துக்கு அடிமை. உமாவை அதிகாரம் செய்து பழகிய தணிகாசலத்துக்கு, அவள் அங்கே இல்லாதது கை ஒடிந்தது போலாயிற்று. கடிகாரத்தின் முட்கள் தொழிற்சாலைப் பொறுப்பைச் சுட்டிக் காட்டிப் பயமுறுத்தின. மறதி! மறதி! அசாத்திய மறதி! தேடும் படலத்துக்கே ஒரு நாள் தேவைப்பட்டது. புத்தகங்கள், பத்திரிகைகள், கதைக் குறிப்புக்கள், கடிதங்கள் - இவற்றைத் தேடி எடுப்பதற்கே நேரம் போதவில்லை. உமாவின் மேல் அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது. ''அவள் இங்கே வரட்டும் சொல்கிறேன். அப்பாவின் செல்லம் அவளுக்கு அதிகமாகப் போய்விட்டது. கடிதங்கள் என்ற பெயரில் பிரயாணக் கட்டுரைகள் எழுதி அனுப்புகிறாள்! இங்கே வரவே மாட்டாளோ!''

தொழிற்சாலைக்குக் கிளம்பிய தணிகாசலம் அங்கு எதிர்பாராத விதமாக டைரக்டர் மோகனரங்கத்தைச் சந்தித்தான். தம்முடைய 'மோரிஸ் மைனர்' காரை அவர் பழுது பார்ப்பதற்காக அங்கு வந்திருந்தார். முதற் பார்வையில் அவரால் தணிகாசலத்தை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. இடையில் இரண்டு ஆண்டுகளல்லவா? மேலும் தணிகாசலம் அரைக் கால் சட்டையும், முண்டா பனியனும், கையில் ஸ்பானருமாக அங்கே நின்று கொண்டிருந்தான்.

''நீங்கள், நீங்கள் வந்து...?'' என்றார் மோகனரங்கம்.

'' ஆமாம் ; நானேதான். வெள்ளித் திரையால் விழுந்த பள்ளத்தை நிரப்பிக் கொண்டிருக்கிறேன் ''

மோகனரங்கம் புதிய மனிதராக மாறி அவனைத் தனி இடத்துக்கு அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்துப் பேசினார். நெருங்கிய நண்பனிடம் பேசுவது போல் தோன்றியது அவருடைய பேச்சு. அதைக் கண்டு, தணிகாசலத்துக்குச் சந்தேகம் வந்து விட்டது.

''நான் இப்போது அங்கே இல்லே, தெரியுமா?'' என்று கேட்டுவிட்டு மேலும் சில தகவல்களைக் கூறினர். ''பசுபதி என்னிடம் தோளில் கை போட்டுப் பழகி, என் தொழில் நுட்பங்களைத் தெரிந்து கொண்டு, கடைசியில் என் தலையிலேயே கையை வைத்துவிட்டார். குமாரசாமி இப்போது இங்கு இல்லே; குடும்பத்துடன் பம்பாய் 'மலபார் ஹில்'லில் சுகவாசம் செய்யப் போய் விட்டார். பசுபதி வைத்தது தான் சட்டம். தமக்கென்று ஒரு கூட்டம் சேர்த்துக் கொண்டு, செலவுக் கணக்கை இரு மடங்காய்க் காட்டி, கூட்டத்தாரிடம் பங்கு பெற்றுக் கொள்ளுகிறார்.''

''இந்த வம்பெல்லாம் எனக்கு எதற்கு?'' என்றான் தணிகாசலம்.

''குமாரசாமியைச் சீக்கிரம் உறிஞ்சித் தள்ளிவிட்டு, கரும்புச் சக்கையாய் வெளியில் துப்பப் போகிறார் பசுபதி. நம்மைப்போல யோக்கியர்களை நம்பாத குமாரசாமி இப்போது படுகுழியில் விழப் போகிறார்.''

கஷ்டகாலத்தில் சிலருக்கு நல்ல புத்தி தோன்றுவதுண்டு. கஷ்டம் நீங்கினல் அத்துடன் நல்ல மனமும் மாறிப் போகும். அத்தகைய மோகனரங்கத்துக்காக அவன் வருத்தப் படவில்லே. செங்கமலத்தின் கணவர் இக்கட்டான நிலைமையில் அகப்பட்டு விழிக்கிறாரே என்று அவன் கலங்கினன். 'பிறகு அவள் கதி என்ன ஆகும்?' - ஏழை சொல் அம்பலம் ஏறுது. அவரிடம் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்வதற்கும் அவனுக்கு வாய்ப்பில்லே.

மோகனரங்கம் திடீரென்று ஒரு யோசனை கூறினர்: ''திறமையுள்ள பல கலைஞர்கள் வேலையில்லாமல் திண்டாடுகிறார்கள். அவர்களை வைத்துக் கொண்டு, நீங்களும் நானும் கூட்டாக ஏன்......''

தணிகாசலம் நகைத்தான். ''நடுத் தெருவில், கண்ட இடத்தில் பேசும் வெட்டிப் பேச்சை விட்டுத் தள்ளுங்கள்! இது புளிச்சேப்பக்காரர்களின் காலம். இந்தக் காலத்தை நானும் என்னைப் போன்ற எழுத்தாளர்களும் மாற்றி அமைக்கத் தான் போகிறோம். அப்போது நீங்கள் என்னுடைய வீட்டைத் தேடிக்கொண்டு வருவீர்கள். அது இந்த நாட்டுக்கும் நல்ல காலம்; உங்கள் தொழிலுக்கும் நல்ல காலம்.''

மோகனரங்கம் தமது ஒரே மூலதனமான பழைய காரைப் பழுது பார்த்துக் கொண்டு, புதிய முதலாளிகளை உற்பத்தி செய்வதற்காக விரைந்து சென்றார்.

**வீ**ட்டில் நுழைந்தவுடன் தணிகாசலத்துக்கு ஒரு உற்சாகமான செய்தி காத்திருந்தது. கௌரி அன்று வந்த கடிதத்தைக் கொடுத்து, ''நீங்கள் தில்லிக்குப் புறப்படுகிறீர்கள்; உமாதேவி உத்தரவு அனுப்பியிருக்கிருள்!'' என்று உற்சாகமாகக் கூறினள்.

பேராசிரியரும் உமாவும் சேர்ந்து முன்னும் பின்னுமாக வரிந்து தள்ளியிருந்தார்கள். எழுத்தாளனுடைய கற்பனை உள்ளத்துக்குத் தெவிட்டாத தேனமுதச் சாறு, அங்கே பற்பல கோட்டை கொத்தளங்களிலும், பாழ் அடைந்த பழைய அரண்மனைகளிலும், சாலைகளிலும், சோலைகளிலும், மனிதக் கூட்டத்தின் நெருக்கடியிலும் சொட்டிக் கொண்டிருப்பதாகப் பேராசிரியர் குறிப்பிட்டிருந்தார்: ''நீங்கள் கட்டாயம் இங்கே புறப்பட்டு வரவேண்டும். தமிழ் நாட்டு வாசகர்களுக்கு அள்ளி அள்ளிக்



கொடுப்பதற்குப் பல மூலப்பொருள்கள் இங்கு உங்களுக்குக் கிடைக்கும். பத்து நாட்கள் தங்கியிருந்து பின் எல்லாருமே சென்னைக்குத் திரும்பி விடலாம். ருக்மிணிக்கு அங்கே கல்யாணம் நிச்சயமாகி விட்டதல்லவா?''

ஆம்; ருக்மிணியின் கல்யாணத்துக்கு இன்னும் இருபது நாட்களே இருந்தன. இரண்டாவது முறையாகப் பேச்சு வார்த்தை நடத்திய அதே படிப்பில்லாத பணக்கார மாப்பிள்ளை அவள் கரத்தைப் பிடிக்கப் போகிறுன்.

உமா எழுதிய எழுத்துக்கள் தணிகாசலத்தின் உள்ளத்தில் உடனடியாகச் சிறகு முளைக்க வைத்து அவனைத் தில்லிக்குப் பறக்க வைத்தன: ''மாமா! நீங்கள் தமிழ் நாட்டைச் சுற்றி வந்து, அதன் அருமை பெருமைகளை என்னிடம் கதை கதையாகச் சொல்லியிருக்கிறீர்கள், 'தமிழ் மன்னர்களின் அழியாத அகவாழ்வின் அற்புதச் சின்னங்கள்'

என்று அங்குள்ள கோயில்களாகிய கலைக்கூடங்களை என்னிடம் வர்ணித்திருக்கிறீர்கள். இங்கே வந்து முகலாய மன்னர்களின் அற்புத-அற்புதமான புற வாழ்வுச் சின்னங்களைக் கண்டு களியுங்கள். நீங்கள் மனிதர்களின் அக வாழ்வையும் புற வாழ்வையும் சொல்லால் தீட்டும் ஓவியராயிற்றே! இங்கு பறந்தோடி வாருங்கள். பணக்காரக் கருமிகள் பலர் இங்கே வந்து தாங்கள் மட்டிலும் உல்லாசம் பெற்றுச் செல்கிறார்கள். நீங்கள் வந்தால் அதை உங்களை வளர்க்கும் தமிழர்களுக்குத் தருவீர்கள். அப்பாவிடம் அருமையான கார் இருக்கிறது. அவரே நம்மை முக்கியமான இடங்களுக்கு அழைத்துச் சென்று காட்டுவார். தில்லியில் உள்ள கோட்டைகளைப் பார்ப்போம். அக்பரின் ஆட்சியைப் பறைசாற்றும், வெற்றிநகரமான பெதபூர் சிக்ரியின் பாழடைந்த அரண்மனையைக் காண்போம். ஆக்ரா நகரத்தில் சுடர் விடும் ஷாஜஹான்-மும்தாஜின் காதல் காவியமான தாஜ்மஹாலைச் சுற்றி வருவோம். இம்முறை நீங்கள் வந்தால், பிறகு குடும்பத்துடன் வரவேண்டுமென்ற ஆவல் உங்களுக்கு ஏற்படாமல் போகாது. உங்களுக்குச் செலவும் சிரமமும் இல்லாமல் நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம்.''

தணிகாசலத்துக்கு அவன் தொழிற்சாலை விடுமுறை கொடுத்தது. குடும்பத்தார் அவனுடைய விருப்பத்துக்குக் குறுக்கே நிற்காமல் அவனைப் பெருமையுடன் வழியனுப்பி வைத்தார்கள். தன்னுடைய கால்களில் விழுந்து எழுந்த தணிகாசலத்தைக் கல்யாணி அம்மாள் தூக்கி நிறுத்தினாள். அவளுடைய கண்களின் வெள்ளம் அணைகளை உடைத்தது. ''தம்பி, பத்திரமாய்ப் போய்வா! நம்மைப் போன்ற ஏழைகளுக்கு இந்த ஊரில் இப்படி ஒரு வீடும் கிடைக்காது. செலவும் சிரமமும் இல்லாமல் அந்த இடங்களை நீ போய்ப் பார்க்கவும் முடியாது. உன்னுடைய நல்ல மனத்தைத் தெரிந்து கொண்டு பாராட்ட நான்கு பேர்களாவது இங்கே இருக்கிறார்களே, அதுதான் நீ செய்த பாக்கியம். மகராசனாய்ப் போய் வா!''

கைக் குழந்தை பரமசிவத்தை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு, அவனுடைய காதுகளில் எதையோ ரகசியமாகக் கூறினாள் கௌரி.

''அப்பா, அப்பா! எனக்குத் தாஜ்மஹால் வாங்கித்து வாங்கப்பா'' என்றான் பரமசிவம்.

தாஜ்மஹாலின் பெயர் தன்னுடைய பிள்ளையின் வாயிலிருந்து மழலையாக வெளிப்பட்டவுடன் தணிகாசலத்துக்கு உடம்பைப் புல்லரித்தது.

''அதை இங்கே வாங்கிக்கொண்டோ, பெயர்த்துக் கொண்டோ வரமுடியாது. நானே அப்படி ஒன்று கட்டி முடித்து அதை உனக்குக் காண்பிக்கிறேனடா, ராஜா!'' என்றான் தணிகாசலம்.

அந்த ராஜாவை வாங்கித் தணிகாசலம் அவன் நெற்றியில் முத்தம்கொடுத்தான். 'பொன்னாலும் மணியாலும் பளிங்காலும் என்னால் மஹால் எழுப்ப முடியாது. விலை மதிக்கவொண்ணாத சொல்லாட்சியைக் கற்பனைத் தேவியிடம் கதறிப் பெற்று, அந்தச் சொற்களால் ஒரு காதல்மாளிகைஎழுப்புவேன்.'

கௌரி அவனைக் கேலி செய்து நகைத்தாள்: ''பெற்றெடுத்த பிள்ளையின் சொல்லைத் தெரிந்து கொள்ளாதவர் கதை எழுதுகிறாராம் கதை! அவனுக்கு ஒரு பொம்மைத் தாஜ்மஹால் வாங்கிக் கொண்டு வாருங்கள். அதைத்தான் அவன் கேட்கிறான்.''

''ஒன்றென்ன, இரண்டு வாங்கி வருகிறேன்!'' என்று சொல்லிவிட்டு, குறும்புத்தனமாகக் கௌரியைப் பார்த்தபடி, விடைபெற்றுக் கொண்டான் தணிகாசலம். அவளுடைய வயிற்றில் வளரும் சிசுவுக்கு வாயிருந்தால் அதுவும் அவனை வாழ்த்தி அனுப்பி யிருக்கும்!

## அத்தியாயம் 21

# அதிசயந்தானா?

சப்பாத்தி, பருப்புக் கூட்டு, பூரி-கிழங்கு, ரொட்டித் துண்டு, அரிசிச் சோறு-இப்படி விதம் விதமான உணவு வகைகளையும், தெலுங்கு, மராத்தி, பஞ்சாபி, உருது, ஹிந்தி முதலிய விதம் விதமான மொழி வகைகளையும் கடந்து தணிகாசலம் தில்லிக்குச் சென்றான். அரைகுறையாக ஆங்கிலம் பேசத் தெரிந்த அவனுடைய நாக்கு இந்த இரு வகைப் பிரயாணச் சிரமங்களுக்கும் ஈடு கொடுத்தது. நல்ல வேளை; வெள்ளைக்காரர்களால் ஆங்கிலத்தையும் தங்களுடன் கப்பலேற்றிக் கொண்டு செல்ல முடியவில்லை. உலகத்தின் இலக்கியச் செல்வங்களை அந்த மொழி திரட்டிக் கொடுத்தது; விஞ்ஞானத்தை நமக்கு

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டென்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்

---



## நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்ஃப்யூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.




# கால்கேட்

## பெர்ஃப்யூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

அறிமுகப் படுத்தியது. அத்துடன் தணி காசலம் போன்றவர்களுக்குப் பிரயா ணத்திலும் வழித்துணையாக வந்து அது கை கொடுத்து உதவியது.

தணிகாசலத்தைத் தில்லி ரயிலடியில் பேராசிரியர் சந்திரசேகரன் கை கொடுத்து வரவேற்றார். உமாவைத் திரும்பிப் பார்த்தான் தணிகாசலம். அவள் மிகவும் அடக்க ஒடுக்கமாக ஒரு புறம் நின்று கொண்டு அவனை அச்சத் துடன் நோக்கினாள். தணிகாசலத்துக்கு அவளுடைய இந்தப் போக்கை நம்ப முடியவில்லை. அடக்க ஒடுக்கத்துக்கும் அவளுக்கும் ஆறு காத தூரமல்லவா?

பஞ்சாப், உத்தரப் பிரதேசம் முதலிய பகுதிகளைச் சேர்ந்த பெண்கள் சிலர் கூட்டத்தை ஒதுக்கிக் கொண்டு வெளி யில் சென்றார்கள். இன்னும் சிலர் தங்க ளுடன் வந்த ஆண்களின் கரங்களைப் பற்றிக் கொண்டு நடந்தார்கள். அண்ணா, தம்பி, கணவன் முதலியவர்க ளிடம் அவர்கள் விகற்பமின்றித் தொட் டுப் பழகியது தணிகாசலத்துக்கு விந்தை யாய்த் தோன்றியது. நாடுகள்தோறும் பழக்க வழக்கங்கள் வேறுபடுவது இயல் பென்று எண்ணினான்.

உமா இப்படி 'உம்'மென்று முகத்தை வைத்துக்கொண்டு நின்றது அவனுக்குப் பிடிக்கவில்லை. வந்தவனை 'வாருங்கள்' என்று ஒரு சொல் அழைக்கக் கூடாதா?

''உமா ஏன் இப்படி நிற்கிறாள்?'' என்று கேட்டான் தணிகாசலம்.

''வந்திருப்பது நீங்களா, உங்கள் ஆவியா என்பது அவளுக்குச் சந்தேகம். உங்கள் கடிதத்தைக் கண்டதிலிருந்து அவளுக்குத் தூக்கம் இல்லை. 'ரயில் பத்திரமாக வந்து சேருமா? தண்ட வாளம் தரையில் ஒட்டிக் கொண்டிருக் குமா? மாமாவை யாராவது மான்சிங் போன்ற கொள்ளைக்காரர்கள் வந்து பிடித்துக் கொண்டு போய்விட்டால் என்ன செய்வது?' இப்படியெல்லாம் அவள் கேள்விமேல் கேள்வியாகக் கேட்டு என்னைத் துளைத்து விட்டாள்.''

''போதும், அப்பா! வீட்டில் போய்ப் பேசிக்கொள்வோமே?'' என்று சொல்லி விட்டு, ஒரு கையில் படுக்கையும், மறு கையில் பெட்டியுமாக நின்று கொண் டிருந்த தணிகாசலத்திடமிருந்து பெட் டியைப் பிடுங்கிக் கொண்டாள் உமா.

வெளியே சந்திரசேகரனின் கார் நின்றது. ''என்னுடைய காருக்கு நானே டிரைவர்'' என்று சொல்லிக் கொண்டு, காரோட்டும் இடத்தில் அமர்ந்தார் அவர். அவருக்குப் பக்கத் தில் தணிகாசலமும் பின்னால் உமாவும் உட்கார்ந்தனர். சிறிது தூரம் சென்ற பிறகு, ''வீட்டுக்குப் போனவுடன் நீங்கள் ஒரு அதிசயத்தைக் காணப் போகிறீர்கள்; உமா உங்களுக்கு அந்தக் கதையைப் பின்னால் சொல்வாள்'' என்றார் சந்திரசேகரன்.

''ஆமாம்; அதையே நீங்கள் கதை யாக்கி விடலாம்'' என்றாள் உமா.

திடீரென்று நடுச் சந்தியில் காரை நிறுத்தி விட்டு, ''தயவுசெய்து அதை எழுத வேண்டாம்; என்னை நடுச்சந்தி யில் இழுத்து விடாதீர்கள்'' என்று பதறிப் போனார் பேராசிரியர். கார் மீண்டும் புறப்பட்டது.

''பின்னே எதற்காக என்னை இங்கே வரவேண்டாம் என்று அப்பா அவசர மாகத் தந்தி கொடுத்தார்? நீங்களே கேளுங்கள், மாமா!''

''எல்லாம் அவளிடமே கேட்டுக் கொள்ளுங்கள். இதோ வீடு வந்து விட்டது'' என்றார் சந்திரசேகரன்.

ஒரு விசாலமான சதுக்கத்தில் வரிசை யாகப் பல வீடுகள் தெரிந்தன. ஒரே மாதிரி மாடி வீடுகள். வலது கைப் பக்கத்தில் நான்காவது வீட்டின் முன்னால் கார் போய் நின்றது. அதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள் போல் ஒரு பெண்மணி வெளியில் வந்து காரின் கதவுகளைத் திறந்து விட்டாள். தணிகாசலத்தைப் பார்த்துப் பண் போடு கை கூப்பினாள்.

அவர்கள் உள்ளே சென்றவுடன் காரும் தன் கூடாரத்தில் நுழைந்தது. பேராசிரியர் மெதுவாக நழுவி, வீட்டுக் குள் எங்கோ போய் மறைந்துவிட்டார். ''சித்தியை அறிமுகம் செய்து வைப்ப தற்குள் அப்பாவுக்கு வெட்கம் வந்து விட்டது!'' என்று நகைத்தாள் உமா.

'சித்தியா! இவள்தான் அந்த அதி சயமா?' தணிகாசலம் விழித்தான்.

''என்ன மாமா விழிக்கிறீர்கள்? இவர்தாம் என் அம்மா! எனக்குக் கூடத் தெரியாமல் அப்பா கல்யாணம் செய்து கொண்டிருக்கிறார். அந்த அப் பாவை என்ன செய்ய வேண்டும் தெரி யுமா? வருஷக் கணக்கில் தாயையும் பெண்ணையும் பிரித்து வைத்திருக்கிறா ரென்றால், பார்த்துக்கொள்ளுங்களேன்! பெயர் சந்திரலேகா. முன்னால் கணி தப் பேராசிரியையாக இருந்து விட்டுப் பிறகு தத்துவப் பேராசிரியரிடம் தஞ்சம் புகுந்தவர்.''

சந்திரலேகா தன்னுடைய தலையின் மேல் போட்டுக் கொண்டிருந்த சேலைத் தலைப்பை நன்றாக இழுத்து விட்டுக் கொண்டு சிரித்தாள். நெற்றியில் ஒரு குங்குமப் பொட்டும், அதற்குநேர் உச்சி யில் வகிடின் தொடக்கத்தில் மற்றொரு

குங்குமப் பொட்டும் துலங்கின. முப்பத்தைந்து, நாற்பது வயதிருக்கும். ஒல்லியாக, ஒடித்து மடியில் கட்டிக் கொள்ளும் அளவுக்கு நோஞ்சலாக இருந்தாள். முகத்தில் பெண்மைக் கலை ஒளி விட்டுப் பிரகாசித்தது.

உமா தணிகாசலத்தின் எதிரிலேயே அந்தச் சித்தியைக் கட்டிப் பிடித்துத் தூக்கத் தொடங்கினாள். ''என் அம்மா! என் அம்மா!'' என்று அவள் குதித்த குதி சொல்லி முடியாது. தோள் பட்டையைப் பிடித்துக் கொண்டு சித்தியிடம் கொஞ்சினாள். சந்திரலேகாவின் பாடு உமாவிடம் திண்டாட்டமாய்ப் போய் விட்டது. அவளால் உமாவிடமிருந்து விடுதலை பெறவே முடியவில்லை.

''மாமா! இனிமேல் நீங்கள் எனக்கு அம்மாவாக இருக்க வேண்டியதில்லை. இன்றிலிருந்து அந்த உத்தியோகத்தை இவர்களிடம் கொடுத்து விடுங்கள்.''

''ஆஹா! நான் பாக்கியம் செய்தவன்'' என்றான் தணிகாசலம். தர்மசங்கடமான இந்தப் பொறுப்பு அவனை விட்டு நீங்கியதில் அவனுக்கு ஒரு சுமையை இறக்கி வைத்த கலகலப்பு தோன்றியது. 'இனி அவள் பீதற்றமாட்டாள்' என்று நினைத்துக் கொண்டான்.

பேராசிரியர் தம்முடைய மனைவியை இழுத்து வைத்துக் கொண்டு அடுக்களையில் ரகசியம் பேசினார். தங்களுடைய கதையை உமா தணிகாசலத்திடம் கூறி முடிக்கும் வரையில் அவருக்குத் தம்முடைய தலையை வெளியே நீட்டுவதற்கு வெட்கம். ''எதற்காக இப்படிச் செய்ததையும் செய்து விட்டுத் தலையில் முக்காடு போட்டுக் கொள்கிறீர்கள்?'' என்று சந்திரலேகா கேட்ட கேள்விக்கு அவரால் பதில் சொல்ல முடியவில்லை.

ஐந்து நிமிஷத்தில் சொல்ல வேண்டிய கதையை ஐம்பது நிமிஷத்துக்கு வளர்த்தாள் உமா. 'பெண்களுக்கு எதையுமே சுருக்கமாய்ச் சொல்ல வராது போலிருக்கிறது' என்று நினைத்துக் கொண்டு, பொறுமையைக் கடைப் பிடித்தான் தணிகாசலம்.

கடைசியில் அவள் சொல்லியவற்றைச் சுருக்கிப் பார்த்தபோது, ஓரளவு அதில் சுவை இருந்தது: — ஆண்கள் கல்லூரிப் பேராசிரியரும், பெண்கள் கல்லூரிப் பேராசிரியையும் ஒரு பொதுக் கல்லூரியின் பொது மேடையில் சந்தித்து விவாதம் நடத்தினார்கள். தத்துவம் தோற்றுப் போய் விட்டதாகக் கணிதம் சாதித்தது. கணிதம் கண்ணீர் வடித்ததாகத் தத்துவம் மார்தட்டியது. இருவருக்குமே தங்கள்-தங்கள் வெற்றிப் பிரதாபத்தை வெளியிட வீட்டில் துணையில்லை. கணிதத்தின் கிழட்டுத் தாயார் சாகப் போகிற நிலையில் இருந்தாள். மீண்டும் அவர்கள் தனிமையில் சந்தித்து விவாதம் நடத்தினார்கள். தத்துவப் பேராசிரியர் கணிதத்துக்கு மனோதத்துவப் பரீட்சை வைத்தார். பதிலுக்கு, கணிதம் அவருக்கு வீட்டுக் கணக்கு கொடுத்தது. இருவருமே மற்றவருக்கு நூற்றுக்கு நூறு 'மார்க்'கு கொடுத்து, தங்கள் வெற்றி விழாவாகக் கல்யாணத்தைக் கொண்டாடினார்கள். சந்திரலேகா கல்லூரியை விட்டு விட்டுத் தத்துவத்தைக் காப்பாற்றுவதே தன் கடனாகக் கொண்டாள். அவள் தாயாரும் கண்மூடி விட்டாள்.

''சித்தி பஞ்சாபிப் பெண் என்பதால், அப்பா இதை வெளியிடாமல் வைத்துக் கொண்டிருக்கிறார்'' என்றாள் உமா.

இதைக் கேட்டுக் கொண்டே வந்த சந்திரசேகரன், ''காலம் வரும்போது சொல்ல நினைத்தேன்; உமாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகிற சமயத்தில் அதைச் சொல்லித்தானே தீர வேண்டும்?'' என்றார்.

''நான் கல்யாணம் செய்து கொண்டால்தானே?''

''உன் சித்தியும் இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தவள்தான்.''

அன்றைக்கு மாலையிலிருந்து பேராசிரியரின் கார் தில்லி நகரத்துத் தெருக்களில் வேகமாகச் சென்றது. அவருக்கும் அப்பொழுது கோடை விடுமுறை சமயம். சித்தியையும் தன்னுடன் அழைத்துக் கொண்டாள் உமா. புதிய தில்லியின் புத்தம் புதுச் சாலைகளையும், சோலைகளையும், கடைத் தெருக்களையும், மாளிகைகளையும் சுற்றி வந்தார்கள் அவர்கள். ''வெள்ளைக்காரர்கள் தங்களது தலைநகரான லண்டனை நினைவில் வைத்துக் கொண்டு இந்தப் புதிய நகரத்தை உருவாக்கியிருக்கிறார்கள். அதனால்தான் திரும்புகிற பக்கமெல்லாம் செயற்கை யழகும், இயற்கை யழகும் சேர்ந்துகொண்டு போட்டி போடுகின்றன'' என்றார் தத்துவப் பேராசிரியர் சந்திரசேகரன்.

வெள்ளைக்காரர்கள் போனவுடன், திடீரென்று சமயக் கிளர்ச்சியில் அதன் வாழ்வு ஓரளவு சீர்குலைந்த போதிலும் மீண்டும் அது புதுவாழ்வு பெறத் துடித்தது. தணிகாசலம் அந்த நகரத்து மக்களின் வேகமான போக்கையும், சுறுசுறுப்பையும், உழைப்பையும் கண்டு பிரமித்தான்; வியந்தான்.

''பரம்பரை பரம்பரையாய் எண்ணற்ற போராட்டங்களையும் துன்பத்தையும் தாங்கி வந்தவர்கள் இந்தப்

பகுதியின் மக்கள். மதவெறி, மன்னர்களின் போர் வெறி, கொள்ளைக்காரர்களின் வெறி, அன்னிய ஆதிக்க வெறி- இப்படிப் பலதரப்பட்ட வெறிகளுக்குப் பலியானவர்கள் இவர்கள். இப்போது மீண்டும் புதிய வாழ்க்கை கிடைக்கும் என்ற நம்பிக்கையால் கடுமையான உழைப்பை மேற்கொண்டிருக்கிறார்கள். இத்தகைய புது விழிப்பு இயற்கை தானே?'' என்றார் பேராசிரியர்.

பழைய தில்லியில் தணிகாசலம் கண்ட சில காட்சிகள் அவனுக்குக் கலக்கத்தைக் கொடுத்தன. எங்கு திரும்பினாலும் பாழடைந்த கோட்டைகள், கொத்தளங்கள், மசூதிகள், அரண்மனைகள், அழிவின் சின்னங்கள்! இந்த நாட்டின் பழைய சரித்திரக் காட்சிகள் அவனுக்கு நினைவில் வந்தன. ''தாங்களும் வாழ்ந்து மற்றவர்களையும் வாழவிட வேண்டும் என்ற அடிப்படை ராஜதந்திரத்துக்குப் பஞ்சம் வந்து விட்டதாலல்லவோ இத்தனை தொல்லைகள்? உணர்ச்சி வெறியால் சீரழிந்த இந்தப் பகுதிகள் அறிவாளிகளுக்கு எச்சரிக்கையாகவும் புதிய தில்லியின் புதுவாழ்வு உழைப்பாளர்களுக்கு நம்பிக்கை தரக் கூடியதாகவும் அமைந்திருக்கின்றன'' என்றான்.

ஐந்தே நாட்களில் தில்லி நகரத்தின் இரு பகுதிகளையும் ஒருவிதமாகச் சுற்றிப் பார்த்து விட்டான் தணிகாசலம். உமா தன்னுடைய புகைப்படக் கருவியால் நூற்றுக்கணக்கான படங்களை எடுத்துத் தள்ளினாள். தணிகாசலம் கூறிய விவரங்களையெல்லாம் ஒன்று விடாமல் குறித்துக் கொண்டாள். ஒவ்வொரு நாளின் மாலை நேரமும் ஒவ்வொரு பூங்காவின் பசும் புல் தரையில் உல்லாசமாகக் கழிந்தது. பூங்காவுக்குள் நுழையும் போதெல்லாம் உமாவுக்கு எங்கிருந்தோ இறக்கை முளைத்து விடும். தன்னையறியாது ஓடியாடிக் களிப்பாள். 'முகலாயப் பூங்கா' என்று பெயர் பெற்ற நந்தவனத்தில் ஒருநாள் அவர்கள் உலவிய போது, ''நம்முடைய உமாவைப்பார்த்தால் இப்போது ஒரு முகலாய இளவரசி போல் தோன்றுகிற தல்லவா?'' என்று தன் கணவனைக் கேட்டாள் சந்திரலேகா. ''எனக்கென்ன தெரியும்? இந்த எழுத்தாளரைக் கேட்டுப் பார்'' என்று சொல்லிச் சிரித்தார் பேராசிரியர். தணிகாசலத்துக்கு அப்போதுதான் உமாவின் உடல் அழகைப் பற்றிய நினைவே உதித்தது. 'இந்தப் பஞ்சாப் பெண்மணிக்கு இருக்கும் கற்பனைகூட எனக்கு இல்லையே!' என்று அவன் நொந்துகொண்டான்.

ஆறுவது நாள் அவர்கள் ஆக்ராவுக்கும், அதை அடுத்துள்ள 'பெதபூர் சிக்ரி' என்ற அக்பரின் வெற்றி நகரத்துக்கும் புறப்பட்டார்கள். சந்திரலேகாவுக்கு உடல் நலமில்லை. அதனால் அவள் வீட்டில் தங்கி விட்டாள்.

ஆக்ராவின் அற்புதச் செல்வமான தாஜ்மஹாலை மாலையில் பார்க்க வேண்டும் என்பதற்காக, அவர்கள் முதலில் பெதபூர் சிக்ரிக்குச் சென்றார்கள். ஆக்ராவிலிருந்து இருபத்து மூன்று மைல் தூரத்தில் அது இப்போது பாழ்படாத புதுக் கனவாக விளங்குகிறது. மனித சந்தடியற்ற அந்த மிகப் பெரிய கோட்டையின் பயங்கரமான பெருமூச்சைக் கேட்டுக் கலக்கமுற்றான் தணிகாசலம். ஏழு மைல் சுற்றளவுள்ள சுற்றுச் சுவர்களுக்குள்ளே சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்பு, அக்பர் அந்த மாயபுரியை எழுப்பி யிருந்தார். அந்த மன்னரின் மூளைத் தெளிவும், இருதய நெளிவுகளும் அந்தக் கோட்டையின் ஒவ்வொரு பகுதியிலும் தெரிந்தன.

அரசியல் பொதுமண்டபம், மந்திராலோசனை மண்டபம், இசைக்கூடம், கலைக்கூடம், அந்தப்புரங்கள், நீராடும் தொட்டிகள், உல்லாச உப்பரிகைகள், மருத்துவ மனை, இரு மனைவிகளுக்கும் தனித்தனி அரண்மனைகள் — இன்னும் எத்தனை எத்தனையோ!

சந்திரசேகரன் ஒருபகுதியைத் தணிகாசலத்துக்குச் சுட்டிக்காட்டி, ''இதற்குத் தங்க அரண்மனை என்று பெயர்; இங்கே தான் அக்பரின் இந்து மனைவியான மரியம் என்பவள் வசித்



தாள்; முஸ்லிம் மனைவியின் அரண்மனை அடுத்தாற்போல் இருக்கிறது'' என்றார்.

உமாவின் துடுக்குத்தனம் நிறைந்த வாய் அப்போது சும்மா இருக்கவில்லை. ''இந்த மாமாவும் ஒரு அக்பர்தான், அப்பா!'' என்றாள்.

பேராசிரியர் பிரமித்தார்.

''கௌரி, கற்பனை என்ற இரண்டு மனைவிகள் இவருக்கு. கற்பனையோடு இவர் தனித்திருந்து கொஞ்சும் வேளைகளில் கௌரிகூட இவர் அறைக்குள் நுழைவதற்குப் பயப்படுவாள்.''

சந்திரசேகரன் வாய் விட்டுக் கலகல வென்று பலமாகச் சிரித்தார்.

''கௌரிதான் பயப்படுவாளே தவிர, உங்கள் பெண் பயப்பட மாட்டாள்.



காற்றைப்போல உள்ளே நுழையும் தந்திரத்தை இவன் எங்கு கற்றுக் கொண்டாளோ?'' என்றான் தணிகாசலம்.

''நான் ஒன்றும் காற்றைப்போல் உருவமில்லாத பொருளில்லை'' என்று சிணுங்கினாள் உமா. ''என்னுடைய நிறை நூற்றுப் பதினைந்து பவுண்டு என்பதை மறந்துவிட வேண்டாம்.''

அந்த நூற்றுப் பதினைந்து பவுண்டு உள்ள உயிர்ப் பிராணி, பெதபூர் சிக்ரியை விட்டு ஆக்ராவுக்குக் காரில் திரும்பி வரும்போது, தன் தேகமெங்கும் வலி எடுப்பதாக முணுமுணுத்தது. கைகளும் கால்களும் குடைச்சல் எடுப்பதாக வருத்தப்பட்டுக் கொண்டாள். ''நீ இன்றைக்குப் பத்து மைல் தூரத்துக்கு மேல் நடந்திருக்கிறாய்!'' என்று தணிகாசலம் கூறியபோது அவளுக்கு மயக்கமே வந்துவிட்டது.

மாலை மயங்கும் வேளையில் அவர்கள் உலகத்தின் ஒன்பதாவது அதிசயத்தைப் பார்த்துவரக் கிளம்பினார்கள். உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வருவது போல் உமா மெல்ல நடந்தாள். அவளால் நடக்க முடியவில்லை.

தாஜ்மஹாலை நெருங்க நெருங்கத் தணிகாசலத்தின் மனம் கட்டுமீறித் துடித்தது. அந்தக் கனவு மாளிகையைப் பற்றிப் பலர் பற்பலவிதமாக எழுதிய எழுத்துக்களையும், பேசிய பேச்சுக்களையும் எண்ணிப் பார்த்துக் கொண்டான். அதைப் பற்றித்தான் எத்தனை கவிதைகள்! எத்தனை படங்கள்!

கந்தர்வலோக மென்றார்கள், சந்திர மண்டலக் கனவென்றார்கள், அழியாத அற்புதச் சித்திரமென்றார்கள், காதல் மாளிகை என்றார்கள், அன்பின் சின்னமென்றார்கள், அற்புதத்தின் தேசமென்றார்கள், உலக அதிசயமென்றெல்லாம் சொன்னார்கள். மற்றவர் கூறியது போதாதென்று, பேராசிரியர் வேறு அதைப் பற்றி வானளாவப் புகழ்ந்து கொண்டு வந்தார். தணிகாசலம் தன்னுடைய நினைவு மறந்த நிலையில் நடந்து போய், அதன் வெளி வாயில் முகப்பில் காலை எடுத்து வைத்தான். அவ்வளவுதான்; காலை எடுத்து வைத்தவன் அப்படியே தன்னை மறந்து நின்று விட்டான்.

அவனுடைய கால்கள் நகரவில்லை. கண்கள் இமையவில்லை. மூச்சு இழையவில்லை. தொலை தூரத்திலிருந்த அதன் இடது புறத்துக் கோபுரமொன்று நிலை பெயர்ந்து வந்து, அவனுடைய நெஞ்சில் தாக்கியதைப்போல் அவன் நடுங்கினான். அவனுடைய இருதயத்தில் ஒரு கூரான முள் பாய்ந்தது.

''ஆ!'' என்று நெஞ்சில் கையை வைத்துக் கொண்டு வாயால் மூச்சு விட்டான் தணிகாசலம்.

''என்ன, மாமா!'' உமா நடுங்கினாள். அவள் உடல் கிடுகிடுவென்று ஆடியது.

பேராசிரியர் பதறினார்.

''ஏமாற்றம்! மிகப்பெரிய ஏமாற்றம்! ஆயிரம்பேர் ஆயிரத்தைச் சொன்னாலும் நான் நம்பவே மாட்டேன். மற்றவர்களுக்கு இது அதிசயமாய்த் தோன்றினாலும், அதோ, அங்கே பாருங்கள்! அந்த அழகான பெண்மணியின் தூய்மையான தும்பைப் பூ முகத் திரை விலகியிருக்கிறதே, அதைப் பாருங்கள்! நன்றாகப் பாருங்கள்; கூர்ந்து பாருங்கள்;—உமா, நீ அவளைப் பார்க்க வேண்டாம்!''

இருவரும் அவனுடைய கரத்தின் வழியே கண்களைத் திருப்பினார்கள். தணிகாசலத்தின் அந்தக் கரம் கிடுகிடென்று நடுங்கியது. (தொடரும்)

உற்பத்தியை அதிகமான அளவில் பெருக்கி இருவிதப் பயன்களை அடையுங்கள்



மிக அமோகமாக உற்பத்தி செய்து தற்போது உணவு பற்றுக்குறையைச் சரிக்கட்ட அயல்நாடுகளிலிருந்து இறக்குமதிக்காகச் செலவிடுவதை மிச்சப்படுத்துங்கள்

அதிகப் பண்டங்களை உற்பத்தி செய்து ஐந்தாண்டுத் திட்டத்தின் உயிர்நாடியான தொழில்கள் விரைவில் வளர உதவுங்கள்

வர்த்தகம், தொழில் முதலிய துறைகளில் உங்களுக்கு உதவி அளிக்கவும் ஆலோசனைகள் கூறவும், சகலவித வசதியுடன் எமது பாங்கு இருக்கிறது

# இந்தியன் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: வடக்கு பீச் ரோடு, சென்னை-1



தென்னிந்தியா முழுவதும் மற்றும் இந்தியா, இலங்கை, மலேயா சிங்கப்பூர் நாடுகளில் முக்கிய நகரங்களிலும் கிளைகள் இருக்கின்றன

உலகிலுள்ள எல்லா பாகங்களிலும் எங்கள் பிரதிநிதிகள் உள்ளனர்

டி. பி. பார்த்தசாரதி. காரியதரிசி

---

குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு

## ஜம்மியின் "லிவர்க்யூர்"

மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: குறிப்பு:—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | இடம் | தேதி |
|---|---|---|---|
| கரூர் | 1 காலை | விருதுநகர் | 9 காலை 8 to 9 |
| சேலம் | 2 காலை & மாலை | கோயில்பட்டி | 9 10-30to12;மத்யானம் |
| ஈரோடு | 3 காலை | தூத்துக்குடி | 9 மாலை |
| திருப்பூர் | 3 மாலை | திருநெல்வேலி | 10 காலை & மாலை 11 காலை |
| கோயமுத்தூர் | 4 காலை & மாலை | ஸ்ரீவைகுண்டம் | 11 மாலை |
| பாலக்காடு | 5 காலை | அம்பாசமுத்திரம் | 12 காலை |
| பொள்ளாச்சி | 5 2-30 to 3-30 மாலை | தென்காசி | 12 மாலை |
| உடுமலைப்பேட்டை | 5 4-30 to 5-30 மாலை | திருவனந்தபுரம் | 13 காலை & மாலை |
| பழனி | 5 6-30 to 7-30 மாலை | ராஜபாளையம் | 14 காலை |
| திண்டுக்கல் | 6 காலை | சிவகங்கை | 14 மாலை |
| பெரியகுளம் | 6 மாலை | காரைக்குடி | 15 காலை & மாலை |
| மதுரை | 7 & 8 காலை & மாலை | தேவகோட்டை | 16 காலை |
| | | புதுக்கோட்டை | 16 மாலை |

○●○

ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்

# கூட்டுறவு இயக்கம்

க. சந்தானம்

எல்லா லட்சியவாதிகளும் கூட்டுறவு இயக்கத்தையே பொருளாதாரத்துக்குச் சிறந்த முறை என்று கூறுகின்றனர். தத்துவ நோக்கில் இதை அனைவரும் ஒப்புக்கொண்டே தீர வேண்டும். சாமான்களுக்குத் தேவையுள்ளவர்கள் மனப்பூர்வமாக ஒன்றுகூடித் தங்கள் முதலைப் போட்டு, அங்கத்தினர்களைக் கொண்டே அவைகளை உற்பத்திசெய்து, தமக்குள் விற்றுக்கொள்ளுவதால் வீண்சாமான்கள் தயாராகமாட்டா. மட்டச் சாமான்களையோ, கலப்புச் சாமான்களையோ தயார் செய்யும் எண்ணம் உதிக்காது. எப்படியாவது பிறரை ஏமாற்றியும், பொய்க் கணக்கு எழுதியும் லாபம் செய்யும் நோக்கமிராது. எவரும் கட்டாயப்படுத்தப்பட்டுத் தமக்கு இஷ்டமில்லாத வேலை செய்ய அவசியமிருக்காது. முதலாளித்துவத் தீமைகளையும், சர்க்கார் நேரில் பொருளாதார நிர்வாகம் செய்யும்பொழுது ஏற்படும் ஊழல்களையும் கூட்டுறவு மூலம் விலக்கிவிடலாம் என்றும் வாதிக்கப்படுகிறது.

இந்த வாதத்தில் ஓரளவு உண்மை யிருந்த போதிலும், கூட்டுறவு மூலம் பல முக்கிய பொருளாதாரக் காரியங்களை நிர்வகிக்க முடியாது. பெரிய தொழில்களுக்கு வேண்டிய மூலதனத்தைச் சாதாரண சம்பாத்திய முடைய அங்கத்தினர்களிடமிருந்து சேகரிப்பது சாத்தியமில்லை. லக்ஷக்கணக்கான அங்கத்தினர்களைச் சேர்த்து, சரிவரக் கூட்டுறவுச் சங்கம் நடத்தமுடியாது. ஆங்காங்கு ஒரு கிராமத்திலோ, சிறு நகரத்திலோ உள்ள ஜனங்கள் சேர்ந்து சங்கம் வைத்து வேலை செய்யும் போதே கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படையான கொள்கைகளை அனுசரிக்க முடியும். பல ஊர்களில் அங்கத்தினர் சேர்ந்து, பணக்காரர்களுக்கு அதிக பங்கு கொடுத்து, ஏராளமான சிப்பந்திகளைச் சம்பள, கூலி வேலைகளில் அமர்த்தி ஒரு கூட்டுறவுச் சங்கம் தொழில் நடத்தினால் முதலாளித்துவம், அரசாங்க நிர்வாகம் இரண்டுக்குமுள்ள குறைகள் அந்தக் கூட்டுறவுச் சங்கத்துக்கும் கூடிவிடும். அப்படியே, ஒரு கூட்டுறவுச் சங்கம் தனது அங்கத்தினர்களுக்கு மட்டுமின்றி, மற்றும் பலருக்கும், தூரதேசங்களுக்கும்-பண்டங்கள் தயார் செய்வதற்கோ, வியாபாரம் செய்வதற்கோ முற்பட்டால் லாப நஷ்டப் பிரச்னைகளும், நல்ல சாமான்கள் செய்து அதிக விலைக்கு விற்பதா, மட்டச் சாமான்கள் செய்து குறைந்த விலைக்கு விற்பதா என்ற கேள்வியும் பிறக்கும். முடிவில் அந்தச் சாமான்களைச் செய்யும் முதலாளி ஸ்தாபனங்களைப் போலவே தான் கூட்டுறவுச் சங்கமும் நடைபெறும்.

ஆதலால் கூட்டுறவுச் சங்கம் அடிப்படையான கொள்கைகளைத் தளர விடாமல் காரியம் செய்ய வேண்டுமானால், சில துறைகளில்தான் திறமையுடன் தொண்டு புரியக் கூடும். அதிக வட்டிக்குக் கடன் கொடுக்கும் ரொக்க வியாபாரிகளிடமிருந்து ஏழைகளைக் காப்பாற்றி, நியாயமான வட்டியில் கடன் கொடுத்து அதனைச் சிறிதாகப் பல மாதங்களிலோ, வருஷங்களிலோ வசூல் செய்வது இவ் வியக்கத்தின் முக்கிய வேலையாகக் கருதப்பட்டு அவ்வித சங்கங்களே பல நாடுகளில் பெரும்பாலான கூட்டுறவுச் சங்கங்களாக இருக்கின்றன. குடியானவர்களை ஏமாற்றி விவசாயப் பொருள்களுக்குக் குறைந்த விலை கொடுத்து, அதிக லாபத்தில் வியாபாரிகள் விற்பதைத் தடுத்து, கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் விற்று வரும் லாபத்தையெல்லாம் குடியானவர்களுக்கே திருப்பிக் கொடுப்பதற்காகவும் கூட்டுறவு இயக்கம் அதிகமாகப் பயன்படுகிறது. டென்மார்க் தேசத்தில் கிராமத்துக்குக் கிராமம் நல்ல பசுக்களை வளர்த்து, பால், வெண்ணெய், பாலேடு, பால் கட்டி (சீஸ்) முதலிய பொருள்களை விற்றுக் குடியானவர்கள் ஜீவனம் செய்கிறார்கள். இதைப் பெரும்பாலும் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் செய்வதால் அவர்களுக்கு அதிக லாபகரமாக இருக்கிறது. பருத்தி விதை எடுத்தல், வெல்லம், சிவப்புச் சர்க்கரை செய்தல், எண்ணெயாட்டி விற்றல் முதலிய பல தொழில்களும் கூட்டுறவு மூலம் செய்யலாம். சில இடங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் கூடி, மத்திய சங்கங்கள் ஏற்படுத்தி அவற்றின் மூலம் பெரிய தொழில்களையும் செய்கின்றன. லேவாதேவிக்காக ஜில்லா கூட்டுறவு பாங்கிகளும், மத்திய ராஜ்ய பாங்கிகளும் ஒவ்வொரு ராஜ்யத்திலும் ஏற்பட்டுச் சரிவர வேலை செய்து வருகின்றன.

மத்திய சர்க்காரின் ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவு இயக்கத்துக்கு உயர்ந்த ஸ்தானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட்டுறவு இயக்கத்தைப் பலப்படுத்த வேண்டுமென்று வற்புறுத்தி அதற்கு வேண்டிய பண வசதிகள் அளிக்கப்பட்டிருந்தன. அதோடு ரிசர்வ் பாங்கி மூலம் கூட்டுறவு இயக்கத்தைப் பற்றி ஆழ்ந்த பரிசீலனை செய்யப்பட்டு, 1954ல் ஒரு முக்கிய யாதாஸ்து வெளியிடப்பட்டு, அதன் சிபார்சுகளை அனுசரித்துக் கூட்டுறவு இயக்கத்தை விசாலப்படுத்திப் புது முறையில் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்ற திட்டம் போடப்பட்டிருக்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சி பின் வரும் புள்ளி விவரங்களிலிருந்து புலப்படும்.

### கூட்டுறவுச் சங்கங்கள்

| | | 1949—50 | 1954—55 |
|---|---|---|---|
| மொத்த சங்கங்கள் | | 1,73,094 | 2,19,288 |
| அங்கத்தினர்கள் | | 1,25,61,016 | 1,60,20,691 |
| கொள்முதல் | கோடி ரூ. | 233·1 | 390·5 |
| கடன்தொகை | கோடி ரூ. | 70·6 | 111·2 |
| நிகரலாபம் | கோடி ரூ. | 4·1 | 2·7 |

### ராஜ்ய பாங்கிகள்

| | | 1949—50 | 1954—55 |
|---|---|---|---|
| எண்ணிக்கை | | 14 | 24 |
| அங்கத்தினர்கள் | | 18,618 | 36,294 |
| கடன் தொகை | கோடி ரூ. | 29·6 | 50·2 |
| எல்லாவித மூலதனம் | கோடி ரூ. | 30·5 | 47·6 |

### மத்திய பாங்கிகளும், யூனியன் பாங்கிகளும்

| | | 1949—50 | 1954—55 |
|---|---|---|---|
| எண்ணிக்கை | | 498 | 485 |
| அங்கத்தினர்கள் | | 1,89,722 | 2,72,000 |
| கடன் தொகை | கோடி ரூ. | 18 | 35 |
| மூலதனம் (இதரபாங்கிகளிலிருந்து கடன் உள்பட) | கோடி ரூ. | 49·9 | 73·7 |

### மத்திய நில அடமான பாங்கிகள்

| | | 1949—50 | 1954—55 |
|---|---|---|---|
| எண்ணிக்கை | | 5 | 9 |
| அங்கத்தினர்கள் | | 8,871 | 65,895 |
| கடன் | கோடி ரூ. | 1·01 | 2·43 |
| மூலதனம் | கோடி ரூ. | 6·86 | 15·78 |

### அடிப்படையான நில அடமான பாங்கிகள்

| | | 1949—50 | 1954—55 |
|---|---|---|---|
| எண்ணிக்கை | | 283 | 292 |
| அங்கத்தினர்கள் | | 1,86,330 | 2,90,931 |
| கடன் | கோடி ரூ. | 1.01 | 1·44 |
| மூலதனம் | கோடி ரூ. | 5·9 | 10·41 |

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சிறிய கிராமச் சங்கங்களை இணைத்துக் குறைந்தது ரூ. 15,000 பங்குத் தொகை முதல் கொண்ட பெரிய சங்கங்களாகச் செய்து, லேவாதேவி மட்டுமின்றி விவசாயிகளுக்கு இதர உதவிகள் செய்யும்படி அவர்களின் பணிகளை விசாலப்படுத்த முடிவு செய்திருக்கின்றனர். தவிர, சாமான்களைச் சேமித்து வைப்பதற்குப் பெரும் கிடங்குகள் கட்டுவதற்காகப் பெரிய கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தவும் அவற்றுக்கு மூலதனம் பெரும்பாகம் ரிசர்வ் பாங்கியும், ராஜ்ய அரசாங்கங்களும் கொடுக்கவும் ஏற்பாடாகியிருக்கிறது. 350 பெரும் கிடங்குகளும், 1500 நடுத்தரக் கிடங்குகளும், 4000 சிறிய கிடங்குகளும் கட்டப்படும். குறுகிய காலக் கடனாக ரூ. 150 கோடி ரூபாயும் நடுத்தரக் காலக் கடனாக ரூ. 50 கோடியும் நீண்டகாலக் கடனாக ரூ. 25 கோடியும் கூட்டுறவு இயக்கம் மூலமாக வியாபாரச் சங்கங்களுக்கு மூலதனம் வழங்கப்படும். மற்றும் பல வழிகளிலும், கூட்டுறவு விவசாயப் பண்ணைகள் ஏற்படுத்துவதிலும், கூட்டுறவு இயக்கத்தை வளர்க்கப் பெரும் முயற்சிகள் செய்ய வேண்டுமென்று திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. இந்த வளர்ச்சிக்கு வேண்டிய பொதுநலச் சிந்தனையுள்ள பிரமுகர்கள் பணி செய்ய முன்வந்தால் நாட்டின் முன்னேற்றம் துரிதப்படும். அப்படியில்லாமல் கூட்டுறவு இயக்கமும் ஓர் அரசாங்க நிர்வாகமாக மாறினால் பணச் செலவின் பலன் கிடைக்காமல் போவதுமன்றிக் கூட்டுறவு இயக்கத்தின் தன்மையும் இரிந்துவிடும்.

# கொடுத்து வைத்தவர்

## துஷ்யந்தன்

### முதல் அத்தியாயம்

"தை பிறந்து விட்டது."

"ஆமாம், மார்கழி போய் விட்டது. பஜனையும் பொங்கலும்......"

"அதைச் சொல்லவில்லை, பெண்ணுக்கு வரன்......"

"அதுவா?......."

"பக்கத்து வீட்டில் யாரோ புதிதாக வந்திருக்கிறார்கள், தெரியுமா?"

"ஏன், பிள்ளையைப் பெற்றவர்களோ?"

"பிள்ளைக்குப் பிள்ளை, பெண்ணுக்குப் பெண் எல்லாம் இருக்கிறது. பாக்கியசாலிகள்."

"எப்படித் தெரியும்?"

"இடையிலே ஒரு சுவர்தானே! பேசுவது நன்றாகக் கேட்கிறது."

"அப்படியா? வரும்போது அவரும் அந்த அம்மாளும் தனியாகத்தானே வந்தார்கள்?"

"ஆமாம், ஆனால் குழந்தைகள் நினைவே தான் அந்த அம்மாளுக்கு; எப்பொழுதும் அதே பேச்சுத்தான்."

### இரண்டாம் அத்தியாயம்

"இதைக் கேட்டீர்களா?"

"எதை?"

"நேற்று சொன்னேனே......"

"ஒரு நாளைக்கு எத்தனையோ சொல்கிறாய், எதையென்று நினைப்பது?"

"அதுதான் பக்கத்து வீட்டு விஷயம்."

"ஓஹோ, அது சிறுகதையென்று முடித்து விட்டேன். தொடர்கதையா?... சொல்லு!"

"நீங்களே இங்கே வந்து கேளுங்கள், அவர்கள் பேசுவதை. நீங்களும்தான் இருக்கிறீர்கள். இப்படி ஒருநாள் பேசினதுண்டா? நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்."

"சரிதான்... இரண்டு பேரும் கொஞ்சுவதை அங்கே வந்து நானும் கேட்க வேண்டுமா...... ராம ராம......"

"இல்லை, குழந்தைகளைப் பற்றிப் பேசுகிறார்கள்...... நீங்களும் கேளுங்கள். பிறகாவது நம் பெண்ணைக் குரங்கு என்று பேசுவதை விடுகிறீர்களா, பார்க்கலாம்."

"சரி......... அந்த அம்மாளுக்கு என்ன வயசு இருக்கும்?"

"அதிகம் இருக்காது. பார்க்க லட்சுமி மாதிரி, துலக்கி வைத்த வெண்கலப் பாத்திரம் மாதிரி......"

"அந்த மனுஷன் கொடுத்து வைத்தவன்."

"நீங்கள்......?"

### மூன்றாம் அத்தியாயம்

"அந்த அம்மாளுக்கு அவர்களுடைய பெண்ணின்மேல்தான் கொள்ளை ஆசை."

"அவருக்குப் பிள்ளைமேல் பாசம்."

"உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"நேற்று சுவர் ஓரமாய்ப் படுத்திருந்தேன். அவர்கள் பேசுவது கேட்டது."

"பெயர்களைக் கொண்டு பார்த்தால்...... நிறையக் குழந்தைகள் இருக்கும் போல் தோன்றுகிறது."

"அந்த அம்மாள் சிறியவளாகத்தான் தெரிகிறாள்."

"இரண்டாந்தாரமோ, என்னமோ?"

"இருக்காது, பேசும்போது எத்தனை பரிவோடு பேசுகிறாள் குழந்தைகளைப் பற்றி!"

"அவர்கள் நல்ல மனிதர்கள் போலத்தான் இருக்கிறது."

"நம் பெண் அவர்கள் வீட்டுக்குப் போக அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும்."

"போடு சக்கை, பையனைப் பற்றி என்ன தெரியும் உனக்கு? அதற்குள் மாப்பிள்ளையாக்கிக் கொண்டு விட்டாய்?"

"எல்லாம் தெரியும். ஐ. ஏ. எஸ். கூட பாஸ் செய்து விட்டானும். கல்கத்தாவில் அவன் இருக்கிறான்."

"அவர்கள் நிஜமாகவே பாக்கியசாலிகள்."

"பெண்ணை அங்கே கொடுத்தால், நமக்கும் கொஞ்சம் அந்தப் பாக்கியம் கிட்டுமல்லவா?"

### நான்காம் அத்தியாயம்

"உஸ்... சத்தம் போடாமல் கேளுங்கள்"

பக்கத்து வீட்டில்:

"என்ன உன்னுடைய பெண் சுடிதாசே போடவில்லை?"

"ஆமாம், உங்கள் பையன் மட்டும் போடுகிறானே? அப்பா மாதிரியேதான்."

"ஏன், நான் உனக்குத்தான் எத்தனையோ கடிதம் போட்டிருக்கிறேனே..."

"அது சரி, உங்கள் அப்பாவுக்கு எத்தனை போட்டீர்கள்? அதுபோல் உங்கள் பையனும் அவன் மனைவிக்கு நிறையப் போடுவான்......"

"ஓஹோ, அப்படியா?.... அவனுக்கு ஒரு பெண் பார்க்க வேண்டுமே!"

"அவனாகவே பார்த்து விடுவான்....அப்பா மாதிரி......"

"பொய், நானொன்றும் பார்க்கவில்லை. நீதான் என்னைப் பார்த்துவிட்டாய்!"

"ஐய, சொல்ல வெட்கமாயில்லை...?"

"என்ன வெட்கம், உன் பெண் கூட..."

"உஸ்......... உரக்கப் பேசாதேயுங்கள். இடையிலே ஒரு சுவர்தான் இருக்கிறது. பக்கத்து வீட்டுக்காரர்கள் அவற்றைக் கேட்டு விடப் போகிறார்கள்......"

"ஏன், அவர்களுடன் சம்பந்தம் செய்ய யோசனையா? பையனுக்கேற்ற பெண் அவர்களிடம் இருக்கிறது......"

"அவர்கள் கொடுத்து வைத்தவர்கள்."

### ஐந்தாம் அத்தியாயம்

"என்ன, காது கொடுத்துக் கேட்டீர்களா? நாம் கொடுத்து வைத்தவர்களாம்."

''கேட்க வேண்டுமா......உன் அழகுக்கும், உன் பெண் லட்சணத்துக்கும்......''

''ஏன், என்ன குறைவாம்? அவளுக்கு ஐ. ஏ. எஸ். பிள்ளை கணவனாக வரப் போகிறானாக்கும். நினைவிருக்கட்டும்!''

''அந்த மனுஷன் ஒரு அசடு. இல்லா விட்டால் ராஜா போன்ற பைய னுக்கு உன்னுடைய பெண் ஏற்றவள் என்று சொல்லுவானா?''

''அது போகட்டும். வரதட்சிணை ஏராளமாகக் கேட்பார்களோ?''

''ஜாதக மெல்லாம் பார்த்து முடிந்து விட்ட தாக்கும். வரதட்சிணையில் தான் இப்பொழுது யோசனை!''

''அதெல்லாம் எதற்கு? பையனை மனசுக்குப் பிடித்துவிட்டது. அவர் களுக்கும் நம்முடைய பெண்ணை ரொம்ப ரொம்பப் பிடித்து விட்டது...''



''எதற்கும் ஒருமுறை அவர்களைப் போய்ப் பார்த்துப் பேசிவிட்டு வாருங்கள்.''

''பையன்கூட லீவில் வீட்டுக்கு வரப்போகி றான் போலிருக்கிறது. அதோ அவனைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள், பாருங்கள்!''

**பக்கத்து வீட்டில்:**

''ஐந்து வருஷங்களுக்கு மேலாகிறது அவனைப் பார்த்து.''

''இப்பொழுது எப்படியிருக்கிறானோ?''

''எப்படி யிருப்பான்? நான் உன்னைக் கைப்பிடித்த போது எப்படி யிருந்தேனோ, அப்படி யிருப்பான்.''

''அத்தனை அசடாகவா?''

''ம்... அத்தனை அழகாக!''

''ஓகோ, அப்படியா?... அவனைப் பார்த்து ஐந்து யுகமானது போல இருக் கிறது...''

''அவனுக்கு ஏழெட்டு வயசிலே.......''

''ஆமாம், பள்ளிக்கூடத் தில் கிருஷ்ணலீலா நாட கம் போட்டார்கள்.''

''இவன் தான் கண்ண னாக வந்தான். இல் லையா?''

''ஆமாம். வந்திருந்த அத்தனை பெண்களும் கண் கொட்டாமல் இவனைப் பார்த்துக் கொண் டிருந் தார்கள்.''

''ஏன்? நாம் அந்த யசோதையாக இருந் திருக்கக் கூடாதா என்று?''

''பொல்லாதவர்கள் நீங்கள். யசோதை யாய் வந்த அந்த வாத்தியாரம்மாள் அவனை அழைத்துக் கட்டி முத்தமிட்டாளே. அதைச் சொல்கிறீர்கள். இல்லையா?''

''ஏன் உன்பெண் மட்டும் என்ன, ஒருதரம் மேனகையாய் வந்தாளே ஒரு நாடகத்தில்.''

''ஆமாம், விசுவாமித்திரா நாடகத்தில்.''

''விசுவாமித்திரனாக வந்த பையன் கண் களை மூடியபடி தபசில் இருக்க வேண்டியவன். இவள் அழகைக் கண்டு கண்களை மூடவே மாட் டேன் என்று சத்தியாக் கிரகம்செய்துவிட்டான்.''

''இந்த ஆண்களே இப் படித்தான்.''

''எப்படித்தான்?''

''அழகைக் கண்டால் உபாசிக்கத் தொடங்கிவிடு வார்கள்.''

''பெண் என்ன தெய் வாம்சமா, உபாசிக்க?''

''இல்லை, மோகினி அவதாரம்!''

''மோகினியா?''

''மோகினிதானே பத் மாசுரனை அழித்தவள்?''

''தெரியுமே. பெண்களுக்கே அழிக்கும் சக்தி அதிகம்தான்.''

''ஆண்களுக்குப் படைக்கிற சக்தி இருக் கிறது போல.''

''நாம் படைப்பது மில்லை, அழிப்பது மில்லை.''

''அதுதான், நாம் வெறும் மனிதர்களா யிருக்கிறோம்.''

## ஆறும் அத்தியாயம்

''என்ன, அவர்கள் வீட்டுக்குப் போய் வருகிறீர்களா?''

''பையன் இன்னும் வந்து சேரவில்லை போலிருக்கிறதே!''

''அவன் வந்தால் என்ன, வராவிட்டால் என்ன? எதற்கும் முன்னால் ஒருநடை போய் விசாரித்து வாருங்கள். பெண்ணைப் பெற்றவர்கள் தானே நாம். போனால் ஒன்றும் குறைந்து போய் விடாது.''

''சரி...''

......................

''இது என்ன இப்படி இருக்கிறீர்கள்? போன இடத்தில்......''

''ஒன்றுமில்லை ... அவர் கள்...''

''ஏன் பெரிய இடத்தில் பெண் பார்க்கிறார்களா?''

''நாம் பைத்தியங்கள். அவர்களைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை.''



''ரொம்பக் கர்விகளோ?''

''இல்லை, மங்களம். நாம் ஒரு விதத்தில் கொடுத்து வைக்காதவர்கள்.''

''பெண்ணை அவர்களுக்குப் பிடிக்க வில்லையா, என்ன?''

''எந்தப் பெண்ணைச் சொல்லுகிறாய்?''

"எல்லாம் நம் பெண்ணைத்தான். அவர்கள் பெண்ணைச் சொல்வதற்கு எனக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?"

"அவர்களுக்கு ஏது பெண்?"

"இல்லையா?......என்ன நீங்கள் இப்படிப் பேசுகிறீர்கள்!"

"நான்தான் சொன்னேனே, நாம் அவர்களைத் தவறாக மதிப்பிட்டு விட்டோம் என்று!"

"நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லையே!"

"எனக்குக் கூடத்தான் முதலில் புரியவில்லை."

"எது?"

"அதுதான், அவர்கள் விஷயம்."

"ஏன், குடும்பம் நல்ல இல்லையா? பார்த்தால் அப்படித் தெரியவில்லையே!"



மங்களத்தின் முகத்தில் சோகத் திரை படர்ந்தது. இவ்வளவு நேரமும் அவள் எண்ணிய ஆசைக் கோட்டைகள் தகர்ந்துவிடும் போலிருந்தால் அவளுக்கு மனம் எவ்வளவு தூரம் இடிந்துபோய் இருக்கும்? பெண்ணைப் பெற்று அவளை நல்ல இடத்தில் சம்பந்தம் செய்து கொடுக்கிறவரை ஒரு தாயாருக்குள்ள கவலைகளை மற்றொரு தாயாரே உணர்வாள் அல்லவா?

மங்களத்தின் கணவர் ஒரு பெரிய பீடிகையைப் போட்டுக்கொண்டு தொடர்ந்தார்:—

"சொல்கிறேன் கேள். அங்கே போனேன். அவர் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தார். இந்த அம்மாள் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். இருவரையும் பார்த்ததுமே எனக்கு என்னமோ தோன்றியது, நாம் ஏதோ தவறு செய்து விட்டோம் என்று. அவர்கள் சிரித்த முகத்துடன்தான் வரவேற்றார்கள். என்னவெல்லாமோ பேசினோம். அந்த அம்மாள் கலகலவென்று பேசுகிறாள். கடைசியாகப் பேச்சு குழந்தைகளைப் பற்றித் திரும்பியது.



'உங்கள் பெண் ரொம்ப அழகாயிருக்கிறாள். பெற்றவள் மிகுந்த பாக்கியசாலி' என்று அந்த அம்மாள் சொன்னாள்.

'மருமகளாக்கிக் கொள்கிறவர்களும் கூடக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்' என்று அவர் சொன்னார்.

'உங்களைப் போன்றவர்களைச் சம்பந்திகளாகப் பெற நாங்கள்தான் அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும்' என்று நான் சொன்னேன்.

ஆனால், அந்த அம்மாள் முகம் வாடியது. கண்களில் நீர் முட்டியது. அவர் எங்கேயோ வெட்டவெளியை முறைத்துப் பார்த்தார்.

எனக்குப் புரியவில்லை. ஏதாவது தவறுதலாகக் கேட்டு விட்டோமோ என்ற அச்சம் என் உள்ளத்தில் எழுந்தது.

இந்தச் சமயத்தில் பக்கத்து வீட்டுக்காரர் மெதுவாக என் அருகில் வந்தார். அவர் என் தோளைப் பிடித்து வெளியே அழைத்து வந்தார். நான் திகைப்புடன் அவரைப் பின்தொடர்ந்தேன்.

**வா**சலுக்கு வந்ததும் அவர் மெதுவான குரலில், 'மன்னிக்கவும், நீங்கள் எங்களைத் தவறாகப் புரிந்துகொண்டு விட்டீர்கள்போலிருக்கிறது. பிள்ளையோ, பெண்ணோ பெறும் அத்தனை பாக்கியசாலிகள் இல்லை நாங்கள்' என்று கண்கலங்க, நாத் தழுதழுக்கச் சொன்னார்.

அப்பொழுதும் விளங்கவில்லை எனக்கு.

'அவள் நன்றாகத்தானிருக்கிறாள். ஆனால் குழந்தைப் பைத்தியம். பெற்று வளர்த்துச் சீராட்டும் புண்ணியம் செய்யவில்லை. அதே ஏக்கம். தான் பெறாத அந்தத் துன்பத்தைப் பேசிப் பேசிப் போக்கிக் கொள்கிறாள். அவள் கனவிலே வளரும் குழந்தைகள்தான் அந்தப் பையனும் பெண்ணும். ஐந்து வருஷமாக இப்படித்தானிருக்கிறாள். அவள் குழந்தைகளைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டால் நானும் பேசுவேன், அவள் திருப்திக்காக. இதுதான் உங்கள் காதுகளில் விழுந்திருக்கும். கொஞ்சிக் குழைந்து, கோமளக் கைகள் நீட்டி வாரி அணைக்கத் தாவி வரும் மணிவண்ணன் கண்ணன் போன்ற குழந்தைகள் அவளுக்கு இல்லை. கற்பனையிலே அவர்களைப் பெற்று வளர்த்துச் சீராட்டிச் சில சமயங்களில் அவர்களுக்குக் கடி மணமும் செய்து வைக்கிறாள்.' சொல்லும்போது அவர் கண்களில் நீர் துளித்தது. அவர்கள் உள்ளத்தில் எழுந்த தாபத்தையெல்லாம் வார்த்தைகளிலே கொட்டி விட்டார். நான் விடைபெற்று வந்து விட்டேன். இப்பொழுது என்ன சொல்கிறாய், மங்களம்?" என்று கேட்டார்.

"ம்..நாம் கொடுத்து வைத்தது............"

"...இல்லை, மங்களம். அவர்களைவிட நாம் உண்மையிலேயே பாக்கியசாலிகள்தான்!"



# பெற்றோருக்குத் தெரியும் . . .

கோபுரமும் கொடி மரமும் இணைந்த குன்றத்து உச்சியே கண்ணாகக் காவடி சுமந்து சென்ற சிவநேசச் செல்வர்களும் அந்த ஐந்து வயதுக் குமரன் படியேறி நடந்த அழகை ரசிக்காமல் முன்னேறவில்லை. சற்றே கீழ்ப் படிகளில் வந்து கொண்டிருந்த அதன் தாய் பாக்கியம் தன் கணவரிடம், "பழனி பஞ்சாமிருதமில்ல இந்தப் பச்சைப் புள்ளையை பத்துப் படி முன்னாடியே ஓடும்படி செய்யுது!" என்றாள். "வேலு!" என்று கூவினார் குழந்தையின் தந்தை நமச்சிவாயம். படியோரத்தில் விற்ற மரப்பாச்சிகளைப் பராக்குப் பார்ப்பதற்கு மட்டுமே நின்ற வேலுவின் கவனத்தைத் தற்சமயம் கவர்ந்தது வேறொன்று: சவலைக் குழந்தையொன்றைத் தூக்கிக்கொண்டு, தள்ளாடி ஏறிய ஒரு கிழவி!

பரிவோடு அணுகி நமச்சிவாயம் குழந்தையைத் தனது கையில் வாங்கிக் கொண்டு கிழவியின் இடுப்பைத் தளர்த்தினார். கூர்ந்து கவனித்த கிழவி, "அட நீ நம்ப ரூச்சுபாளையம் குப்பன் மவனில்ல!" என்றாள். நமச்சிவாயமும் கிழவியை அடையாளங் கண்டுகொண்டு, கிழவியின் மகன் நடேசன் சென்னையில் செளக்கியமாயிருந்ததை அறிவித்தார். பாட்டி சொன்னாள்:

"நடேசன் பிள்ளைதான் இது. ஆமாம், எம் பேரன். கிராமத்திலே இருந்த போதே இதுக்கு ஒடம்பு சீக்குதான். மகன் பட்டணம் கௌம்பினபோதே நான் கவலைப்பட்டேன். பெறகு இப்பத்தான் நானே போய் வந்தேன் பட்டணஞ் சீமைக்கி. எனக்குப் புடிக்கலே, தம்பி, பட்டணத்துப் பழக்கமெல்லாம்!"

"என்ன ஆச்சி, அப்படி சொல்லிப்புட்டீங்க?"

"பின்னென்ன. அங்கே, ஒரு பண்டம் நல்லதாக் கெடச்சாத்தானே. பால்கூட பழனி விபூதிக் கணக்கா டப்பியிலே போட்டு விக்கிது. செகப்பு முள்ளங்கியைப் பச்சையாத் திங்குது இது. ஆத்தா பாத்துக்கிட்டிருக்கா. கிராமத்திலே நம்ப ஊட்டுக் கூரையிலே சுரைக்காய் காய்க்குமே, எவ்வளவு நல்லா ரெதம் கறிபண்ணி..."

"இளந் தினமா சுரைக்காய்?"

"அதுக்கென்ன தம்பி கொறவு?...கேளு, நம்ப கொட்டிலிலேயே கறவை மாடு கட்டிக் கறந்து, பாலும் நெய்யுமா சாப்பிட்ட காலம் போச்சுதே! பட்டணத்திலே நெய், பால் எல்லாமே மோசடிதான் போ. அப்புறம், நானே தாங்காமெ, 'இதோ பாரு நடேசா, குழந்தை ஒடம்பு என்னுத்துக்கு ஆவும். இனிமே பழனியாண்டவன்தான் காப்பாத்தணும். நான் மலைக்கிப் போறேன், பையா, மாவிளக்கு ஏத்திக்கும்பிட!' இன்னு ஒருபாடா சொல்லிப்போட்டு குழந்தையைத் தோள்லே போட்டுக்கிட்டு கௌம்பிட்டேன். அட, போவறபோதாங் காட்டியும் பெசஞ்சுக்க அரிசிமாவு, வெல்லம், அதோடு எலவம்பஞ்சு எடுத்துக்

கிட்டு நெய்யைத் தேடினா, அந்த ஊட்டுலே நெய் இருந்தாத்தானே. அதுக்கும் அந்தப் போலி நெய் டப்பியைத்தானே கண்ணாலே காம்பிக்கிறா அவ..."

"ஏன் ஆச்சி. நெய் இல்லாட்டி சாமி வாணாம்னுடுமா?" என்றார் நமச்சிவாயம்.

"நீங்க ஒராண்டே. பிரார்த்தனை மாவிளக்குக்கு நெய் வாணுமா?" என்றான் பாக்கியம்.

"அது சரிதான், பாக்கியம். விளக்குக்கு நெய்தான் வேணும்னா எரிய விடட்டும் தாராளமா. ஆனா, சாப்பாட்டு விஷயத்திலே..." என்று இழுத்தார் நமச்சிவாயம். கிழவி ஓலமிட்டாள்:

"நமச்சிவாயம், நீகூட கெட்டுப் போயிட்டே பட்டணம் போயி. சப்பைக் கட்டு கட்டறியே டப்பி நெய்க்கி!"

நமச்சிவாயம் கூறினார்: "டப்பியிலென்ன பழுது? பழனி பஞ்சாமிருதம்கூட சீல் செய்த டப்பியிலே வருதே. இதோ கேளு ஆச்சி. சும்மா நெய் மட்டுமோ, சுரைக்காய் மட்டுமோ சாப்பிட்டா பலங்காணாது. சும்மாத்தானா பெரியவங்க பஞ்சாமிருதம்னு அஞ்சுங் கலந்து சாப்பிடச் சொன்னாங்க. உடம்புலே தெம்பு வரணும்னா நாலுங் கலந்து நல்லா சாப்பிடணும், தேகப் பயிற்சியும் செய்யணும். பிரார்த்தனை செய்ய வேண்டியது சரிதான் ஆச்சி, ஆனாலும் நம்ப முயற்சியைக் கைவிடக்கூடாது. ஆண்டவன் ஏன் மலைமேல் போய்க் குந்திக்கிட்டிருக்கார். முன்னூறு படி ஏறினாத்தானே முருகப்பெருமான் அருளு!"

"கிராமத்திலே இருந்தப்போ குழந்தை கேட்டதெல்லாம் நான் வாங்கித் தருவேன்—ஏண்டா சோணி, நீ கேட்டபோதெல்லாம் கடைலேருந்து வாங்கித் தாரலியா முறுக்கு!" என்றாள் கிழவி. களுக்கென பாக்கியம் சிரித்துவிட்டுச் சொன்னான்: "கடையிலே விக்கற முறுக்கா? சரிதான். இறந்தபடி ஆசிபடிஞ்ச கடைலே விக்கிற எண்ணெய்களிலே பண்ணிடுவாங்க. அதை வாங்கித் தந்தா ஒடம்பு ஏன் கெடாது?"

"அது சரி, டப்பி நெய்யி...?"

"ஆச்சி. அது நெய்யில்லே. டால்டா வனஸ்பதி. புத்தம்புது தாவர எண்ணெய்களிலேருந்து சுத்தமா தயாரிக்கிற தாவரக் கொழுப்புதான் 'டால்டா'! அசல் நெய்யிலே இருக்கிறமாதிரி சுட்சம்மா வைடமின் ஏ இங்கற தாதுப் பொருள் 'டால்டா'விலேயும் புகுத்தப்படுது; வைடமின் டீயும் புகுத்தப்படுது. அதனாலேதான், நோய் நொடி வராம ஆரோக்கியமா இருக்கவும், பல்லும் எலும்பும் திடமா வளரவும் உதவுது 'டால்டா.' பால் அதிகம் சேர்த்துக்கிட்டு, அதோட 'டால்டா'விலே எல்லாப் பலகாரங்களும் தயாரிச்சு, சாப்பிட்டுப் பாருங்க, ருசிக்கு ருசி, சோகத்துக்கு சோகம், செட்டுக்கு செட்டு!" என்று விளக்கினார் நமச்சிவாயம். குழந்தை வேலுவுக்காகக் கொணர்ந்திருந்த பொங்கலை வெளியே எடுத்து, கிழவிக்கும், பேரப்பிள்ளைக்கும் கொடுத்தாள் பாக்கியம். "நல்லாத்தான் ருசிக்கிது!" என்றாள் ஆச்சி.

"சந்தேகப்படாதே ஆச்சி. குழந்தை வேலு 'டால்டா'விலேயே வளர்ந்தவன். எம்மாங் துடியா மலையேறுறான் பாரு." என்றார் நமச்சிவாயம்.

பழனியாண்டவர் சந்நிதியில் குழித்த மாவிளக்கில் நெய்த்திரி சுடர்ந்து மலையேறி, தரிசனமும் பஞ்சாமிர்த அபிஷேகமும் முடித்துக் கொண்டு இறங்கி வந்தபோது ஆச்சியின் மனதில் ஓர் புதிய வைராக்கியம் தோன்றியிருந்தது. "குன்றுத் தவசியான குழந்தை குமரக் கடவுளை மீண்டும் அம்மையப்பரது பராமரிப்பில் ஒப்படைத்ததுபோல, இந்தக் குழந்தையையும் ஒப்படைத்துவிட வேண்டும். பெற்றோருக்குத் தெரியும் பிள்ளை வளர்க்க!"

இலக்கியச் செல்வம் 55

# மண்தானா?

பேராசிரியர்
அ. சீநிவாசராகவன்



தெருவிலே பிச்சைக்காரன் குரல் கேட்டது. பழைய பிச்சைக்காரன் தான், வழக்கமாக வரும் கிழவன்தான். அவன் பாடி வந்த பாட்டும், கேட்டுக் கேட்டுப் பொருளற்றுப் போன பழைய பாடல்தான்.

**காயமே இது பொய்யடா,**
**காற்றடைத்த பையடா.**

[ காயம் - உடம்பு ]

பொய்யோ என்னவோ, காற்றடைத்த பைதான் பாடியது.

**மாயனார் குயவன் செய்த**
**மண்ணின் பாண்டம் ஓடடா.**

மண்பாண்டமா, ஓடா? ஆமாம்.

**உப்பு மண்ணும் ஓட்டை மூங்கிலும்**
**ஒட்டி வைத்த கூடடா!**

எனக்கு எரிச்சலாக இருந்தது. வெளியே சென்று, விள்ளாமல் விரியாமல் இரண்டு நயா பைசாவை எடுத்துப் பிச்சைக்காரனிடம் வீசினேன்.

'தரும துரையே! நீ நல்லா இருக்கணும்' என்று என்னை வாழ்த்தி விட்டு அவன் நகர்ந்தான். நான் கொடுத்தது தருமமில்லை, தற்காப்பு என்பது அவனுக்கு எப்படித் தெரியும்? பக்கத்து வீட்டு வாசலில் நின்றுகொண்டு முன்னினும்உரத்த குரலில் அவன் பாடினான்:

**காயமே இது பொய்யடா**

காயம் பொய் என்று இந்தப் பாடல் கதறுகிறதே, அது ஒருவகையில் உண்மை தான். உண்மை என்றால் உள்ளது, எப்போதும் உள்ளது, நிலைத்து நிற்பது. உண்மைக்கு மாறானது பொய். ஆகவே, சில நாட்களில் அழிந்துபோகும் இந்த உடம்பைப் பொய்யென்று குறிப்பிடுவதில் தவறென்ன? தவறொன்றும் இல்லை. அப்படியானால், இந்தப் பாட்டைக் கேட்டதும் எனக்கு எரிச்சல் வருவானேன்? 'காயம் பொய்' என்ற உண்மையை ஏற்றுக் கொள்ளாமல், எரிந்து விழுவதும், இரண்டு நயா பைசாவினால் அந்த உண்மை காதில் விழாமல் தடுத்துக் கொள்ள முயல்வதும் அறிவுடைமை ஆகுமா?

இருங்கள். 'இந்தஉடல் விரைவில் அழிந்துபோகும் தன்மை உடையது. ஆகவே இது பொய்' என்று சொல்வதோடு நின்றால், 'கசப்பாகத்தான் இருக்கிறது. என்றாலும் மறுக்க முடியாது' என்று ஒப்புக்கொண்டு விடலாம். ஆனால் அதை மட்டுமா இந்தப் பாடல் பேசுகிறது? இந்த உடம்பு காற்றடைத்த பையாம், உப்பு மண்ணும் ஓட்டை மூங்கிலும் ஒட்டி வைத்த கூடாம்... அதாவது...

**ஊத்தைக் குழியிலே மண்ணெடுத்து**
**உதிரப் புனலிலே உண்டை சேர்த்து**
**வாய்த்த குயவனார் பண்ணும் பாண்டம்**
**வரையோட்டுக்(கு) ஆகாதென்(று)**
**ஆடு பாம்பே**

அதாவது, பொய் என்பது மாத்திரம் இல்லை, அது இருக்கின்ற சில நாட்களிற் கூட, இந்த உடம்பு ஒன்றுக்கும் உதவாதாம்.

வாழ்க்கை நிலையாதது என்பதில் தடை ஏதுமில்லை. ஆனால் அது பயனற்றது, ஆகவே பொய், வெறுக்கத் தக்கது என்ற குறிப்பு இந்தப் பாடலில் வருகிறதே, அதுதான் என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. நிலையாமையைப் பற்றி எவ்வளவு உண்மையோடு, எவ்வளவு கனிவோடு வள்ளுவர் பேசுகிறார்:

**நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை - என்னும்**
**பெருமை உடைத்து இவ்வுலகு**

'நேற்று இருந்தான், அப்பா, ஒருவன். அவன் இன்று இல்லை. இது இந்த உலகத்தின் பெருமை, அதன் தனிச் சிறப்பு' என்று வள்ளுவர் பேசும்போது, நிலையாமை என்ற கருத்து எவ்வளவு ஆழமாக அவர் நெஞ்சில் பதிந்திருக்கிறது என்பது தெரிகிறது. ஆனால், இங்கே நாம் இருப்பது சில நாட்களே என்றாலும், அந்தக் குறுகிய காலத்தில் நன்றாக வாழ முடியும், வாழ வேண்டும் என்

பதை வள்ளுவரைப் போல் வற்புறுத்தியவர் வேறு யார்?

**மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்**

என்பதை அவர் மறுத்திருந்தால், வாழ்க்கை நூலாகிய திருக்குறள் என்ற அற்புதத்தை அவர் இயற்றியிருப்பாரா?

வள்ளுவர் மட்டுமா, திருமூலர் என்ற ஞானி என்ன சொல்கிறார்? 'நிலையாமை சால நிலை பெற்றதன்றே' என்று, நிலையாமைத் தத்துவத்தை அவரும் பேசுகிறார். சாவைப் பற்றி அவர் குறிப்பிடும்போது, அவருடைய சொல்லுக்கு, இல்லாத தனி வேகம் ஒன்று வந்து விடுகிறது. அந்தச் சொல்லில், பிணக் கொட்டின் நெஞ்சை இடிக்கும் பயங்கரத்தை நாம் கேட்கிறோம்; அதிலிருந்து எழும் மயானப் புகையின் வீச்சில், நாம் மூச்சுத் திணறுகிறோம். நிலையாமையைப் பற்றி அப்படிப் பேசியவர் திருமூலர். வள்ளுவராவது 'வீடு' என்பதைப் பற்றி நேரடியாகப் பேசவில்லை. திருமூலரோ வீட்டை நோக்கித் தளராமல் நின்ற தமது மெய்ஞானப் பார்வையினால் இந்த உடம்பையும், உலகையும் இங்கே உயிர்கள் வாழும் வாழ்க்கையையும் அளந்து மதிப்பிட்டவர். அவர் கூட — அழிவின் அகண்டாகாரத்தை அழுத்தமாகக் கண்ட அவர் கூட — இந்த உடம்பு வெறும் மண், பயனற்றது, வரையோட்டுக்குக் கூட உதவாது என்று அதை ஒதுக்கித் தள்ளவில்லை. உயிரை விடுதலையை நோக்கித் திருப்புவதற்குப் பயன்படும் அருமையான பயிற்சி சாலையாகவே உடம்பை அவர் கருதினார்.

**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே.**

என்று உடம்பின் பெருமையை உயிரின் பெருமையோடு ஒன்று சேர இணைத்தே அவர் பேசினார்.

இப்படி எத்தனையோ பேர். இருந்தாலும், குருட்டுத் தத்துவம் பேசும் ஓட்டைக் குரல்கள், இன்றும், உடம்பையும், உலகையும் வெறும் மண், பயனற்றுப் பொடியாகும் புழுதி என்று பேசத் தலைப்படுகின்றன. ஏன் எரிச்சல் வராது?

அப்படி எரிச்சல் வந்தது மேல் நாட்டுக் கவிஞன் ஒருவனுக்கு. யாரோ ஒருவன் பேசினான், கவிஞனுடைய காதில் விழும்படியாக.

'மண், மண், புழுத்து அழிந்துபோகும் மண்' என்று இவ்வுலகையும், மனிதனையும் பற்றி அந்த அப்பாவி ஏதோ சொல்லி வைத்தான். அவன் சமயப் பிரசாரம் செய்யும் ஒருவன், சமய போதகர் என்று தன்னைச் சொல்லிக் கொண்டு, 'வாழ்க்கை என்பது மண், மண், மண்தான்' என்று கூச்சலிட்ட சாகுருவி. அவனுக்குக் கவிஞன் பதில் தருகிறான்:

**'புழுத்த புழுதி' என்றான் அவன்,**
**அந்த மதபோதகன்.**
**உலகம் விழித்தெழுந்தது.**
**என் காலடியிலே, செத்த கல்லும்**
**உயிர் பெற்றுச் சிலிர்த்தது.**
**என் உடலோ, அதன் ஒவ்வொரு அணுவும்**
**துடித்துப் பேசியது:**
**'யாரடா நீ?**
**விடிவில்லாத விசுவவெளிப் பாழில்**
**உன்னைத் தூக்கி எறியாமல்,**
**உன்னையும் பொறுமையாகத் தாங்குகிறதே**
**அவள் முகத்தை. இந்தப் பூமாதேவியின்**
**வதனத்தை.**
**மிதித்து வடுப்படுத்தும் கொடுமைப்பேயே,**
**வா, வந்து இதைக்கேள்.**



காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியுடன் மதராஸ் அட்வர்ட்டைசிங் கம்பெனியின் மானேஜரான ஸ்ரீ கே. ஜயராமன் அவர்கள் சென்ற டிசம்பர் மாதம் 15-ம் தேதியிலிருந்து ஒரு மாத காலத்துக்கு ஸஹஸ்ரபோஜனம் வேத விதிப்படி நடத்தினர். மேற்படி சத்காரியம் சென்னை கோபால புரத்திலுள்ள அவரது இல்லத்தில் நடந்தது. ஸ்ரீ ஜயராமன் அவர்கள் பாதப் பிரக்ஷாளனம் செய்வதைப் படத்தில் காணலாம்.

உன்னுடைய வெறும் புழுதி மடத்தை விட்டு
இங்கே வா! வந்து
இந்த உயிர்ப் புழுதியைப் பார்.
மண், மண் என்று ஓயாமல் கதைக்கிறயே
உன் பேச்சின் முடிவில்,
பேசாமல், ஒளிப் பிழம்பாய்ச்
சுடர்விடும் இம் மலர்களைப் பார்.
பாரடா!
வெள்ளை வெளேரென்று மின்னும் மலர்கள்:
இரத்தம் போல் சிவந்த பூக்கள்:
கற்கள்; கனல் போர்த்திய பாசி:
நீலத்தின் இமைப்பு:
தங்க நிறத்தின் சுடர் வீச்சு:
ஆம், புழுதியின் தரிசனம்,
இதைப் பார்.
பார்த்துக் கொண்டே போ!
போனால்... ஊர்க் கோடியில்
மரம் ஒன்றின் கீழே
சாளர விளிம்பின் நிழலிலே
அவள் நிற்பாள், எனக்குத் தெரியும்.
அங்கே, அந்தப் பெண்ணழகியின் கூந்தலிலே
வெயில் மின்னித் துவளும்.
அதைப் பாரடா! பார்த்தால்,
அட, களிமண் பிண்டமே,
கல்லை உண்ணும் கருங்கல்லே,
உன் செத்த காதிலே கூட
திருச் சின்னத்தின் முழக்கம் விழும்.

திருச் சின்னமா? ஆம்.
அன்றொரு நாள்,
தன்னேரில்லாத் தனிப் பெருஞ் சோதி
தேவர்களைப் பார்த்துப் பேசியது:
'அமர கணங்களே,
வானுலகம் இதைவிட வனப்புடையதாய்
சுடர் முகம் ஒன்றை,
புழுதியைக் கொண்டு, வெறும் புழுதியைக் -
கொண்டு
படைக்கப் போகிறோம்.'
அமரர் ஆர்த்தனர்:
சின்னம் பரிமாறினர்:
அந்த ஒலி,
மண், மண் என்று மடியும் மண்ணே,
ஊர்க்கோடியில் நிற்கும் அவளை நீ கண்டால்
அவள் கூந்தலில் வெயில் துள்ளுவதை -
நீ பார்த்தால்
உன் காதிலும் விழும்.
பிறகு முடிந்தால் பேசு,
உன் புழுதியைப் பற்றி *

இது ஆங்கிலக் கவிஞன் ஒருவனுடைய சௌந்தர்ய உணர்ச்சியும், காதல் உள்ளமும். 'இந்த உடம்பு ஒன்றுக்கும் உதவாத வெறும் புழுதி. உலக வாழ்க்கை வெறும் பொய், ஒரு பிடி சாம்பர்' என்ற குருட்டுத் தத்துவத்துக்கு அவன் தருகின்ற பதில்.

* G. K. Chesterton: The Praise of Dust



# கடமை

பெங்களூரில் அவனைச் சந்திப்பேன் என்று கனவிலும் எண்ணியவனல்ல நான். காரியாலய விஷயமாகப் பெங்களூருக்குப் போயிருந்த சமயத்தில் பஸவங்குடியில் இருந்த என் நண்பர் ஒருவரின் விலாசத்தைத் தேடும்போதுதான் ராகவமூர்த்தி எதிர்ப்பட்டான். ''பத்தாம் நெம்பர் வீடு எது ஸார்?'' என்று மூன்றாவதாக அவனைத்தான் கேட்டேன். முதலில் நான் விசாரித்த இரண்டு பேரும் தெரியாதென்று கன்னடத்தில் சொல்லி விட்டுப் போய் விட்டார்கள். எனக்குத் தெரிந்த அரைகுறைக் கன்னடத்தில் அவனை விசாரித்தேன். அவன் என்னை ஏற இறங்கப் பார்த்தவன் ''என்னடா? நீ குருவல்லவா? நீ எங்கேயோ பம்பாயில் இருந்தாயே. இங்கே எப்போது வந்தாய்?'' என்று பச்சைத் தமிழில் பதில் சொன்னவுடன்தான், நான் அவன் முகத்தை உற்று நோக்கினேன். ஆமாம், அவன் ராகவமூர்த்திதான். உடனே நானும் அவனும் ஒருவருக்கொருவர் குசலப் பிரச்னம் செய்து கொண்டோம்.

''சரி, சரி, இன்று நீ நம்ம வீட்டில்தான் சாப்பிடவேண்டும்'' என்று கட்டாயப் படுத்தி வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனான். 'காரியாலய அலுவலில் அவர்கள் செலவில் வந்துள்ளேன். தினப்படி 'படிச்செலவு' உண்டு. அதை வீணாக்கி விட்டு உன் வீட்டில் சாப்பிட மாட்டேன். அப்படி, இப்படி' என்று சாக்குப் போக்கு சொல்லியும் அவனிடம் பலிக்கவில்லை. நான் தேடிப் போன நண்பரின் வீட்டுக்கும் அவன் கூடவே அட்டைபோல ஒட்டிக் கொண்டு வந்து, கையுடன் என்னையும் அவன் வீட்டுக்கு அழைத்துப் போனான்.

வீட்டுக்குப் போனதும் ராகவமூர்த்தி என்னை, முன் அறையில் இருந்த ஆசனத்தில் அமர்த்தி விட்டு, உள்ளே சமையலறைக்குப் போனான். என் எதிரில் சுவரில் மாட்டியிருந்த படங்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன். அந்தப் படங்களில் ராகவமூர்த்தியின் திருமணப் புகைப்படமும் இருந்தது. ராகவமூர்த்தியின் மனைவியை எங்கேயோ பார்த்ததுபோல ஒரு நினைவு. உண்டாயிற்று. ராகவமூர்த்தியின் மனைவி அப்படி ஒன்றும் மீண்டும், மீண்டும் பார்க்கும்படியான மிகச் சிறந்த அழகியும் இல்லை. பெண் என்றாலே அழகு என்று ஒரு அர்த்தம் இருக்குமானால் அவள் 'மூக்கும் விழியுமாக' இருந்தாள். அழகைப் பற்றி என்ன சர்ச்சை. குடும்பப் பெண்களுக்குக் குணம் இருந்தால் போதாதா?

ராகவமூர்த்தி கன்னடத்தைத் தாய்மொழியாகக் கொண்டவன்தான். என்றாலும் அவனுடைய பெற்றோர் தமிழ்நாட்டிலேயே வசித்து வந்ததின் காரணமாக அவன் தமிழைச் சுத்தமாகப் பேசுவான். அவன் தாய்மொழி கன்னடம் என்று அறிந்தவர்கள் கூட அவன் தமிழில் குறை காண முடியாதபடி தமிழன். ஆகவே சென்னையில் என்னுடன் படித்தான். பின்னர் ஒன்றாகவே உத்தியோகம் பார்த்தான். எனக்கு ஒரு அதிர்ஷ்ட அலை அடித்து, பம்பாயில் தள்ளியது. பத்து வருடங்கள் கழித்து இன்று இவனைப் பார்க்கிறேன். ராகவமூர்த்தியின் அதிர்ஷ்டம் பெங்களூருக்கு அவனை மாற்றி விட்டது போலும். நாங்கள் பணியாற்றிய அதே ஆபீஸின் பெங்களூர் கிளைக்கு மாற்றி வந்து விட்டானாம். தாய்நாட்டையே அடைந்துவிட்டான். இனி அவன் சௌக்கியமாக இருப்பான் என்று எண்ணினேன். அவனுடைய வீட்டின் நிலை அவன் சௌக்கியமாக இருப்பதையும், அவன் மனைவி படித்த ஒரு நாகரிக யுவதி என்பதையும் நன்றாகக் காட்டியது.

அறையில் அடைசல் இல்லாமல், கச்சிதமாக ஒவ்வொன்றும் இருக்க வேண்டிய இடத்தில் இருந்தன. ஜன்னல்களில் அழகிய பின்னல் வலைகள் தொங்கின. படங்கள் வரிசைக் கிரமப்படி ஒழுங்காக இருந்தன. புத்தகங்கள், பத்திரிகைகள் அலமாரியில் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அது சிறிய அறைதான். எனினும் நேர்த்தியாகவும் விசாலமாவும் தோற்றமளித்தது.

உள்ளே சென்ற ராகவமூர்த்தி அரை மணி நேரமாகியும் வெளியில் வரவே இல்லை.





பின்னர் அவனே காப்பி கொண்டு வந்து கொடுத்தான். கொடுத்து விட்டுக் குடிக்கும் வரையில் பேசிக் கொண்டிருந்துவிட்டு மீண்டும் சமையல் அறைக்குள் சென்று விட்டான். என்ன, சமைக்கிறானா? அப்படியானால் அவன் மனைவி? ஒரு வேளை வீட்டில் இல்லையா? அந்தச் சமயத்திலும் தனியே திண்டாடி விருந்தோம்பலா? 'இது எதற்கடா?' என்று கேட்கவும், உள்ளே என்ன செய்கிறான் என்று பார்க்கவும் எண்ணி உள்ளே போக யத்தனித்தேன். அதே சமயம் உள்ளே ''தொடாதே என்றால் தொடக் கூடாது'' என்று இரைந்தது கேட்டது.

யாரோ ஒரு பெண்ணின் குரல்—அவன் மனைவியாகத்தான் இருக்க வேண்டும்—'' வந்திருப்பவர் எதிரில்கூட என்னை அவமானம் செய்யாதீர்கள் ''—என்று மெதுவான குரலில் கெஞ்சியது கேட்டது. குரல் மிகவும் இனிமையாக இருந்தது. இது என்ன போராட்டம்? அவர்களுக்குள் ஊடலா? அப்படியானால் இவன் ஏன் அவளைத் தொட விடமாட்டேன் என்கிறான்? எனக்கு ஒன்றுமே புரியவில்லை. மனத்தில் ஆயிரமாயிரம் கேள்விகள் எழுந்தன. இந்தப் புதிரை எப்படி விடுவிப்பது என்று தோன்றாமல் விழித்துக் கொண்டிருந்தேன்.

ஒரு பெண் உள்ளே இருப்பதை அறிந்து கொண்டு நான் உள்ளே போவது இங்கிதக் குறைவு என்று பேசாமல் இருந்தேன். பின்னர், ஏதோ தோன்றவே, ''ராகவா!...'' என்று கத்தினேன்.

என் குரல் கேட்டு ராகவன் வெளியே வந்தான். ''இதெல்லாம் என்னடா? என்னை உட்கார வைத்துவிட்டு நீ சமையலறையில் புகுந்து சமைக்கத் தொடங்கி விட்டாயா? வசதி இல்லை என்பதை நீ வந்துதான் அறிந்து கொண்டாய் என்றும் என்னிடம் சொல்லக் கூச்சம் என்னடா? இதெல்லாம் இயற்கையின் நிகழ்ச்சிதானே?'' என்று ஏதோ ஒரு போக்காகப் பேசினேன்.

''ஒன்றுமில்லேடா பேசாமல் இரு. குக்கரில் தான் சமையல் ஆகிறது. இன்னும் அரை மணிக்குள் தயாராகி விடும்'' என்று சொல்லி உள்ளேபோக யத்தனித்தான். ''இந்தாடா! நீ கஷ்டப்பட்டு எனக்கு விருந்து வைக்க வேண்டாம். நான் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொள்கிறேன்!'' என்று சொல்லி விட்டுப் புறப்பட எழுந்தேன்.

''கஷ்டம் என்ன? என்னுடைய நினைப்படி அது வல்தானே சமையல்!''

''அப்படியானால் உன் மனைவி...!'' என்று கேட்டு விட்டேன் என்னை அறியாமல்.

''இருக்கிறாள்'' என்றான் இடித்தாற்போல்.

''ஏன் உடம்பு சரியில்லையா?''

''குரு. என் கஷ்டம் என்னுடன் போகட்டும். நீ வேறு கேட்டு ஏன் கவலைப்பட வேண்டும்? என்னைப்பற்றி நீ தெரிந்து கொள்ளவே வேண்டாம்'' என்று ஒரு மாதிரி அலுப்புடன் சொன்னான் அவன்.

''சும்மா சொல்லு. கஷ்டங்களை நண்பர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டாமா?'' என்று கேட்டேன்.

''சரி உள்ளே வா! சமைத்துக் கொண்டே உனக்கு விவரித்துச் சொல்லுகிறேன்'' என்று சொல்லி உள்ளே போனான்.

நான் என்ன சொல்வது? அவனைப் பின் தொடர்ந்து சமையலறைக்குப் போனேன்.

நான் உள்ளே வருவதை அறிந்து, அவன் மனைவி வெளியேறினாள். வெளியே போகையில் ஒருமுறை திரும்பி ராகவமூர்த்தியை, தீனமாகப் பார்த்தாள். 'தயவு செய்து சொல்லாதீர்கள்' என்று கண்களாலேயே கேட்டுக் கொள்வது போலிருந்தது. அந்தப் பார்வை. ராகவமூர்த்தி உள்ளே சென்று அடுப்பின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். நான் அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டேன். ராகவமூர்த்தி சொன்னான்:

"குரு! இப்போது போனவள்தான் என் மனைவி. ஐந்து வருடங்களுக்கு முன்னர் கல்யாணம் நடந்தது. ஏதோ சிர்செனத்திலே எதிர்பாராமல் படித்த பெண் என்று மணந்து கொண்டேனடா. இவள் பெற்றோர் என்னை ஏமாற்றிவிட்டார்கள். இந்தப் பெண்ணுக்குத் தீராத வியாதி. அதை மூடி மறைத்து எனக்குக் கொடுத்து விட்டார்கள். பின்னர் நான் கண்டுபிடித்து விட்டேன்."

"என்ன வியாதி என்று டாக்டரிடம் காட்டி அறிந்து கொள்வதுதானே?" என்றேன்.

"எல்லாச் சங்கடமும் ஆகிவிட்டது. கோர்ட் வரையில் போய் வந்தாயிற்று. என் கஷ்ட காலம் கோர்ட்டும் என்னைத் திண்டாட வைத்து விட்டது. டாக்டரும், நீதிபதியும் அவளுக்கு வியாதி இல்லை என்று ஒரே குரலில் சொல்லி விட்டார்கள். ஆனாலும் எனக்கு என்னவோ மனம் ஒத்துக்கொள்ளவே இல்லை. இப்படியே ஒரு ஏற்பாடு. நான் சமையல் செய்து சாப்பிட்டுவிட்டு, மீதியை வைத்து விட்டுப் போய் விடுகிறேன். அவள் தானே சாப்பிட்டுக் கொள்கிறாள்."

"அப்படியானால் அவள் தொட்ட பாத்திரங்களை மட்டும் நீ தொடலாமா?"

"என்ன செய்வது? பிராப்தம். தண்ணீர், உணவு, இவைகள்தானே தொத்து வியாதியைப் பரவ விடுகின்றன?" என்றான் ராகவமூர்த்தி. எனக்கு என்னவோ ஒரேமாதிரியாகப்பட்டது இந்த ஏற்பாடு.

"இல்லையடா? நீ வியாதி என்று கண்டு பிடிப்பதற்கு முன்னால் ஏதேனும்......"

"கண்டுபிடிக்க ஏதேனும் துப்பறிய வேண்டுமா, அவளை முதன் முதலில் பார்த்தபோதே தான் தெரிந்து கொண்டு விட்டேனே. கல்யாணத்தில் எட்டு டஜன் வளையல்களை மாட்டி மறைத்து விட்டார்கள். என் வீட்டுக்கு வந்த அன்றைக்கேதான் கண்ணில் பட்டதே."

"என்ன......?"

"அந்த வெள்ளைத் தழும்புதான்.

"எங்கே......"

"இடது கை மணிக்கட்டில் ஒரு கடிகாரம் கட்டியதுபோல் வெள்ளை வெளேர் என்று இருந்த தழும்பை மறைத்துவிட முடியுமா?"

நான் அதைத் தொடர்ந்து ஏதும் கேட்கவில்லை. என் மனம் பழைய சம்பவம் ஒன்றில் சென்று லயித்தது. அப்போது நான் திருச்சியில் இருந்தேன். ஆலமர ஸ்டோரில் பத்துப் பதினைந்து குடித்தனங்களுக்கு நடுவில் நான் அப்போது குடியிருந்த நேரத்தில், அந்தக் குடித்தனங்களுக்குள் ஒருவராகிய ரங்கராவ் வீட்டில் இரண்டு பெண்கள். மூத்த பெண்ணுக்கு நாலு வயது; சின்னப் பெண்ணுக்கு ஒரு வயதுதான் ஆகியிருந்தது.

அந்த வீட்டு அம்மாள் வாணலியில் எண்ணெய் வைத்து ஏதோ செய்து கொண்டிருந்திருக்கிறாள். அந்தச் சமயம் வாசலில் யாரோ அழைத்தார்கள் என்று வாணலியை இறக்கி வைத்து விட்டு வெளியே போயிருக்கிறாள். அந்தச் சமயம் குழந்தை யாருக்கும் தெரியாமல் உள்ளே போய் வாணலியில் விஷமம் செய்து விட்டது. வாணலியிலிருந்த எண்ணெய் கையில் கொட்டிவிட்டது. குழந்தை அழுததைக் கேட்டு இந்த அம்மாள் உள்ளே ஓடினாள். எண்ணெய் குழந்தையின் கையில் பட்டு வெந்து விட்டது.

உடனே முதல் உதவிக்காகத் தேன் தடவி விட்டு, அதே வேகத்தில் அந்த அம்மாள், ஒரு காகிதத்தை எடுத்துக்கொண்டு எல்லோரிடமும் வந்தாள். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நல்ல நிலையிலுள்ள ஒரு ஸ்திரீ தர்மம் வாங்கப் புறப்பட்டு விட்டாளா என்று எண்ணினேன். என்னிடமும் அந்தக் காகிதம் வந்தது. படித்துப் பார்த்தேன். 'அடாடா!' என்ன ஜாக்கிரதை......அந்தக் காகிதத்தில்: 7-10-1939, திருச்சி, ஆலமர ஸ்டோரில் குடியிருக்கும், முகுந்தராவ் அவர்களின் குமாரர் ரங்கராவுக்கும், ருக்மிணி அம்மாவுக்கும் பிறந்த இரண்டாவது மகளான ஜோனுபாய் என்ற ஒரு வயதுக் குழந்தை கொதிக்கும் எண்ணெய் வாணலியில் விஷமம் செய்ததின் காரணமாக எண்ணெய் பட்டு இடது கையில் புண்ணாகிவிட்டதை நாங்கள் அறிவோம்" என்று எழுதி அந்த ஸ்டோரின் ஆண்கள், பெண்கள் அனைவரும் கையெழுத்திட்டிருந்தனர். நானும் கையெழுத்து செய்தேன். அந்த அம்மாளின் முன்ஜாக்கிரதை எனக்குச் சற்று விசித்திரமாகப்பட்டது.

ஆனால் இன்று ராகவமூர்த்தியின் மனைவியின் நிலையில் உள்ள பெண்களுக்கு அந்த அம்மாள் செய்தது போன்ற ஏற்பாடு எத்தனை உதவி செய்யும் என்று எண்ணினேன். என்ன செய்வது? எல்லோரும் ஜோனுபாயின் தாயைப்போல் கெட்டிக்காரிகளா, என்ன?

"அப்படியானால் இதே ஏற்பாட்டில் எத்தனை நாட்கள் இருப்பதாக உத்தேசம்?" என்று ராகவமூர்த்தியைக் கேட்டேன்.

"எத்தனை நாட்கள் என்ன? என்று நானோ அல்லது அவளோ சாகும் வரையில்..."

"சரிதானடா? ஒரே வீட்டில் இருந்து கொண்டு அது கட்டுமா?"

"கட்டாமல் என்ன? மனத்துக்குப் பிடிக்கவில்லை என்றால் ஒட்டாதுதான்."

"பிடிக்காவிட்டால் வேறு கல்யாணம் செய்து கொள்வது?"

"அதற்காகத் தான் கோர்ட்டுக்குப் போனேன். அவனும் எனக்குப் பாதகமாகத் தீர்ப்பு செய்து விட்டான். 'சரி, கடவுள் நமக்கு அவ்வளவுதான் கொடுத்து வைத்தான்!' என்று எண்ணிப் பேசாமல் இருக்கிறேன்" என்றான் ராகவமூர்த்தி.

இதற்குள் மணி ஒன்பதரை ஆகிவிட்டது. சமையலும் ஆகிவிட்டது. இருவரும் இரண்டு தட்டுகளில் உட்கார்ந்தோம். அந்தப் பெண் மெதுவாக வந்து, எடுத்துப் பரிமாற ஆரம்பித்தாள். ராகவமூர்த்தி, 'தொடாதே என்றால் தொடாதே! போய் விடு' என்று



வித்யாலய மாணவிகள் பரத நாட்டியம் ஆடுவதையும், வீணாகானம் பொழிவதையும் காணலாம். திரு என். கே. சுந்தரம் நன்றி தெரிவிக்கிறார். அருகே நிற்பவர் திரு பி. டி. ராஜன்.

ஸ்ரீ லக்ஷ்மி வித்யாலயம்—பரத நாட்டியக் கழகத்தின் ஆண்டு விழா கொண்டாட்டங்கள் திரு பி. டி. ராஜன் அவர்கள் தலைமையில் சென்னை மியூஸியம் தியேட்டரில் நடைபெற்றது. பல பிரபல பாடகர்களையும், சங்கீதக் கலையில் பேரறிஞர்களையும் இந்தச் சந்தர்ப்பத்தில் பாராட்டி விருதுகள் வழங்கினார்கள். திரு பி. டி. ராஜன் வித்யாலயத்தின் தொண்டுகளைப் பாராட்டினார்.

கத்தினான். அந்தப் பெண்ணின் கண்களில் கண்ணீர் தளும்பியது.

எனக்கு அந்தப் பெண்ணின் பார்வை பரிதாபமாகப் பட்டது. என்னை அறியாமல் என் கண்கள் அந்தப் பெண்ணின் இடது கைத்தழும்புக்கும், அவள் முகத்துக்குமாக அலைந்தன. அந்தப் பெண்ணின் முகத்தைப் புகைப்படத்தில் பார்த்தபோதே அறிமுகமானது போல ஒரு பாவம். நேரில் பார்த்தது அதை உறுதி செய்தது. எதையோ எண்ணிக் கொண்டு, "உன் மனைவி எந்த ஊரடா?" என்று கேட்டேன்.

"தஞ்சாவூர்" என்றான்.

"ஓகோ?...உன் மாமனார் பெயர்...?"

"ரங்கராவ்..."

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. ரங்கராவ் சரி, தஞ்சாவூர்...எனக்கு ஒரு துணிவும், ஒரு தீர்மானமும் ஏற்பட்டன.

"என்னம்மா? நீ ரங்கராவ் பெண்ணா?" என்று அவளையே கேட்டேன். அந்தப் பெண்ணின் முகத்தில் நாணம் படர்ந்தது. 'ஆம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தாள்.

"அப்படியானால் நீ ஸோனாவா? நாகுவா?"

"நாகு எங்க அக்காள்......?"

"அம்மா ஸோனா! என்னை உன் சகோதரனாக எண்ணிக் கொள். உன் தகப்பனாரும் நானும் ஒரே ஸ்டோரில் திருச்சியில் குடியிருந்தோம். உன் இடது கையைக் காட்டு."

அந்தப் பெண் தன் கையை என் முன் நீட்டினாள். ஆம்! அதே எண்ணெய்க் கட்டை தழும்புதான். "அப்படியானால் உன் தாயார் முன்னேற்பாடாக ஒரு கடிதத்தில் எழுதி வைத்துக் கொண்டாளே, அது கூட உன்னைக் காப்பாற்றவில்லையா?" என்றேன்.

"அதுதான் கோர்ட்டில் என்னைக் காப்பாற்றியது. ஆனால் இவர் மனக் கோர்ட்டில் அது நுழைக்கவில்லை..."

"அந்தக் கடிதத்தை வைத்திருக்கிறாயா?"

என் வார்த்தை முடிவதற்கு முன்னேயே அந்தப் பெண் தன் பெட்டியைத் தேடினாள். கண்ணாடி சட்டமிடப்பட்ட அந்தக் காகிதத்தை என்னிடம் கொடுத்தாள். பார்த்தேன். அதே கடிதம்தான். பதினைந்தாவதாக என் கையெழுத்து.

"என்னடா ராகவா! இந்தக் கடிதம் உன்னைத் திருப்திப் படுத்தவில்லையாடா?"

"இல்லை" என்று அவன் தலை அசைத்தான்.

"ஏன்?" என்றேன்.

"இதில் உள்ளவர் எவரும் கோர்ட்டுக்கு நேரில் வரவில்லை. அதன் காரணமாக இது ஒரு தயாரித்த தஸ்தாவேஜு என்று எண்ணினேன். தவிர இது திருச்சி விலாசம்" என்றான் ராகவமூர்த்தி.

"போடா, மூட்டாள். சந்தேகத்தால் ஒரு தங்கத்தை இழக்க இருந்தாயே. இதில் என் கையெழுத்து இருக்கிறதே. அது கூட உன்னைத் திருப்தி செய்யவில்லையா?"

"ஏண்டா! குருசாமி நீ ஒருவன்தானா? அதிலும் நீ திருச்சியில் இருந்திருக்கிறாய் என்று எனக்கு எங்கே தெரியும்?"

"அப்படியானால் இன்று நான் சொல்லுகிறேன். இந்தக் கடிதம் உண்மை தஸ்தாவேஜுதான். இந்தப் பெண்ணின் தாயார் இதைத் தயாரித்த சமயம் நாங்கள் சிரித்தோம். இன்று அதன் பயன் புரிகிறது. ஆனாலும் உன்னைப் போன்ற சர்வமுட்டாளை அந்தக் கடிதமும் காப்பாற்றவில்லை. சந்தேகத் தழும்பு மனத்தில் கொண்டு விட்டாய். உன் மனைவியின் உடலிலிருந்து தழும்பை எடுத்து விட என்னால் முடியாவிட்டாலும் உன் மனத் தழும்பை மாற்ற முடியும் என்று எண்ணுகிறேன்" என்றேன். ராகவமூர்த்தி பேந்தப் பேந்த விழித்தான். அவன் மனத்தில் என்ன போராட்டமோ?

"தழும்பு போடம்மா?" என்றேன். ஸோனா பரிமாறினாள்; ராகவமூர்த்திக்கும் தான். இப்போது அவன் முன் மாதிரி கத்தவில்லை. பேசாமல் இருந்தான். அவன் மனத் தழும்பு மறைந்து கொண்டிருந்தது!

நிலவளம் சிறந்தால்

# உணவு உற்பத்தி பெருகும்

155 லட்சம் டன்!
ஆம்; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இவ்வளவு டன் உணவு தானியங்களை அதிகமாக உற்பத்தி செய்தால்தான் நாட்டின் தேவைக்குச் சரிக்கட்டி வரும்.

இது இயலாத காரியமல்ல- நல்ல உரங்களிட்டு, நல்ல விதைகளையும் புதிய பயிர்த் தொழில் முறைகளையும் பயன்படுத்தி - நீர்ப்பாசன வசதிகளை அதிகமாக்கி, பயிர்த் தொழிலில் தீவிரமாக ஈடுபட்டால், இந்த அளவு உற்பத்தி செய்துவிட முடியும்.

நாடு முன்னேற - வளங்கள் பெருக
நிறைவேறுகிறது

# திட்டம்



# விசித்திரச் சலங்கை

- கதை -
வாண்டு மாமா
படம் ..... பாபு

11












திலகாவுடன் அரண்மனைக்கு வரும்படி வற்புறுத்திய மதிபாலனின் விருப்பத்துக்கு இணங்காமல் அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்புகிறான் தேவதத்தன்.

மந்திரவாள் யாருக்கும் பயனில்லாமல் போனதை அறிந்து மனமுடைந்த தீவன், சசாங்கனை மாதிக் கிராமத்தை நோக்கி வந்து கொண்டிருந்தான்.




தேவதத்தன் மஞ்சுளாவோடு மகிமையாக வாழ்வதைப் பார்த்துக் கொண்டிருக்க என்னால் முடியாது அவன் ஒழிந்தால் தான் எனக்கு நிம்மதி.


என்ன, ஏன் இப்படி எல்லோரும் அழுது புலம்பிக் கொண்டிருக்கிறீர்கள்? கிராமமே கலங்கிக் கிடக்கிறதே. என்ன விஷயம்?


வெண்கலக் கோட்டை ராட்சதன் தூமகேது சிறை வைத்திருந்த பெண்ணை நம் கிராமத்து மக்களில் யாரோ சிறை மீட்க உதவினார்களாம். ஆகவே அழகான பெண் ஒருத்தியை அவனுக்குத் தராவிடில் கிராமத் … தையே அழிப்ப … னும்.


கவலைப்படாதீர்கள். உங்களில் யாரும் தூமகேதுவுக்குச் சிறைப்பட வேண்டாம். அவன் விருப்பப்படி ஒரு அழகியையும் அனுப்பி வைக்கலாம். அப்படிப்பட்ட ஒருத்தி க … கேட்கிறேன்.


தேவதத்தன் வீட்டிலேயே ஒரு அழகுப் பெண் இருக்கிறாள் அவளை ராட்சதனுக்குப் பலியிடுவதில் நமக்கு எந்த நஷ்டமுமில்லை. வாருங்கள், போகலாம்.


தொடரும்



# பொல்லாத பொறுமை

"பொறுமை பொல்லாதது. பணக்காரனைக் கண்டால் ஏழைக்குப் பொறுமை; ஏழையைக் கண்டால் பணக்காரனுக்குப் பொறுமை. அறிவாளியைக் கண்டால், அறிவு அற்றவர்களுக்குப் பொறுமை; அறிவு அற்றவர்களைக் கண்டால் அறிவாளிகளுக்குப் பொறுமை. பொறுமை என்னும் இந்த வியாதி மக்களிடையே பரவாமல் இருந்தால், இவ்வுலகம் சொர்க்கமாகவே திகழும். பொறுமைக்கு இடம் தராதே!"

பரசுராமன் திருப்பித் திருப்பி இந்தப் பாராவைப் படித்துக் கொண்டிருந்தான். பொழுது விடிந்தால் பரீட்சை. அதற்காகத்தான் விழுந்து விழுந்து நெட்டுருப் பண்ணிக் கொண்டிருந்தான். என்ன படித்து என்ன? படித்த விஷயம் சரியாக மூளையில் ஏறினால்தானே?

பேரன் படும் சங்கடத்தைப் பார்த்த பாகீரதிப் பாட்டிக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. உலக அநுபவம் பெற்றவள் அல்லவா? "என்ன பாடம் எழுதியிருக்கிறான், மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்தான் என்று! குழந்தைகளுக்குப் புரியும்படியாக ஒரு கதையைச் சொல்லி விஷயத்தை விளங்க வைத்தால் அல்லவா நன்றாயிருக்கும்?" என்றாள்.

கதை என்ற சொல் காதில் விழுந்ததுதான் தாமதம்; பரசுராமன் புஸ்தகத்தை மூடி வைத்து விட்டான். "பாட்டி, பாட்டி! கதை சொல்லு. இந்தப் பாடம் எத்தனை தரம் படித்தாலும் மூளையில் ஏற மாட்டேன் என்கிறது!" என்று பாட்டியைத் துளைத்தெடுக்க ஆரம்பித்து விட்டான்.

பாட்டியும் வேறு வழியின்றிப் பேரனுக்குக் கதை சொல்ல ஆரம்பித்தாள்:

"மகேந்திரபுரி, மகேந்திரபுரி என்று ஒரு ராஜ்யம். அதிலே மாணிக்க வர்மர், மாணிக்க வர்மர் என்று ஒரு ராஜா. அந்த ராஜாவுக்குக் காளிங்கராயன், காளிங்கராயன் என்று ஒரு விதூஷகன்."

"தெனாலிராமன், இருவாழந்தான், பீர்பல் இவர்களைப் போலவா, பாட்டி?"

"ஆமாம், அவன் வேடிக்கையாகப் பேசினாலும் நாட்டுக்கு நல்லதையே சொல்லுவான். அரசர் தவறான வழியில் சென்றால், தனது பரிகாசப் பேச்சினாலேயே அவரைத் திருத்தி விடுவான். அதனால் அரசர் அவன்மேல் உயிரையே வைத்திருந்தார். எப்பொழுது பார்த்தாலும் காளிங்கராய ஸ்மரணைதான் அவருக்கு!"



"ஏன், பாட்டி! நீ ராம ஸ்மரணை பண்ணுவாயே, அதுமாதிரியா?"

"ஆமாம். அப்படியேதான் வைச்சுக் கோயேன்! நீ இப்படிக் குறுக்கே பேசினால் நான் கதையை எப்படி முடிக்கிறது?...... அரசர் காளிங்கராயனிடம் அவ்வளவு அன்பு வைத்திருக்கிறதைப் பார்த்து, மந்திரி பிரதானிகளுக்கெல்லாம் கூட, அவனிடம் பொறாமை பற்றிக் கொண்டு வந்தது. அவனைக் கண்டால் அவர்களுக்கு ஆக வில்லை. அவர்களுக்கு மட்டும் என்ன? பிச்சைக் குப்பனுக்குக் கூடக் கொஞ்சமும் பிடிக்கவில்லை!"

"யார் இந்தப் பிச்சைக் குப்பன்?"

"அவன்தான் அரசருக்கு முடிதிருத்து பவன். அவனது கைத்திறன் அரசரை மயக்கி விட்டது. அதனால் அவனுக்கு அள வுக்கு அதிகமாகவே இடங் கொடுக்கலானார். அரசரிடம் செல்வாக்கு அதிகரிக்கவே, அவனும் காளிங்கராயனைக் கரிக்கலானான். பொறாமை என்கிற விதை அவன் உள்ளத் திலே விஷ விருக்ஷமாக வளர்ந்து விட்டது. காளிங்கராயனை ஒருவிதமாக ஒழித்துக் கட்டி விட்டு, தான் அந்த ஸ்தானத்தைக் கைப்பற்றி விட வேண்டுமென்று தீர்மானித் தான்; அதற்கான தருணத்தையும் எதிர் பார்த்திருந்தான்.

"அன்று அரசர் மாணிக்க வர்மரின் தந்தைக்குச் சிராத்தம். காலஞ் சென்ற தந்தையின் நினைவாக அரசர் உட்கார்ந்திருந்தார். பிச்சைக் குப்பன் பின்னால் சென்று, 'மகாராஜா!' என்றான்.

அரசர் திரும்பிப் பார்த்தார். பிச்சைக் குப்பன் நின்று கொண்டிருந்தான். 'என்ன, பிச்சைக் குப்பா! இன்று வந்திருக் கிறாயே! என் தந்தையின் சிராத்ததின மாச்சே! நான் முடிதிருத்திக் கொள்வதற் கில்லையே!' என்றார் அரசர்.

'எனக்குத் தெரியாதுங்களா? நான் அதற்காக வரவில்லை.'

'பின் எதற்காக வந்தாய்?'

'இன்றைக்கு அதிகாலையில் ஒரு அதிசயக் கனவு கண்டேனுங்க!'

'அதிசயக் கனவா? என்ன கனவு அது?'

'காலஞ் சென்ற மகாராசா சொர்க்கத்திலே சுகமா யிருக் கிறாருங்க. பூர்வ சன்மத்திலே பண்ணிய புண்ணியத்தினாலே அங்கு தேவேந்திர மகா ராசாவுக்கே மந்திரியாம்!'






'அப்படியா? அப்புறம்?'

'என்னைக் கண்டதும் ஓடோடி வந்து நம்மைப் பற்றியெல்லாம் ரொம்ப ரொம் பக் கேட்டாருங்க.'

'அப்படியா? அவர் சௌக்கியமாக இருக்கிறார் அல்லவா?'

'சௌக்கியத்துக்கு ஒன்றும் குறை யில்லைங்க. ஆனாலும் அத்தனை பெரிய தேவேந்திரப் பட்டணத்திலேயும் அவருக்கு ஒரு குறை. மருந்துக்குக்கூட அங்கே ஒரு விதூஷகர் கிடையாதுங்க. கண்ணீர் விடாக் குறையாகக் கூறி, காளிங்கராயர் மாதிரி ஒருவர் இருந்தால், இன்பமாகப் பொழு தைப் போக்கலாமே என்றார்.'

'உண்மைதானே? சிரிப்பும் ஹாஸ்யமும் இல்லையென்றால் வாழ்வே கசந்துவிடத் தான் செய்யும்!' என்றார் மன்னர்.

' முடிந்தால் என் பிள்ளையிடம் சொல்லி ஒரு வருஷத்துக்காவது காளிங்கராயனை இங்கே அனுப்பிவைக்கச் சொல் என்றார்.'

'அதற்கு நீ என்ன சொன்னாய்?' என்று வியப்புடன் கேட்டார் அரசர்.

'வேறு என்ன சொல்லுவேனுங்க? போனதும் அரசரிடம் சொல்லிக் கட்டாயம் காளிங்கராயரை அனுப்பி வைக்கிறேன் என்று சொன்னேனுங்க!'

'பேஷ்! நீ கெட்டிக்காரன்தானடா, பிச்சைக்குப்பா!' என்று அவனைப் பாராட்டி மகிழ்ந்தார்.

'காளிங்கராயன் வரப்போகிறார் என்று நினைத்தமாத்திரத்திலே, அவர் கலகல வென்று சிரித்தாருங்க. அவர் சிரித்த சிரிப்பிலே என் கண்ணும் விழிப்புக் கொடுத்துவிட்டதுங்க!' என்றான் பிச்சைக் குப்பன்.

'அப்பா சொன்னபின் மாறு பேச்சு ஏது? இப்பொழுதே காளிங்கராயனைப் பிடித்துச் சொர்க்கத்துக்கு அனுப்பி வைக்கிறேன்!'' என்றார் அரசர்.

அரசருடைய பிடிவாத குணம் நன்கு தெரியுமாகையால், 'ஒழிந்தது சனியன்' என்று மனத்துள் மகிழ்ந்தவாறே பிச்சைக் குப்பன் வீட்டுக்கு நடையைக் கட்டினான்.

'விநாயகன் தொலைந்தான்' என்பதில் ஏற்பட்ட ஆனந்தம் அவனது கம்பீர நடையிலே தெளிவாகத் தெரிந்தது.

'' அப்புறம் என்ன ஆயிற்று?'' ஆர்வத்துடன் கேட்டான் பரசுராமன்.

''என்ன ஆகும்? அடுத்த வாரத்துக்குள் சொர்க்கத்துக்குப் புறப்படத் தயாராக வேண்டும் என்று காளிங்கராயனுக்கு உத்தரவிட்டு விட்டார் அரசர். காளிங்கராயன் எத்தனையோ சொல்லிப்பார்த்தான். உடலை விட்டு உயிர் போனால் ஒழியச் சொர்க்கத்துக்குப் போக முடியாதே என்று! அவன் சொல்லச் சொல்ல அவர் பிடிவாதம் தான் அதிகமாயிற்று. 'அதெல்லாம் எனக்குத் தெரியாது. அடுத்த வியாழக்கிழமை இரவு ஏழுமணிக்குள் நீ புறப்பட்டு விடவேண்டும். உயிரோடும் உடலோடும் சிதையில் நீ ஏறிவிட வேண்டியதுதான்' என்றார் மாணிக்கவர்மர் தீர்மானமாக.

'' காளிங்கராயன் என்ன செய்வான், பாவம்! 'பிழைத்தால் தன் புத்தி கொண்டு தான் பிழைக்க வேண்டும்' என்று தீர்மானித்தவனாய் வீட்டை அடைந்தான். விபத்து நாள் நெருங்க நெருங்க அவன் மூளை பலமாய் வேலை செய்தது!'' என்றாள் பாகீரதிப் பாட்டி. (அடுத்த இதழில் முடியும்)

# குருவி

தமிழழகன்

சிட்டுச்சிட்டுச் சிட்டெனத்தான்
சிட்டுக்குருவி கத்துதாம்;
திட்டம்போட்டு வட்டமிட்டே
இருடநெல்லைக் கொத்துதாம்!

சிட்டுச்சிட்டுச் சிட்டெனத்தான்
சிட்டுக்குருவி கத்துதாம்!......

பட்(டு)இறக்கை விரித்தபடிப்
பாய்ந்துமோட்டில் தாவுதாம்;
எட்டிப்பிடிக்கு முன்னமேயே
ஏய்த்துவிட்டுப் போவுதாம்!

சிட்டுச்சிட்டுச் சிட்டெனத்தான்
சிட்டுக்குருவி கத்துதாம்!......

நட்டநடுக் கிளையில்கூடு
கட்டிக்கிட்டுத் தொங்குதாம்;
'எட்டுத்திசை வானமெலாம்
என்உலகம்' என்குதாம்!

சிட்டுச்சிட்டுச் சிட்டெனத்தான்
சிட்டுக்குருவி கத்துதாம்!......

பொட்டுக்கண்ணைச் சாய்த்துசோளப்
பொறிகளைத்தான் தேடுதாம்;
கட்டுக்காவல் இல்லைஎன்றே
கர்வமாய்க்கூத் தாடுதாம்!

சிட்டுச்சிட்டுச் சிட்டெனத்தான்
சிட்டுக்குருவி கத்துதாம்!......

# தென்னாடெங்கும்
# இப்பொழுது
# நடைபெறுகிறது



ஜனதா பிக்சர்ஸ்

# மணமாலை

டைரக்ஷன்:
CH. நாராயணமூர்த்தி. B.A.

இசை:
வேதா

வசனம்:
விந்தன்

சென்னை நியூ குளோப், ராஜகுமாரி, மகாராணி & உமா

# பொன்னி எங்கே?

பொன்னி நதி சிலம்பொலியுடன் சிரித்துக் குதித்து ஆடிப் பாடிய வண்ணம் நாட்டிய மங்கை போல் ஓடிக் கொண்டிருந்தது. அங்கு அடித்த இளங் காற்றினால் காவேரி ஆற்றுத் தண்ணீர் கிளர்ச்சியுற்றுச் சிலிர்த்தது; வளைந்து சுழித்துப் பாய்ந்தது. சூரிய கிரணம் பட்டுப் பொன்னி நதி ஜோதிப் பிரகாசமாய் மின்னியது. வேகமாக ஓடும் தண்ணீரின் நாதம் அந்த வெளி எங்கும் நிறைந்து ஒலித்தது.

ஆற்றின் பட்டுப் போன்ற மார்பகத்தைக் காற்று அன்போடு தட்டிக் கொடுத்தது. சூரியன் தன் வெம்மைக் கதிர்களால் ஆற்றின் உடம்புக்கு வெதுவெதுப்பு ஊட்டியது. இந்தச் சரச ஆலிங்கனத்தால் காவேரி ஆறு சொக்கிப் போய்ச் சில இடங்களில் சலனமற்று அசையாமல் நின்றது. உடனே பெருமூச் செறிவது போல் துள்ளி ஓடியது.

நீண்டு குறுகலாக வளைந்து செல்லும் ஆற்றுக் குள்ளிருந்து புறப்படுவது போல் தூரத்தில் ஒரு கோயில் கோபுரம் தோன்றியது. காவேரி ஆற்றின் ஒரு திருப்பம் பக்கத்துக் கிராமத்துக் கோயிலைக் காவேரி வெள்ளத்தில் இறக்கியிருப்பதாகக் காட்டியது. அந்தக் கோபுரத்தின் அடிப் பாகம் தெரியவில்லை. நீலவானத்து ஒளிப்பரப்பின் கீழே நிர்மலமாய் ஓடிக்கொண்டிருக்கும் காவேரியை நோக்கிக் கிராமப்புறத்திலிருந்து மனத்துக்கு இதம் தரும் சுகமான காற்று வீசியது.

காவேரிக் கரையில் பல்வகை மரங்கள் இருந்தன. அந்த மரத்தின் நிழல்கள் ஆற்று நீரில் பலவிதத் தோற்றங்களில் காட்சியளித்தன. சில மரங்களின் கிளைகள் தண்ணீரைத் தொட்டுக் கொண்டிருந்தன. அது காவேரியைக் கை நீட்டி அழைப்பது போல் இருந்தது.

காவேரிக் கரையில இருந்த மர நிழலில் பொன்னன் காலை நீட்டிப் படுத்துக் கிடக்கிறான். அவனுக்கு அருகில் ஒரு புல்லாங்குழல் கிடக்கிறது. அவன் அந்தக் கிராமத்துப் பெரிய பண்ணையார் மகன் அவனைப் பார்த்தால் அசல் கிராமத்து விவசாயி போலவே காட்சி அளிப்பான். தலையில் முண்டாசும், இடையில் கட்டியிருக்கும் ஆடையும் அவனை எழுதப் படிக்கத் தெரியாத பட்டிக்காட்டான்மாதிரி நினைக்கச் சொல்லும். ஆனால் பொன்னன் படித்தவன்; பட்டம் பெற்றவன். உலகம் தெரிந்தவன். நகர்ப்புறத்து நாகரிக வாழ்க்கையை யெல்லாம் நன்கு அறிந்தவன். அதனாலேயே அவனுக்குக் கிராமம் மிகவும் பிடித்திருந்தது. கிராம மக்களுடன் தானும் ஒருவனாய், ஏழையோடு ஏழையாய் வாழ வேண்டும் என்பதற்காக இவ்வாறு எளிய முறையில் ஆடை அணிந்து கொள்வான். இதைப் பார்த்து அவன் பெற்றோர்கள் வருத்தப்படுவார்கள். விஷயமறியாத அவன் நண்பர்கள் வேதனைப் படுவார்கள். அவனை நன்கு அறிந்தவர்களோ அவன் உயர்ந்த பண்பை எண்ணி வியந்து போவார்கள்.

பொன்னன் சேற்றில் இறங்கி ஏர் பிடித்து உழுவான். மண்வெட்டி பிடித்துத் தோட்டம் கொத்துவான். வரப்பில் நின்று தெம்மாங்கு பாடுவான். குழல் எடுத்து அற்புதமாக ஊதுவான். கிராம மக்களுக்குப் பல வகையில் உதவி புரிவான். பொன்னன்மீது கிராம மக்கள் எல்லாருக்குமே மதிப்பும் மரியாதையும் உண்டு. ஆனால் பழைமையில் ஊறிய பெரியதனக்காரர்கள் எல்லாம் பொன்னனைக் கண்டு காய்வார்கள். ஊரின் கௌரவத்தையே கெடுத்து விடுவதாகக் குறைகூறுவார்கள். அப்படிக் குறை கூறுபவர்கள் கூடப் பொன்னனின் உயர்ந்த குணத்தை எண்ணி மனத்துக்குள் உண்மையாகவே பாராட்டி மகிழ்வார்கள்.

பெரிய பண்ணையின் நிலங்கள்தான் காவேரியின் இரு புறங்களிலும் கண்ணுக்கெட்டிய தூரம் காட்சி அளிப்பவை. வயல் வெளியைச் சுற்றிப் பார்க்க வரும் பொன்னன்தான் காவேரிக் கரைக்கும் வருவான். இப்போதெல்லாம் வயல் வெளியைவிடக் காவேரிக் கரையே அவனைக் கவர்ந்து இழுத்தது. பொன்னன் காவேரிக் கரையில் குப்புறப் படுத்துக் கொண்டு மோவாயை உள்ளங் கையில் தாங்கி யிருந்தான். கரையை ஒட்டித் தூரத்தில் மங்கித் தெரியும் ஊர்ப்புறமாக யாரையோ ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தான். வயல் வெளியின் மத்தியில் தெரிந்த ஒரு உருவத்தின்மீது அவன் கண்கள் இமையாது நிலைத்து நின்றன. அந்த உருவம் நெருங்க நெருங்க ஆனந்தத்தோடு அதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

மன நிறைவோடு அவன் புன்னகை புரிந்தான். இதோ பொன்னி வந்து கொண்டிருக்கிறாள். அவள் வருவாள்; சிரிப்பாள்; அவனுடைய இதயம் ஆசையால் விம்மித் துடிக்கும். தன் உருண்டு திரண்ட மென்மையான கைகளால் பலம் பொருந்திய அவன் கைகளைப் பற்ற வருவாள். அவள் தன் முத்துப் பற்கள் தோன்ற, 'கலீர்' என்று சிரிப்பதைக் கேட்டுக் காவேரிக் கரையில் இருக்கும் பறவை இனங்களெல்லாம் சிறகடித்துப் பறக்கும். தன் வீட்டில் நடக்கும் விஷயங்களை யெல்லாம் கொஞ்சிக் கொஞ்சிச் சொல்லுவாள். பிறகு இனிய குரலில் பாடுவாள். அது பொன் வீணை தமிழில் பாடுவது போல இருக்கும். அந்தப் பாட்டை, பொன்னன் நாதஸ்வரம் போன்று இருக்கும் தன்னுடைய புல்லாங் குழலில் ஊதுவான். அந்தக் குழலிசையில் பொன்னி தன்னை மறந்த லயத்தில் ஆழ்ந்து கிடப்பாள். மகுடியின் ஓசையில் மயங்கும்



சர்ப்பம்போலப் பொன்னனின் குழலிசையில் மயங்கி நெளிவாள். காவேரி பாயும் சோழ நாட்டு மண்ணில்தான் என்ன சக்திகள் இருக்குமோ? இசையை அறியாத மக்களே அங்கு இருக்க மாட்டார்கள். அங்குள்ள கல்லெல்லாம் கவி பாடும். மண்ணெல்லாம் சுரம் பாடும். புல், பூண்டு, மரம், கொடி, செடி எல்லாம் இசையை அனுபவித்து மகிழும். அப்படி இருக்கையில் பொன்னனும் பொன்னியும் இசையில் மூழ்கிக் கிடப்பதில் என்ன விந்தை இருக்கிறது? பொன்னன் குழல் ஊதுவதை நிறுத்துவான். பொன்னி இந்த உலகுக்கு வருவாள். அவன் கரம் பற்றிக் காதல் கீதம் இசைப்பாள். பிறகு காவேரிக் கரையில் உட்கார்ந்து நேரம் போவதில் நினைப்பின்றிப் பேசுவார்கள். காவேரித் தண்ணீரில் காலைத் தொங்க விட்டுக்கொண்டு பேசுவார்கள். கரையிலேயே கால் நீட்டி நிமிர்ந்து படுத்துப் பேசுவார்கள். கடைசியில் பிரிய மனமின்றிப் பிரிந்து செல்வார்கள். இப்படித்தான் ஒவ்வொரு நாளும் காவேரிக் கரையில் நடப்பது வழக்கம். மாலையில் சூரியன் மறையும் வேளையில் அவளைக் கொண்டு போய்ப் பொன்னன் ஊர்ப்புறத்தே விட்டு விட்டுப் போவான்.

அப்போதெல்லாம் அவள் அவனையே பார்த்துக் கொண்டிருப்பாள். அவனும் அவளையே பார்த்துக் கொண்டிருப்பான். அம் மாதிரி சமயங்களில் அவனையும் அவளையும் பார்க்க எவ்வளவோ வேடிக்கையாயிருக்கும்.

அன்று பறவைகள் கூட உற்சாகமில்லாமல் இருந்தன. சில பறவைகள் வான வெளியில் உணர்வற்று நீந்திப் பறந்தன. இரைக்காக ஒன்றோடொன்று போட்டிபோட்டுப் பாய்ந்து தாவும் மூர்க்கத்தனத்தைக் கூட அவை துறந்தன.

வயல் வரப்புகளில் புள்ளி மான் போலப் பொன்னி துள்ளித் துள்ளி வந்து கொண்டிருந்தாள். அவள் வரும் அழகைப் பார்த்துப் பொன்னன் புன்னகை புரிந்தான். அவள் அருகில் வரும் வரையில் அவனால் பொறுமையுடன் இருக்க முடியவில்லை. ''பொன்னி! பொன்னி!'' என்று கத்தினான்.

அந்தச் சத்தத்தைக் கேட்டு மரத்திலிருந்த பறவைகள் நிலைகுலைந்தன. படபடவென்று சிறகுகளை அடித்துக் கொண்டு பறப்பதற்குத் தயாராய் எழுந்து நின்றன.

''அத்தான்!'' என்று பொன்னியின் வீணையின் நாதம் போன்ற இனிய குரல் பரந்து கிடக்கும் வயலிலிருந்து வந்தது.

''ஏன் இன்று இத்தனை நாழி?''

சிரிப்புத்தான் பதிலாக வந்தது.

''பொல்லாத பெண்'' என்று வாய்க்குள்ளாகவே முணுமுணுத்துக் கொண்டு அவளை நோக்கி நடந்தான் பொன்னன்.

அவர்கள் இருவர் கரங்களும் ஒன்றை ஒன்று ஆசையோடு பிடித்துக் கொண்டன. கண்கள் என்னென்னவோ காதல் மொழி பேசின. பொன்னியின் முகபாவத்தில் ஆனந்தமும், சஞ்சலமும் கலந்து தோன்றின.

''நானும் பார்த்தேன், பார்த்தேன். என் மனசு கிடந்து தவித்தது. ஆனால் அப்பா எனக்கு என்னென்னவோ வேலை கொடுத்துக் கொண்டே இருந்தாங்க. நான் இங்கே வருகிறேன் என்பது தெரிந்தே எனக்கு வேலை மேல் வேலையாகக் கொடுத்தாங்க.''

பேசும் போது பொன்னி இரண்டு கைகளையும் பிசைந்து கொண்டே பேசினாள். அப்பொழுது கனிவும் ஒளியும் நிறைந்த அவள் கண்களைக் கண்டு குழம்பினான் பொன்னன்.

''எதையோ சொல்வதற்காக இப்படிப் பீடிகை போடுகிறாய்'' என்றான்.

அவள் பதில் சொல்லாமல் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''என்ன பதில் சொல்ல மாட்டாயா?''

''இதோ, சொல்லத்தான் போகிறேன்.'



''நம்முடைய திருமணத்துக்கு முன்னுலேயே நீங்கள் ஒரு முக்கியமான விஷயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். என்னுடைய பிறப்பின் ரகசியத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

இந்த வார்த்தைகளைச் சொல்லுவதற்குள் பொன்னிக்கு ஒரு தரம் உடலெல்லாம் வியர்த்து விட்டது. பொன்னனிடம் இதைச் சொல்லுவதற்கே அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆனாலும் இனம் தெரியாத ஏதோ ஒன்று அவளைச் சொல்லும்படி தூண்டியது.

''அப்படி என்ன உன் பிறப்பில் ரகசியம் இருக்கப் போகிறது?''

''நான்மணியக்காரர் மகளே இல்லை.''

''என்ன! உண்மையாகவா?'' என்றான்.

''ஆமாம்.''

''அது உனக்கு எப்படித் தெரிந்தது?''

''நான் உங்களைச் சந்திப்பதைப் பற்றி ஊரில் பலர் பலவாருகப் பேசிக் கொள்ளுகிறார்களாம். அதைக் கேட்டு என் அத்தை அப்பாவிடம் சொல்லி எனக்குச் சீக்கிரம் திருமணத்தை முடித்துவிட வேண்டும் என்று வற்புறுத்தினர்கள். அப்பொழுது அப்பா இந்த உண்மையைச் சொன்னர். 'உன் மகனுக்குப் பொன்னியைக் கொடுப்பதில் எனக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. அதற்குமுன் அவள் பிறப்பின் ரகசியத்தை நீ தெரிந்து கொள்ள வேண்டும்' என்று அத்தனை நாட்களாக எனக்குக்கூடத் தெரியாத அந்த ரகசியத்தைச் சொன்னர்.

''இதைக் கேட்டதும் அந்த அம்மாள் 'அப்படியா சமாசாரம்' என்று சொல்லி வந்த வழியே போய் விட்டார்.

''அத்தை சென்ற பிறகு அப்பா என்னிடம் உங்களைப் பற்றி யெல்லாம் விசாரித்தார். நீங்கள் என்னைக் காதலிப்பது உண்மையானல் என் பிறப் பின் ரகசியத்தையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். தெரிந்து கொண்ட பிறகுதான் திருமணத்தைப் பற்றிப் பேச வேண்டும் என்று சொல்லி விட்டார்.''

''உன் பிறப்பில் எந்த ரகசியமிருந்தாலும் எனக்குக் கவலையில்லை. இந்தப் பிறப்பில் நீதான் என் மனைவி. இந்தப் பிறப்பில் என்ன? எத்தனை பிறவி எடுத்தாலும் நீதான் எனக்கு மனைவியாக வாய்க்க வேண்டும். அது தான் என்னுடைய பிரார்த்தனை'' என்ருன் பொன்னன். அவன் குரலில் அசைக்க முடியாத உறுதி தொனித்தது.

பொன்னி நீண்ட பெருமூச்சு விட்டாள். எப்போதும் சிரிப்பு குமிழும் தன் காந்தக் கண்களால் பொன்னனைப் பார்த்தாள்.

பொன்னன் நிமிர்ந்து அவள் முகத்துக்கு முகம் நேராகப் பார்த்தான். அவளது ரோஜா நிறம்கொண்ட உருண்ட கன்னங்கள், துடிதுடிக்கும் பவள உதடுகள், புன் சிரிப்பினுல் அவை நெளியும் கோலம் எல்லாவற்றையும் பார்த்தான். அவள் அணிந்திருந்த அரக்கு நிறப்புடவை அவள் தங்கநிற உடம்புக்கு மிகப் பொருத்தமாக, அமைப்பாக இருந்தது. அவளுடைய உருண்டு வளைந்த தோள்களை அது மேலும் அழகாக, எடுப்பாக எடுத்துக் காட்டியது. என்றாலும் அவளுடைய கண்களில் மிதந்த சந்தேகத்தை மட்டும் அவனுக்குப் பார்க்கப் பிடிக்கவில்லை.

''நீ ஏன் திடீரென்று இம்மாதிரி பேசுகிறாய்?'' என்று இரங்கிய குரலில் கேட்டான்.

''கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர் அல்லவா? அதற்குமுன் ஒருவரை ஒருவர் நன்ருகத் தெரிந்து கொள்வது எல்லாருக்கும் நல்லது இல்லையா?'' என்ருள்.

''நல்லதுதான்.''

''அதனுல்தான் என் பிறப்பின் ரகசியத்தைச் சொல்ல விரும்புகிறேன். என்னுடைய தந்தையும் அதையே விரும்புகிருர்.''

''சரிசொல்லு. அது எனக்கு அவசியமில்லை. நான் உன்னை மனப் பூர்வமாகக் காதலிக்கிறேன். நான் ஆண் மகன். நீ பெண் பிள்ளை. அது ஒன்றே எனக்குப் போதுமானது. ஆனாலும் உன் மனத் திருப்திக்காகக் கேட்கிறேன்.''

''எனக்கும் தங்கள்மீது அவநம்பிக்கையே கிடையாது. என் இதயத்தில் தங்களைத் தவிர வேறு யாருக்கும் இடம் கிடையாது. ஆண்டவனே வந்தாலும் அதை மாற்றிவிட முடியாது. தாங்களே என்னை உதறித் தள்ளி விட்டாலும் நான் கன்னியாக வாழ்வேனே ஒழிய வேறு ஒருவனுக்கு மாலையிட மாட்டேன். ஆனாலும் என் பிறப்பின் ரகசியத்தைத் தாங்கள் முன்கூட்டியே தெரிந்து கொள்ள வேண்டும் என்பது தந்தையின் விருப்பம். இந்த உலகில் பெண்ணுய்ப் பிறந்து விட்டால் எவ்வளவு தொல்லைகள் இருக்கின்றன? கர்வம் பிடித்த மனிதர்கள் அவர்களை என்ன பாடுபடுத்தி விடுகிருர்கள் என்பதைப் பாருங்கள்'' என்ருள். சட்டென்று எழுந்தாள். சற்றுத் தூரத்துக்கு அப்பால் இருந்த சாப்பாட்டுக் கூடைக்கு அருகில் அமர்ந்தாள்.

மிக அதிசயமான கதையை எதிர்பார்த்தவனுய் ''அது என்ன என்றுதான் சொல்லேன்'' எனக் கெஞ்சினுன் பொன்னன். பிறகு அவளுக்கு எதிரில் போய் அமர்ந்து கைகளைக் கன்னத்தில் ஊன்றி ஒய்யாரமாகச் சாய்ந்து படுத்தான். பொன்னி தான் பிறந்த விசித்திரக் கதையைச் சொன்னுள். *

*** *** ***

எங்கும் ஒரே அமைதி. 'கருகும்' என்று இருந்தது இருட்டு. வானத்தில் நட்சத்திரம் கூடத் தெரியாமல் மேகக் கூட்டம் நிறைந்திருந்தது. இந்தப் பயங்கர இரவில் ஒரு ஜீவன்கூட வெளியே தலைகாட்டியிருக்கும் என்று சொல்ல முடியாது. தெரு நாய்களின் குரைலக்கூடக் கேட்க முடியவில்லை. உலகமே அமைதியாகத் தூங்குகிற வேளையில் அந்த வீட்டில் மட்டும் என்றும் எரிகிற பிரகாசமான

* இந்தக் காட்சியைத்தான் இவ்வார அட்டைப் படமாகச் சித்திரித்திருக்கிருர் ஓவியர் வினு.


தீண்டாமை எங்கே?
என்னிடமா?...என் ஆத்மாவிடமா?
சங்கரர் காசியில்
அப்போதென்ன சொன்னார்
சண்டாள பக்தனும்
தம் குரு வென்றார்.
—கவிஞர்
தமிழ்நாடு ஹரிஜன சேவக சங்கம்



# தேக ஆரோக்யத்திற்கு இன்றியமையாதது!

ஔஷத குணம் நிறைந்த சால்மூக்ரா தைலம் கலந்து தயாரிக்கப்படும் காவேரி சூபர் சோப் ஒரு உன்னத ஸ்நான சோப். கையடக்கமான ஸைஸ். எப்பொழுதும் நீங்கள் கேட்டு வாங்கவேண்டிய சோப் காவேரி சூபர் சோப்.




## காவேரி
## சூபர் சோப்

தயாரிப்பு:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.
மேட்டூர் அணை — சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிட்.

MC-389

---

## ரீடா மெக்கானிகல் ஒர்க்ஸ், லூதியானு

## ரீடா தையல் மிஷின்களின்

விலைகள்

## மிகக் குறைக்கப்பட்டுள்ளதை

அறிவிக்கிறுர்கள்

உங்கள் அருகாமையிலுள்ள டீலரை விசாரியுங்கள்




செவ்வனத் தைப்பது ரீடா

விளக்கு எரிவது நிற்கவில்லை. உலகமே ஓய்ந்திருந்தாலும் அந்த வீட்டில் இருக்கும் அவன் மட்டும் ஓயமாட்டான்.

இளங்கோவன்; ஆம், அவனை எல்லாருக்கும் இளங்கோவன் என்ற பெயரில்தான் தெரியும். வறுமையின் எல்லைக் கோட்டைப் பார்த்தவன். வாழ வழியற்ற நிலைமையில், வாழ மட்டுமல்ல, உயிரைத் தன் உடலில் ஊசலாடிக் கொண்டிருக்கும்படி செய்யக் கூடாத நிலையில் அவன் தன் சொந்தக் கிராமமான பூங்குளத்தை விட்டுச் சென்னைப்பட்டணத்துக்கு வந்தான். சாப்பாடு சாப்பாடு என்று ஏங்கி வாடி, ஒட்டிய வயிறுடன், கண்கள் குழி விழுந்து, கன்னங்கள் ஒட்டி அவன் தள்ளாடித் தள்ளாடி, சென்னை வந்து சேர்ந்தான். அன்றைய தினம் இளங்கோவனை யாராவது பார்த்தால் அவன் மீது இரக்கம் காட்டாமல் இருக்க முடியாது. எப்படியும் பிழைத்துக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கையில்தான் சென்னைக்கு வந்தான்.

சென்னை நகரில் யாரும் அவனை எதிர்கொண்டு அழைக்கவில்லை. அவனைப் பார்த்துச் சிலர் சோம்பேறி என்று தூற்றினர்; திருடன் என்று சிலர் வாழ்த்தினர்; 'வாட்ட சாட்டமான உடலை வைத்துக் கொண்டு வேலை செய்வதற்கென்ன' என்று கேட்டுத் துரத்தினர். அவன் பசியை உணர்ந்து யாரும் அவனுக்குச் சோறு போடுவார் இல்லை. அவனுடைய நொந்த மனத்துக்கு ஆறுதல் சொல்ல மனித மனம் படைத்தவர் யாருமில்லை.

இளங்கோவனுக்கு மனித குலத்தின்மீதே கோபம் வந்தது. அவனுக்கு மட்டும் சக்தி இருந்தால் சென்னை நகரையே சுட்டு எரித்திருப்பான். அதுதான் அவனிடம் இல்லையே! ஏழை; பாவம். தெரு நாய்போல வீதி வீதியாக, வீடுவீடாக அலைந்தான். கடைசியில் அவன்மீது ஆண்டவனுக்குக் கருணை பிறந்து விட்டது. மயிலாப்பூரில் இருந்த ஒரு தமிழாசிரியர் அவனுக்கு ஆதரவு தந்தார். ஆம், தமிழ் அறிந்தவர்கள்தான் ஏழைக்கு இரங்குவார்கள். ஏழையைக் கண்டு இரங்கும் பண்பு அவர்களிடம்தான் இருக்கும். அந்த உயர்ந்த பண்புதான் இளங்கோவனுக்கு இரக்கம் காட்டியது. தமிழ் ஆசிரியர் அவனுக்குச் சாப்பாடு போட்டார். தம் வீட்டிலேயே தங்க இடமும் கொடுத்தார்.



இளங்கோவன் தமிழ் ஆசிரியரைத் தெய்வம்போல் பார்த்தான். தன் நன்றியுணர்ச்சியைச் சொல்ல அவனுக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை. கண்களில் நீர் மல்கத் தமிழ் ஆசிரியர் திருப்பாதங்களில் விழுந்தான்.

காலில் விழுந்த வாலிபனை வாரி எடுத்துத் தேறுதல் சொன்னார் தமிழ் ஆசிரியர். ''இந்த உலகம் பெரியது. பயப்படாதே. தளராத தன்னம்பிக்கையும், ஊக்கமும், உழைக்கும் சக்தியும் இருந்து விட்டால் போதும். எதையும் சாதித்து விடலாம்'' என்றார்.

தமிழாசிரியர் வீட்டில் சாப்பிட்டுக்கொண்டு அவர் வீட்டுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தான் இளங்கோவன். அவன் தமிழாசிரியர் வீட்டுக்கு வந்த நாளிலிருந்து அவருக்கு வீட்டைப்பற்றிய கவலையே போய்விட்டது. தமிழாசிரியர் மனைவி இளங்கோவனைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடினாள். ஆனாலும் தமிழ் ஆசிரியருக்குப் பாரமாக வாழ அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. ஆகையால் ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் இளங்கோவன் வேலைக்காக எவ்வளவோ முயன்று பார்த்தான். ஒன்றும் பயன் கிடைக்கவில்லை. வயது அதிகமாகி விட்டபடியால் சர்க்கார் உத்தியோகத்துக்குப் போக முடியவில்லை. வியாபார ஸ்தாபனங்களில் வேலை பெறுவதற்கு வேண்டிய பெரிய மனிதர்கள் சிபாரிசு அவனுக்கு இல்லை. தமிழ் ஆசிரியர் சத்தியம் தவறாதவர். சில பெரிய மனிதர்களைப் போல அகட விகடம் பண்ணி வேலை வாங்கிக் கொடுக்கும் 'திறமைகள்' ஒன்றும் தெரியாதவர். அதனால் அவரும் சிரமப்பட்டார். இளங்கோவனும் அமைதி யில்லாமல் இருந்து வந்தான். தன் எதிர்காலத்தைப் பற்றிப் பல நாட்கள் யோசனை செய்தான். தமிழ் ஆசிரியரும் சிந்தனை செய்தார். கடைசியில் தமிழ் ஆசிரியர் இளங்கோவனுக்கு ஒரு வழி காட்டினார். அவனைப் பத்திரிகைகளுக்குக் கதை எழுத ஊக்கினார்.

ஓட்டை போட்ட மூங்கில்குழலில் தண்ணீர் வைக்க முடியாது. காரணம் அது ஓட்டையாகிவிட்டது. ஆனால் அந்தக் குழலில் உள்ள ஓட்டைகளின் மூலமாக அற்புதமான சங்கீத கானங்களை உண்டாக்கி இந்த உலகத்து மக்களை மகிழ்விக்கலாம் அல்லவா?

உருப்படியான காரியம் செய்து உழைத்து முன்னுக்குவர முடியாத உயிரற்ற மனிதனை உற்சாகம் தரும் இலக்கியத் துறையில் ஈடுபடுத்தி உயிருள்ள மனிதனாக்கலாம். மற்றத் துறைகளில் பொருள் சேர்க்கத் தெரியாதவன் பத்திரிகைகளுக்குக் கதைகளாவது எழுதலாம். இந்த யோசனையைத் தமிழ் ஆசிரியர் இளங்கோவனுக்குச் சொன்னார். இளங்கோவன் தன்னுடைய சோக வாழ்க்கையையே கதையாக எழுதித் தமிழ் ஆசிரியரிடம் கொடுத்தான். அதைப் படித்துவிட்டுத் தமிழ் ஆசிரியர் வியந்து போனார். இளங்கோவனின் கலை உள்ளத்தை, இலக்கிய ரசனையை வெகுவாகப் பாராட்டினார். கடைசியில் தமக்குத் தெரிந்த பத்திரிகை ஒன்றுக்கு அந்தக் கதையை அனுப்பி வைத்தார். இளங்கோவன் கதை பத்திரிகையில் வெளியாயிற்று. அது நன்றாக இருக்கிறதென்று மக்கள் பாராட்டினர். எழுத்துலகில் இளங்கோவனுக்கு ஒரு நல்ல இடம் ஏற்பட்டது. பத்திரிகை ஆசிரியர்கள் இளங்கோவனைத் தேடிச் சென்றனர். நாடகக்காரர்கள் அவன் கதையை நாடகமாக்கி மேடையேற்றினர்.

இளங்கோவன் மேலும் மேலும் பல கதைகளையும், நாவல்களையும் நாடகங்களையும் எழுதிக் கொட்டினான். பத்திரிகை உலகில் அவன் பெயர் அடிபட்டது. நாடக உலகில், சினிமா உலகில், ரசிகர்கள் மத்தியில் அவன் பெயர் அடிபட்டது. உணர்ச்சி நிறைந்த கதைகளை எழுதுவதில் அவனுக்கு இணை யாரும் இல்லை என்ற நிலை ஏற்பட்டது. அவன் இப்போது தமிழ் ஆசிரியர் வீட்டில் தஞ்சம் இருக்கும் இளங்கோவன் இல்லை. தன் சொந்த வீட்டில் வாழும் சுதந்திர எழுத்தாளன். அவன் வீட்டின் ஜன்னல் வழியே இரவெல்லாம் விளக்கு எரிவதைப் பார்க்கலாம். நாடகங்கள் எழுதுவதும், கவிதைகள் புனைவதும், கதைகள் இயற்றுவதும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும்.



ஏழ்மை இளங்கோவனைக் கடுமையாக உழைக்கச் செய்தது. இளமையில் அவன் பட்ட கஷ்டம் எல்லாம் இலக்கியத்தில் உயிர்த் துடிப்புடன் துலங்கியது. தமிழ் ஆசிரியர் அவனுக்கு இலக்கிய அறிவையும் போதித்து வைத்தார். அறிவும் அனுபவமும் ஆற்றலும் சேரச் சேர அவன் எழுத்து மேலும் மேலும் 'சோபிக்கத் தொடங்கியது. செல்வமும் புகழும் தானாக வளர்ந்தன. இளங்கோவன் இப்பொழுது செல்வம் நிறைந்த பெரிய எழுத்தாளன். உலகம் புகழும் அறிஞன். செல்வமும் புகழும் அவன் உடலுக்கு அழகைக் கொடுத்தன. முகத்துக்கு ஒரு களையையும் மினுமினுப்பையும் ஏற்றின. அவன் எழுதுகோல் மிகவும் சக்தி வாய்ந்ததாகி விட்டது. அவன் எதை எழுதினாலும் அதை விழுந்து விழுந்து படித்துப் பாராட்டுவதற்குப் பல்லாயிரக் கணக்கான வாசகர்கள் ஏற்பட்டு விட்டார்கள்.

மலரைச் சுற்றி வண்டுகள் மொய்ப்பது போல அவனைச் சுற்றி ரசிகர்கள் கூட்டம் முற்றுகை இட ஆரம்பித்து விட்டது. வயது ஏற்றத் தாழ்வின்றி ஆண்களும் பெண்களும் அவனுடைய அன்பைப் பெற முயன்றனர். நிறைந்த செல்வமோ, இணையற்ற புகழோ அவனுடைய உள்ளப் போக்கைச் சிறிது கூடமாற்றிவிட வில்லை.

கல்யாணம், காட்சி, பொழுதுபோக்கு இவையெல்லாம் அவன் மனத்தில் தோன்றாத எண்ணங்களாக இருந்தன.

''கல்யாணம் செய்துகொண்டால் என்ன?'' என்று கேட்டால் அதற்கு அவன் விசித்திரமாகப் பதில் சொல்லுவான்.

'' கல்யாணமா ? வேண்டவே வேண்டாம். நான் ஏற்கனவே ஒரு இலக்கியப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டேன். அவளுடன் போராடுவதற்கே எனக்கு நேரம் போதவில்லை. ஒரு உண்மையான பெண்ணையும் வேறு மணந்து கொண்டால் அவளுக்கு அடிமையாக இருக்க வேண்டும். நம்முடைய கஷ்டங்களை யெல்லாம் அவளிடம் மறைத்து வைக்க வேண்டும். உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளை உள்ளபடியே சொல்ல முடியாது. 'உலகத்தில் உன்னைப் போல் அழகுடையவள் ஒருத்தியும் இல்லை' என்று அவளை உண்மைக்கு மாறாகப் புகழ வேண்டும். இப்பொழுது யாருக்கும் அஞ்சாமல் மனத்தில் தோன்றும் எண்ணங்களை எல்லாம் எழுதிக் கொண்டிருக்கும் நான் ஒரு பெண்ணுக்குப் பயந்து எழுதவேண்டி வரும். அத்துடன் என்னுடைய இலக்கியப் படைப்பு முடிந்து போய்விடும். என்னால் மனத்தில் தோன்றுவதை எழுதாமல் இருக்க முடியாது. அதைத் தடை செய்வதைவிட என்னைக் கொன்றே போட்டு விடலாம். ஆகையால் எனக்குக் கல்யாணமே வேண்டாம்'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுவான்.

பெண்களைப் பற்றியும், கல்யாணத்தைப் பற்றியும் இப்படி அவன் ஏகத்தானமாகக் கூறினாலும் இளங்கோவனைப் பார்க்க வரும் பெண்கள் கூட்டம் மட்டும் அதிகரித்துக் கொண்டே வந்தது. எப்படியாவது அவன் அன்பைப் பெற வேண்டும் என்று அவனுடைய கதைகளை உருப் போட்டுக் கொண்டு வந்து அவனிடம் புகழுவார்கள். குறைந்தது அவனிடம் கொஞ்ச நேரம் பேசிவிட்டாவது போகலாம் என்று சில பெண்கள் ஆவலுடன் வருவார்கள். அவன் எழுத்தில் எப்படி எல்லாரும் மயங்கினார்களோ, அதேபோல அவனுடைய பேச்சிலும் எல்லாருக்கும் ஒரு கவர்ச்சி இருந்தது.

பெண்கள் மட்டும்தான் அப்படியா? இல்லை. படித்தவர்கள், பட்டதாரிகள், பண்டிதர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள் எல்லாருமே அவனை வியந்து பாராட்டினார்கள்.

அன்றுமட்டும் அவன பூங்குளம் கிராமத்துக்குச் செல்லாமல் இருந்து, அவளைச் சந்திக்கும் வாய்ப்பும் ஏற்படாமல் இருந்திருந்தால் இளங்கோவனுக்கு உண்மையான காதல் என்பது என்ன என்றே தெரியாமல் போயிருக்கும். பெண்ணின் பெருமையை, இல்லற வாழ்க்கையின் இன்ப சுகத்தை அறியாமலேயே அவன் அமரனாகி யிருப்பான்.

நகர்ப்புறத்தில் இருந்து அலுத்துப் போன அவன் மாறுதலை வேண்டிப் பூங்குளம் கிராமத்துக்குப் போயிருந்தான். அவன் கிராமத்தை விட்டுப் போய் எத்தனையோ ஆண்டுகள் ஓடி மறைந்து விட்டன. கிராமம் மட்டும் அன்று கண்ட மேனிக்கு அழியாமல் அப்படியே இருந்தது. ஆனால் அவன் அந்த ஊரில் இருந்தபோது வாழ்ந்த மனிதர்கள் யாரையும் காணவில்லை. காலத்தால் சிலர் மாறியும் மறைந்தும் போய் விட்டனர். அந்தக் கிராமத்தில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள்

அதிகம் இல்லை. அதனால் அவன் புகழை அறிந்தவர்கள் யாரும் இல்லை. ஆனாலும் எப்படியோ அவன் பெயரை மட்டும் எல்லாரும் தெரிந்து வைத்திருந்தனர்.

ஒரு நாள் கிராமத்தின் ஆற்றங்கரை யோரமாகச் சென்று கொண்டிருந்தான். ஆற்றங்கரையை ஒட்டியிருந்த தோப்புக்குள் ஒரு இளம் பெண் பசுவொன்றை மேய்த்துக் கொண்டிருந்தாள். அவள் ஆடையும், அலங்காரமும் அவள் ஒரு ஏழைப் பெண் என்பதை எடுத்துச் காட்டின. ஆனால் அவள் அழகோ சொல்லி முடியாது. இளமையும் எழிலும் நிறைந்த அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்த்ததும் இளங்கோவனின் இதயத்தில் ஏதோ ஒரு உணர்ச்சி ஏற்பட்டு விட்டது. அவளிடம் எப்படியாவது பேச வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டுவிட்டது. அவள் பெயர் என்ன? அவளை எப்படிக் கூப்பிடுவது என்று யோசனை செய்து கொண்டிருக்கும் போதே, அவள் பசுங் கன்றைப் போல் துள்ளிக் குதித்து ஓடி வந்தாள். அவள் காலிலே சேறு படிந்து கிடந்தது. இருந்தாலும் சேறு படிந்த அந்தப் பாதங்களில்தான் எத்தனை கவர்ச்சி! ஓடிவரும் அந்தப் பெண்ணின் அங்க அசைவுகளைப் பார்த்துத் தன்னை மறந்துவிட்டான் இளங்கோவன்.

"தாங்கள்தானே இளங்கோவன்? உங்கள் கதைகளையெல்லாம் நான் நிறையப் படித்திருக்கிறேன்" என்றாள் அவள்.

"உனக்குப் படிக்கத் தெரியுமா?"

"ஓ, நன்றாகத் தெரியும்!"

அந்தப் பேச்சில்தான் எத்தனை இனிமை! எத்தனையோ பெண்கள் தினம் தினம் வந்து அவன் அன்பைப்பெறப் பேசி இருக்கிறார்கள். அந்தப் பெண்களின் பேச்சில் இல்லாத இன்பத்தை இந்தக் கிராமத்துப் பெண்ணின் பேச்சில் கேட்டான். அவள் பேச்சைக் கேட்கும்போதெல்லாம் இளங்கோவன் இதயம் படபடவென்று துடி துடிக்கும். சிலசமயம் துடிப்பதையே நிறுத்தி விடும் போலிருக்கும். இப்படி அவன் தடுமாறிக் கொண்டிருந்தான். பட்டணத்து நாகரிகப் பெண்கள், இயற்கை அழகும் செயற்கை அழகும் நிறைந்த சிங்காரப் பெண்கள் அவன் முன் பசப்பித் தோற்றுவிட்ட காரியத்தை இந்தக் கிராமத்து ஏழைப் பெண் இரண்டே இரண்டு வார்த்தைகளால் சாதித்து விட்டாள்.



"உன் பெயர் என்ன?" என்று ஆவலோடு கேட்டான் இளங்கோவன்.

"மலர்விழி!" என்றாள்.

"மலர்விழி! மலர்விழி! ஆகா! என்ன அழகான பெயர்!" என்று சொல்லி அவள் நீண்ட கருவிழியைப் பார்த்து ஒரு பெருமூச்சு விட்டான் இளங்கோவன்.

மலர்விழியின் முகம் 'குப்'பென்று சிவந்தது. நாணத்தால் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டாள்.

"இத்தனை எழிலும், ஒயிலும் நிறைந்த உனக்கு ஏன் இந்தக் கஷ்டம்?"

"நான் இளமையிலேயே தாய் தந்தையை இழந்தவள்; ஒரு அநாதை. என்மீது இரக்கங் காட்டி என்னை எடுத்து வளர்த்து வருபவர் வீட்டில் ஒரு பெரியவர் எனக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தார்" என்றாள்.

"உனக்கு அங்கு என்ன வேலை?"

மலர்விழி சுற்றும் முற்றும் ஒரு தரம் பார்த்தாள். கண்களை மூடிக்கொண்டு தியானத்தில் இருப்பதுபோல் நின்றாள். கணீரென்று பாட ஆரம்பித்து விட்டாள்.

"'தோகைமே லுலவுங் கந்தன்
சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை!
வணங்குவ தெமக்கு வேலை!'

ஆமாம்; இதுதான் என் வேலை" என்றாள். தன் கண்களை மலர விழித்து இளங்கோவனை ஆசையோடு பார்த்தாள்.

இளங்கோவன் ஒரு கணம் அயர்ந்து போய் விட்டான். அவள் பாடிய அந்தப் பாரதியார் பாடலில் தன்னை மறந்து நின்றுவிட்டான். அவன் கண் முன்னால் தமிழ்த் தெய்வமான முருகன் தோன்றினான். அவன் சன்னிதியில் புது மணத்துடன் பொலியும் மலர்விழியைப் பார்த்தான். 'நான் செய்யும் வேலையை யெல்லாம் தெய்வத் திருப்பணியாகச் செய்து வருகிறேன்' என்பதை எவ்வளவு அழகாகச் சொல்லி விட்டாள். இவள் சாதாரணப் பெண் அல்ல; சேற்றில் மலர்ந்த செந்தாமரை, குப்பையில் விளைந்த குன்றிமணி என்று மனத்துக்குள் எண்ணினான்.

"என்ன அப்படி நிற்கிறீர்கள்?" என்று மலர்விழி கேட்ட போதுதான் இளங்கோவன் தன் உணர்வு பெற்றான். இந்த உலகுக்கு வந்தான்.

"அது சரி. இந்தப் பசு யாருடையது?"

"இதை மேய்ப்பதற்காகத்தான் இங்கு வந்தேன். இது என்னை அன்போடு வளர்ப்பவரின் செல்லப் பசு!" என்றாள்.

இளங்கோவன் அவள் அறிவுக் கூர்மையையும் அழகு பொங்கும் இளமையையும் இணைத்து அவளைப் பார்த்தான்.

"ஆச்சரியந்தான். மோசமான உடையிலேயே நீ இவ்வளவு அழகாக இருக்கிறாய். வெறும் காலோடு வயலிலும் வரப்பிலும், சேற்றிலும் மண்ணிலும் ஓடுகிறாய். இப்படி

ஓட வேண்டிய பாதங்களா அவை! பட்டுக் கம்பளம் விரித்த பங்களாவில் சொகுசாக நடை பயில வேண்டிய திருப் பாதங்கள் அல்லவா? நீ மட்டும் நடனமாடக் கற்றுக் கொண்டிருந்தாயானால் அழகு துள்ளும் அந்த மலர்ப் பாதங்களில் இந்த நாடே தஞ்சமடைந்திருக்குமே! இத்தனை அழகுடைய உன்னை இதுவரை யாரும் கல்யாணம் செய்து கொள்வதற்கு முயன்றதில்லையா?''

''இல்லை. என்னை யாரும் திருமணம் செய்து கொள்ள மாட்டார்கள். நான் எந்தச் சாதியைச் சேர்ந்தவளோ என்று என்னைத் துச்சமாக வெறுத்துப் பேசுகிறார்கள்.''

இதைச் சொல்லும் போது மலர்விழியின் முகத்தில் ஏக்கமும் சோகமும் படர்ந்தன.

இளங்கோவன் மலர் விழியைப் பார்த்தான். அவள் தலையிலிருந்து புரண்டு நெற்றியில் தொங்கிய கருண்ட கேசத்தைப் பார்த்தான். அதை அவன் தன் கரத்தால் ஒதுக்கி விட்டான். அவன் கைவிரல்கள் நெற்றியில் பட்டதும் மலர் விழி ஆவலுடன் அவன் முகத்தைப் பார்த்தாள். சிவந்த அவள் தோள்களும், ஒளிமிக்க அவள் கழுத்தும், அவள் உடற் கட்டும் இளங்கோவனை ஒரு கலக்குக் கலக்கி விட்டன. அவளை அப்படியே வாரி எடுத்துக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. கவிதை புனையும் கைகள் பரபர வென்றிருந்தன. அவன் பேசினான்:

''உன்னை நான் அழைத்துப் போய்க் கல்யாணம் செய்து கொள்கிறேன்'' என்றான்.

''அது எப்படி முடியும்?''

''ஏன், என்னை உனக்குப் பிடிக்கவில்லையா?''

''பிடிக்கவில்லை என்று யார் சொன்னது?''

''பின் ஏன் முடியாது என்கிறாய்?''

''இத்தனை காலமாக என்னைத் தம் சொந்தப் பெண்ணைப்போல் பேணி வளர்த்து வருபவர் சம்மதிக்க வேண்டாமா?''

''உன்னை வளர்த்து வருபவரிடம் உத்தரவு வாங்கி விடுகிறேன்.''

''என்னை அவர் விடமாட்டார்.''

''ஏன்?''

''அது எனக்குத் தெரியாது.''

''என் அன்பே! மலர்விழியே! யாருமே கவர முடியாத என் இதயத்தைக் கவர்ந்தவளே! உன்னைப் பிரிந்து என்னால் ஒருகணமும் இருக்க முடியாது'' என்றான். மூச்சு விடாமல் ஏதேதோ பேசினான்.

மலர்விழி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றாள். இளங்கோவனோ உணர்ச்சி வசப்பட்டுப் பேசிக்கொண்டே போனான். அவனுடைய உண்மையான பேச்சு மலர் விழியின் மனத்தை உருக்கிவிட்டது.

அவள் இளங்கோவனைப் பார்த்தாள். அவன் ஒளிபொருந்திய கண்களைப் பார்த்தாள். திடீரென்று ''நான் என்ன செய்வேன், இளங்கோவே!'' என்று கத்திய வண்ணம் மலர் விழி 'ஓ'வென்று அலறினாள். அவளுடைய அழுகைச் சத்தத்தைக் கேட்டு வெள்ளைப் பசு ஒரு துள்ளுத் துள்ளி அவனை நோக்கி வேகமாகப் பாய்ந்தது! (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## தமிழிலக்கணமும் உரையமைப்பும்

யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவந்திருக்கும் இந்நூல், தமிழ் பயிலும் மாணவர்களுக்கு உரைநடையை நல்ல முறையில் பிழையின்றி எழுதப் பயிற்சி அளிக்கும் நோக்கத்துடன் எளிய நடையில், எழுதப்பட்டுள்ளது. 427 பக்கங்கள் கொண்ட இந்நூல் மிகவும் விரிவாக அமைந்திருக்கிறது. வாக்கிய ஆக்க மரபு என்னும் பகுதியில் ஆரம்பித்து, கட்டுரை எழுதுதல், பெயர்த்துரை எழுதுதல், நயமெழுதுதல் என்னும் பகுதி வரையில் நல்ல ஆராய்ச்சியுடன் இந்நூல் எழுதி முடிக்கப்பட்டிருக்கிறது.

திருநெல்வேலிச் சைவாசிரியர் கலாசாலைத் தலைமைத் தமிழ் விரிவுரையாளரான பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை அவர்களின் அணிந்துரை இந்நூலின் சிறப்பை நன்கு எடுத்து இயம்புகின்றது.

இயற்றியவர் :-வ. பொன்னையா ; கிடைக்கும் இடம் :-யாழ்ப்பாணம் விவேகானந்த அச்சகம், யாழ்ப்பாணம் ; விலை : ரூ. 3-50.

## கைதி சொன்ன கதை

இந்நூலில் அடங்கியிருக்கும் ஐந்து சிறுகதைகளும் குற்றாலத்து ஐந்தருவியைப் போல் ஒலிக்கின்றன ; பஞ்சசீலக் கொள்கைகளைப் போல் சிறந்து விளங்குகின்றன ; ஒரு குத்துவிளக்கு ஐந்து முகங்களிலும் சுடர் விட்டு எரிவதுபோல் ஒளி வீசுகின்றன.

முதல் கதையான கைதி சொன்ன கதை தரத்திலும் முதல் கதையாகவே இருக்கிறது.

'' இளம் கனவான் '' எல்லோருடைய உள்ளங்களையும் வரிந்து ஈர்க்கும் ஒரு நல்ல கதை. அவன் இயல்பைப் பற்றி ஒரு குறிப்பைப் பாருங்கள் :—

'' அயராது அடிக்கும் கடல், பலப் பல வர்ணங்களாலான மலர் குலுங்கும் புஷ்பச் செடிகள், அதன் மத்தியில் ரீங்கார நாதத்துடன் தேன் குடிக்கும் வண்டுகள், கண்ணையும் கருத்தையும் கவரும் அழகிய மாடி வீடுகள், அதன் முன்புறத்தில் சிரத்தையுடன் வெட்டி விட்டிருக்கும் ஒன்றுக்கும் உபயோகமில்லாத சிங்காரச் செடிகள், நகரில் உள்ள விசாலமான வீதிகள், அதில் நவ நவமான ஆடை அலங்காரங்களுடன் நடந்து செல்லும் மனிதர்கள், மோட்டார் வாகனங்கள், அதற்குள் அமர்ந்திருக்கும் பெரியதனக்காரர்கள், இன்னும் வகுப்புவாதிகள், குழப்பவாதிகள், ஜனத் துவேஷிகள், தேசபக்தர்கள், தொழிலாளர்கள், தொழில் அதிபர்கள் எல்லாரும் எல்லாமுமே அவனுக்கு ஒன்றுதான்.''

'' கண்ணகியின் கடிதம் '' இன்ப முடிவைக் கொண்ட ஓர் இனிய கதை.

அதில் முக்கிய பாத்திரமான செல்லமுத்து, '' அல்லி! இப்பொழுது நான் வெறும் வறட்டுக் கூச்சல் போடும் தொழிலாளர் தலைவன் அல்ல. பகுத்தறிவுப் பிரசாரம் செய்யும் உணர்ச்சியற்ற பிரசாரகன் அல்ல. வாழ்க்கையை வாழ்ந்து காட்டப் போகும் செல்லமுத்து !'' என்கிறார். கதையின் முடிவில், கண்ணகியின் கடிதம் அவர் உள்ளத்துக்குச் சுளீரென்று சவுக்கடி கொடுக்கிறது.

'' அன்புள்ள அப்பா அவர்களுக்கு, நான் என்னுடைய கற்பைக் காப்பாற்றிக் கொண்டேன். ஆனால், உயிரைக் காப்பாற்றிக் கொண்டு உங்களுக்குப் பாரமாக வாழ விரும்பவில்லை.''

இந்தப் புரட்சிகரமான கடிதம் '' அல்லிக் குளம் வள்ளி '' யில் வருகிறது.

'' குயிலினி ''யும் சோகக் கதைதான். இதயம் கல்லும் சோகம் ஒரு சாதாரணச் சம்பவத்தின் பின்னணியாக நிகழுகிறது.

பாவம் ததும்பும் அட்டைப்படத்தை ஓவியர் மணியம் தீட்டியிருக்கிறார்.

ஆசிரியர் : பகீரதன் ; பிரசுரம் : கலைஞன் பதிப்பகம், தியாகராயநகர், சென்னை — 17 விலை : ரூ 2-00.

## அன்னையின் குரல்

தென்னாப்பிரிக்காவில், நேட்டாலில் பிறந்த ஆலன் பேடன் என்ற ஆசிரியர் எழுதிய நாவல் இது.

எத்துணை வலிமை வாய்ந்த தீய சக்தியையும் ஆத்ம பலம் கொண்டு முறியடிக்க முடியும் என்பதை இக்கதை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

பாசம் மிகுந்த தந்தைக்குப் பாதை தவறிச் செல்லும் பாவி மகனுமிருன். அவர் ஒரு பாதிரியார். தென்னாப்பிரிக்க நிறத் திமிரை எதிர்த்துப் போரிடும் புனிதப் பணியை மேற்கொண்டு அதற்காகத் தம் வாழ்வையே அர்ப்பணித்த ஒரு உத்தம புருஷரைக் கொன்ற குற்றத்துக்காக அந்தப் பாவி சிறைப்பட்டிருக்கிறான். அவ்வுத்தமர் வேறு யாருமல்ல ; பாதிரியாரின் ஊரை அடுத்துள்ள பண்ணை முதலாளியின் புதல்வரே அவர் — கொலை செய்தவனின் தந்தையும், கொலையுண்டவனின் தந்தையும் சந்திக்கும்போது ஏற்படும் மனித உள்ளங்களின் உண்மையான பிரதிபலிப்பு அற்புதமாக வெளியாகிறது. தென்னாப்பிரிக்காவைத் தங்கள் தாயகமாக உரிமை பாராட்டும் வெள்ளையரின் மனப்பான்மையும், கறுப்பரைப் பிரித்து வைக்கும் கசப்பான உண்மையும் விவரமாகக் கூறப்பட்டுள்ளன இந்நூலில். 475 பக்கங்கள் கொண்ட இம்மாபெரும் நூலைச் சரளமான தமிழ் நடையில் ஸ்ரீ சி. ஸ்ரீநிவாசன் மிகவும் அழகாக மொழிபெயர்த்திருக்கிறார். தென்மொழிகளின் புத்தக டிரஸ்டின் ஆதரவில் வெளிவந்திருக்கும் இப்பெரிய நாவல் மலிவுப் பதிப்பாக வெளியிடப்பட்டிருக்கிறது.

கிடைக்குமிடம் : ஜோதிநிலையம், திருவல்லிக்கேணி, சென்னை—5 ; விலை : ரூ. 3—00.

# பகல் சோறு

நேரம் நெருங்கி விட்டது என்பதை உச்சிப்போதின் கடுமை உணர்த்தியது. சந்தையிலிருந்து கறிகாய்ப் பையுடன் எல்லம்மா விரைந்து வந்து கொண்டிருந்தாள். நேரமாகி விட்டது. எஜமானருக்குக் கடைக்குச் சோறு எடுத்துக் கொண்டு செல்ல வேண்டும். வீடு நெருங்குவதற்கு முன்பே எஜமானி வாசலிலே நின்று சண்டை போடுவாள்.

இயல்பாகவே எல்லம்மா 'விசுக் விசுக்' என்று நடப்பாள். குட்டை, குடுவை போன்ற முகம். நாற்பது பிராயத்தைக் கடந்திருந்தாலும் தலை நரைத்து விடவில்லை. அவளுடைய நடை வேகத்தில் எலுமிச்சங்காய் அளவான தலை முடிச்சும் உடலும் ஆட, கையிலே தொங்கிய பை குலுங்க, உடல் அளவில் துன்பமறியாத சுகவாசிகளுக்குச் சிரிப்பைக் கூட ஊட்டினாள் என்று சொல்லலாம்.

கடைவீதி தாண்டி அவள் வருவதற்கு முன்னே கோட்டைப் பள்ளிக்கூடத்தில் மணியடித்தாயிற்று. அவள் திரும்பிக்கூடப் பார்க்காமல் சாலையைத் தாண்டுகையில், "அக்கா...! அக்கா...!" என்று பலமான குரல் கேட்டது.

மூச்சிரைக்க நின்ற எல்லம்மா, கூப்பிட்ட குரலுக்குரிய குழந்தைகளை, விழிகளை உருட்டிப் பார்த்தாள்.

எல்லம்மாளுக்குத் தங்கை பெற்ற செல்வங்களான சிறுமியும், சிறுவனும்தான் அவர்கள். எல்லம்மாளின் பிள்ளையில்லாச் சொத்துக்கு, உழைப்புக்கு அவர்கள் வாரிசு. பிக்கலில்லா வாழ்வில் அவளைப் பிணித்துக்கொண்டிருந்த விலங்கின் பூட்டுக்கள் என்றும் வைத்துக்கொள்ளலாம்.

"பள்ளிக்கூடம்விட்டா என் பின்னே ஏன் வாரீங்க? போங்க!" என்று அதட்டினாள்.

"இல்லே, அக்கா! பள்ளிக்கூடத்திலே சோறு போடறாங்க!" என்றான் பெரியவனான பையன்.

"போடறாங்கன்னு சொல்ல வாரீங்களா? போங்க......! போட்டா போய்த் தின்னுங்க..."



'இங்கே வந்த நேரத்தில் அங்கே சோற்றுக் கடை முடிந்துவிடப் போகிறதே. அறிவில்லாத மட்டிகளாக இப்படியும் பிள்ளைகள் இருக்குமா?' என்ற எரிச்சல் தொனித்தது அவள் குரலிலே.

"இல்லே அக்கா, பேர் எழுதலியாம். நீ வந்து சொல், அக்கா......"

ஏதோ ஒரு நிதியைக் கண்டுவிட்ட மகிழ்ச்சிக்கு அடைப்பானகத் தடை ஒன்று அமுக்கினதுபோல் செல்விக்குக் குரல் அடைத்தது. ஆள்காட்டி விரலைச் சட்டென்று வாயில் வைத்துக் கொண்டாள்.

எல்லம்மா ஒரு கணம் சங்கடத்துடன் திகைத்தாள். "நேரமாச்சுடா தம்பி, நேற்றே சொன்னேனே. வாத்தியாரம்மாகிட்ட சொல்லு. உங்க பேரையும் எழுதிக்கிடச் சொல்லி. ஏழைங்க. எங்க பேரையும் எழுதிக்கிடுங்கன்னு சொல்லு, கண்ணு......!" என்று சொல்லிக் கொடுத்தாள்.

"நான் சொல்லி விட்டேன், அக்கா! நீ வந்து சொன்னால் எழுதிக்கிடுவாங்க......"

வீட்டு வேலையில் கிடைக்கும் எட்டு ரூபாயும், காலை நீர்ச் சோறும், குடிக்கூலி கொடுத்து,

மூன்று உயிர்கள் வாழ்வதற்குப் போதுமான தாக இல்லை. பிள்ளைகளுக்கு எப்படியோ ஒரு வேளைச் சோறு கண்டால் எத்தனையோ பளு குறைந்து விடுமே?

எஜமானியின் சீற்றத்தை மறந்து, குழந்தைகள் பின்தொடர, அவள் 'விசுக் விசுக்' என்று பள்ளிக்கூடத்தை நோக்கி நடந்தாள்.




கொட்டகைக்குள் பிள்ளைகள் அதற்குள் சோற்றை விழுங்கிவிட்டுத் தட்டை எடுத்துக் கொண்டு தெருக் குழாய்க்குக் கிளம்பிவிட்டார்கள். வாத்தியாரம்மா ஒருத்தி, கொட்டகை மூலையில் இருந்த மேஜை-நாற்காலியில் அமர்ந்து ஒரு பெரிய நோட்டுப் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தாள். ஏழைமையைக் குறித்து எல்லம்மா விளக்க வேண்டிய அவசியமே இல்லை. குழந்தைகளின் தோற்றமும் உடையுமே போதும்.

வாத்தியாரம்மாளின் கவனம் திரும்ப ஐந்து நிமிஷம் ஆயிற்று. எல்லம்மா காய்கறிப் பையை ஓரமாக வைத்துவிட்டு, பயந்து நடுங்கியபடியே பல்லைக் காட்டி அவளுக்குக் கும்பிடு போட்டாள்.

"......ரொம்ப ஏழைங்க, அப்பன் ஊதாரி. வீட்டைக் கவனிக்கிறதில்லே...இதுங்க ரெண்டு பேரையும் பகல் சோறுக்குச் சேர்த்துக்கிடுங்கம்மா, உங்களுக்குப் புண்ணியமுண்டு......"

செல்வி சோறே வந்துவிட்டாற்போல எச்சிலைக் கூட்டிக் கொண்டாள். அண்ணனைத் தெம்புடன் பார்த்தாள். இன்று சோறு இருக்குமோ இருக்காதோ என்ற கவலையுடன் அண்ணன் வாத்தியாரம்மாளின் முகத்தைப் பார்த்தான். வாத்தியாரம்மாள் அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"புதிசா வந்து சேர்ந்திருக்காளா?"

"ஆமாம்மா! ஆனைகவுனியண்டை பட்டணத்துப் பள்ளிக்கூடத்திலே இருந்ததுங்க. நேற்றுத்தான் கூட்டியாந்து சேர்த்து விட்டேன். இதுங்க ஆத்தா குளிகுளிக்க லேவடியாக் கிடக்குது. ஒரு வேலை வெட்டி செய்யவும் வழியில்லே. உங்களுக்குக் கோடி புண்ணியம் அம்மா......"

எல்லம்மா வாத்தியாரம்மாளின் காலில் விழக்கூடத் தயாராக இருந்தாள்.

"நீ என் காலிலே விழுந்து என்ன செய்வது? என்னால் எதுவும் செய்ய முடியாது. பகல் சோறு இந்த மாசத்திலிருந்துதான் ஆரம்பிச்சிருக்கிறாங்க. நூறு பிள்ளைகளுக்குத்தான் சோறு கணக்கு. இப்போதேகூட இருபது பிள்ளைகள் வந்து எழுதியிருக்கிறார்கள். நீ வேணுமானால் ....." என்று வாத்தியாரம்மாள் இழுத்தவண்ணம் செல்வியையும், முருகனையும் பார்த்தாள். மனசு இளகியிருக்க வேண்டும்.

"வேண்டுமானால், பெரிய ஐயாவைப் பார்த்துக் கேள். மெத்தை வீட்டுப் பெரிய ஐயான்னு, யாரும் சொல்லுவாங்க வீடு. அவரிடமிருந்து காயிதம் வாங்கி வா. பதிவு செய்கிறேன்......" என்றாள்.

எல்லம்மா மருண்டாற்போல் நின்றாள்.

மெத்தை வீட்டுப் பெரிய ஐயாவைத் தெரியாமல் அந்த ஊரில் எப்படி இருக்க முடியும்? அந்தப் பட்டம் அந்த ஊரிலே ஓட்டு வில்லை வீடுகளும் குடிசைகளுமாக இருந்த காலத்திலே இரண்டு அடுக்கு வீடு கட்டிக்கொண்டு அவர் ஊன்றிய நாளிலிருந்து நிலைத்து இருக்கிறதே? உண்மையில் அந்தக் கிராமம் இன்று பட்டணத்து வாசனைகளுடன் முன்னேறியிருக்கவே அவர்தாம் காரணம் என்பதையும் அவள் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறாள். மார்க்கெட், பூங்கா, பள்ளிக்கூடம், ரோடு, பஸ் எல்லாவற்றிலும் அவர் சம்பந்தப்பட்டிருக்கிறார் என்றும் அவளுக்கு எட்டியிருந்தது. இந்தப் பகல் சோறும் அவர் ஏற்பாடுதானோ? புண்ணியவான் என்று நினைத்த அவளுக்கு, அவர் தான் வேலை செய்யும் வீட்டு எஜமானருக்கு நண்பர், அடிக்கடி வீட்டுக்கு வருவார் என்ற நினைப்புங்கூட எழுந்து, எஜமானி அம்மாளின் கோபத்தைப் பற்றிய கவலையை ஓட்டிவிட்டது. வாத்தியாரம்மாளுக்கு மறுபடியும் கும்பிடுபோட்டு விடை பெற்றுக்கொண்டு அவள் வெளியே வந்தாள். கறிகாய்ப் பையைக் கைமாற்றிக் கொண்டு, இடுப்புச் சுருக்குப் பையை எடுத்து ஆளுக்குக் காலணா வீதம் கொடுத்தாள்.

"போங்க, எதினாலும் வாங்கித் தின்னுங்க. சாயங்காலமா பேர் எழுதக் காயிதம் வாங்கிட்டு வாரேன்" என்றாள்.

செல்விக்குக் காலணாவைக் கண்டதுமே ஆவல் முகத்தில் துள்ளியது. முருகனோ,



"இந்தத் தள்ளாத வயதிலே அவருக்கு நேர்ந்ததைப் பார்த்தீரா? கார் இல்லாமல் அவர் வெளியில் கிளம்புவதே கிடையாது, சார்!"

ளனுக்கு வயிறு நிறைய என்ன வாங்கலாம் என்று பெரியவனாக லட்சணமாக யோசனை செய்தான்.

முருகனுக்கு முகம் ஒட்டி, கண்கள் பள்ளத்தில் போயிருந்தன. அவனுக்கு மகிழ்ச்சியும் சிரிப்பும் வந்தால்கூட, பல்லைக்காட்டுவானே ஒழிய, அந்தப் பரிதாபமான பாவம் போவதேயில்லை. செல்வி அப்படியில்லை. ஏழைமையிலும், பிழைத்துக் கொள்ளும் தைரியத்தைக் காட்டும் முகம். இரண்டு அடி கொடுத்தாலும் சுருண்டு விழ மாட்டாள்; தாங்கிக் கொள்வாள். பழையதோ, புளித்ததோ, ஊசியதோ எதைப் போட்டாலும் அவள் குடல் தாங்கிக் கொள்ளும். முருகன் சீமான் வீட்டுப்பிள்ளை போல்தான். வேலை செய்யும் வீட்டில் கிடைக்கும் நீருற்றிய சோறுகூட அவனுக்கு ஒத்துக் கொள்ளாது. ஒரு காசுக்கும் லாயக்கில்லாத அப்பனின் கையாலாகாத்தனத்தினால் குடும்பம் குலைக்கும் ஆவடிக்கும் பெரம்பூருக்கும் அத்திப்பட்டுக்குமாய் 'அல்லாடி'னாலும், பள்ளிக்கூடம், படிப்பு என்று முருகனுக்குக் கருத்து இருக்கிறதென்ற விஷயத்தில் எல்லம்மாளுக்கு அளவில்லாத பெருமை இருந்தது.

'என் கையிலே காசிருந்து, பயலை இன்னைக்கு மட்டும் நானே படிக்கப் போட்டிருந்தேன்னா இன்னைக்கு ஆறுவது படிப்பான். பிள்ளைகளை அழைக்க வந்தால் அவன் வந்திடுவான். அவன் வந்தால் அந்தச் சோமாரிப் பயலும் வந்திடுவானென்று இருந்திட்டேனே' என்று அவள் அங்கலாய்த்துக் கொள்ளும் போதெல்லாம் அந்தப் பெருமை வெளிப்படும். இம்முறை தங்கையிடம் சண்டை போட்டுத்தான் குழந்தைகளை அவள் உரிமையுடன் அழைத்துவந்து பள்ளிக்கூடத்தில் போட்டிருக்கிறாள். அங்கே பள்ளிக்கூடம் என்று பெயர்தான். பாதி நாட்களில் அம்மாக்காரி வடையை மூக்கண்டை விற்கப் போட்டு விடுவாள். புருஷனின் கையாலாகாத்தனத்தை இடிக்கத் தப்பில்லை. பிள்ளை படிப்பைக் கெடுத்து உருப்படாமல் அடித்துக் கொண்டிருந்தாள்.

பகல் சோறு கிடைத்தால் கஷ்டமில்லை. எப்படியோ 'தத்திக்குத்தி' அவனைப் பத்தாவது படிக்க வைத்து ஆளாக்கி விடுவாள். அவன் அப்புறம் குடும்பத்தைக் காப்பாற்றுமவா போகிறான்?

அழகான கனவுகளுடன் அவள் காம்பவுண்டுக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாளோ இல்லையோ? எசமானியம்மாள் வாயிலிருந்து சொற்கள் படபடவென்று வெடித்தன.

"ஏண்டி? எம்மா நேரம் உனக்கு? மணி என்ன ஆச்சு. தெரியுமில்லே?"

ஒரே எட்டில் நினைவின் நிலையில் சரிந்த எல்லம்மா பல்லைக் காட்டிக்கொண்டு உள்ளே ஓடினாள். பரபரப்பாகப் பையைக் கொட்டிக் கணக்கு சொல்லலானாள்.

"இடக்கட்டும். நீ கடைக்குச் சோறு எடுத்திட்டு ஓடு. மணி ஒன்று அடிக்கப் போகிறது" என்று விரட்டினாள் எஜமானி.

பகல் சோற்றை நினைத்தவண்ணமே எல்லம்மாள் மறுபடியும் சாப்பாட்டு அடுக்கும் கையுமாகத் தெருவில் இறங்கி ஓடலானாள்.

"பகல் சோறு, கடுசோறாகத்தான் பள்ளிக்கூடத்தில் போடுவார்கள். ஒருவேளை கழிந்தால், எத்தனை நிம்மதி? எப்படியானாலும் பையன் படிக்க வேண்டுமே" என்ற ஒரே கொடி ஓங்கி நிற்க, அதற்கு ஆதாரம் தேடு பவளைப் போல் எல்லம்மாளின் கண்கள் வழியில் தனியாக மஞ்சள் பூச்சில் நின்ற மெத்தை வீட்டைத் திரும்பிப் பார்த்தன.

மெத்தை வீட்டு ஐயாவை அவள் பார்த்திருக்கிறாள். எப்படி அவரிடம் சென்று கோரிக்கையைச் சமர்ப்பிப்பது என்பது அவளுக்குத் தயக்கமாக இருந்தது. அவளுடைய வாழ்வின் அநுபவத்திலே இப்படி ஒரு சந்தர்ப்பம் வந்திருக்கவில்லை. மூன்று வருஷங்கள் புருஷன் கூடயிருந்து வாழ்ந்தபோதும் சரி, பின் ஒன்றியாக உடல் உழைத்து வயிறு கழுவும் இந்நாட்களிலும் சரி, எந்த ஆண்பிள்ளையிடமும் வலிய நின்று கேட்டுப் பழகியதில்லை. வீட்டு எசமானர் முன்கூட நிற்க மாட்டாள். அப்படியிருக்க அந்தப் பெரிய மனிதரிடம் காகிதம் எப்படி வாங்குவது? வீட்டு எசமானியிடம் சொல்லி, எசமானர் மூலமாகக் காகிதம் பெறலாம். ஆனால் எசமானி அம்மாளுக்குப் புரட்டாசி வானம்போல் நிலையில்லாத சுபாவம். காயும் என்றும் நம்ப முடியாது; பெய்யும் என்றும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. சாயங்காலம் குணம் எப்படி இருக்குமோ?

**ப**ள்ளிக்கூடம் தாண்டியாயிற்று. கடைத் தெருத்தான் இனி பாக்கி.

நான்கு வருஷங்களுக்கு முன்பிருந்த கடைத் தெருவா அது?

பஸ்கள், லாரிகள், வண்டிகள் கிளப்பிவிடும் புழுதியிலே மூச்சு விடமுடியாத திணறல்; ஏககாலத்தில் பல்வேறு காப்பிக் கடைகளிலிருந்து வரும் பல்வேறு ரேடியோ சங்கீதங்கள்; பூக்கடை, துணிக்கடை, பாத்திரக் கடை, சோடாக்கடை எல்லாமாகப் பட்டணம் தோற்கும் தெரிசல். இந்த தெரிசலில்தான் அவளுடைய எசமானரின் அலுவலகமும் இருந்தது. மாடியில் ஒலிபெருக்கி, மின்சாரச் சாமான்கள் வியாபாரம். கீழே மளிகை. இரண்டும் அவருக்குச் சொந்தம். வியாபார மும்முரம் காரணமாக அவருக்குப் பகல் சோற்றுக்கு வீட்டுக்கு வரக்கூடச் சில நாட்களாக ஓய்வில்லை. மாடியிலேயே ஒருபுறமாகச் சாப்பாட்டை முடித்துக் கொள்வார்.

கடைக்குப் பக்கத்துச் சந்தில், மாடிப்படி வழியாகச் சாப்பாட்டு அடுக்குடன் மேலே செல்லுகையில் மளிகைக் கடையில் வெய்யிலுக்காகத் தொங்க விடப்பட்டிருந்த சாக்குப் படுதா மறைப்புக்குள்ளிருந்து மெத்தை




# கலிங்கா டியூப்ஸ்

தண்ணீர், காஸ், எஃகு, கலாய்
குழாய்கள் அரை அங்குலம்
முதல் இரண்டு அங்குலம் வரை

(B. S. S. 1387/1947 - Class A & B)

## கலிங்கா டியூப்ஸ் லிமிடெட்

**33, சித்தரஞ்சன் அவின்யூ, கல்கத்தா-12**

(பாக்டரி: சௌத்வார், கட்டாக்)



*கேரளம், சென்னை, பாண்டிச்சேரி, மைசூர், ஆந்திர ராஜ்யங்களுக்கு*
*பிரத்தியேக விநியோகஸ்தர்கள் :*

சௌத் இந்தியா கார்ப்பரேஷன்
(ஏஜன்ஸீஸ்) பிரைவேட் லிட்.
2, ஆர்மீனியன் தெரு - சென்னை-1

எம். ஸி. சுந்தரராஜன் & கம்பெனி
290, லிங்கி செட்டித் தெரு
தபால் பெட்டி நெ. 182 - சென்னை-1



*தென் பிராந்தியத்திற்கு ஸோல் ஏஜண்டுகள் :*

## டியூப் ஸப்ளையர்ஸ் லிமிடெட்

2, ஆர்மீனியன் தெரு - - சென்னை-1

வீட்டுப் பெரியவரின் குரல் எல்லம்மாவுக்கு இலேசாகக் கேட்டது.

"விலையைச் சல்லிசாகப் போடுங்க. ஏழைக் குழந்தைகள் தர்மந்தான் பாருங்க?"

"நீங்க சொல்ல வேணுமா? பள்ளிக்கூடத்துப் பகல் சோற்றுக்குன்னு சொல்லும்போதே கணிசமா விலையெல்லாம் குறைச்சிட்டேன். இது புளி பாருங்க, நிறம் என்னமோ மாதிரியிருக்குதுன்னு நினைக்காதீங்க. போன வருஷம் ஞாபகமில்லாமல் 'ஸ்டாக்' தங்கிப் போச்சு. அருமையான பங்களூர் புளி. விசைக்கு நாலணு குறைத்து விடுகிறேன்..."

மெத்தை வீட்டு ஐயாவின் சிரிப்பொலி.

"போடுங்க, பார்த்து..." என்ருர்.

பகல் சோறு......புண்ணியவான்கள் இடும் பிச்சை அவர்களுக்கு எட்ட வேண்டுமே? உண்மையான ஏழை, அவர்கள் வரை அது கிடைக்க வேண்டுமே? சாப்பாட்டு அடுக்கை மேலே வைத்து விட்டு இறங்கியவள், கீழே கடைக்குள் எட்டிப் பார்த்தாள். உள்ளிருந்து சுப்பையா, "என்ன வேணும் எல்லம்மா? அம்மா ஏதாவது சொல்லி அனுப்பினுங்களா?" என்று விசாரித்தான். அவன் எஜமானின் தூர உறவுக்காரன். கடையில் அவருக்கு உதவியாக இருப்பான். "இல்லே, சோறு கொண்டாந்தேன்" என்று தலையை இழுத்துக் கொண்டாள்.

ஐயா கடையிலே மெத்தை வீட்டு ஐயா சாமான்கள் வாங்குவதால், அம்மா மூலம் பொரிசுக் கடிதம் வாங்கி விடலாம் என்ற ஒரே வேகத்தில் அந்த வெய்யிலில் அவள் கால்கள் 'விசுக் விசுக்'கென்று தூரத்தை அநாயாசமாக விழுங்கின.

அவள் திரும்பிவிட்ட அரவம் கேட்டு எஜமானியம்மாள் வெளியே வந்தாள். வரும் போதே அன்றையக் குணத்தின் நெடி சீறி வந்தது. "என்ன காய் வாங்கி வந்திருக்கிறாய், முற்றலும் நெற்றலுமாய்? இந்தக் கீரையைக் குப்பையில் போடலாம்......ஐயா வேட்டியில் அந்தப் பச்சை ரவிக்கைச் சாயம் பட்டை பட்டையாக இருக்கிறது. கடனே என்று வேலை செய்தால் எப்படி?..."

ஆவலை நிரப்பிக் கொண்டு வந்த எல்லம்மாளின் மனக் குடத்தை எசமானி அம்மாள் ஒரே எட்டில் குப்புறக் கவிழ்த்து விட்டாள்.

அன்று மாலை வேலை முடிந்து வீடு திரும்புகையில் எல்லம்மா மெத்தை வீட்டு வாசலில் தயங்கித் தயங்கி நின்ருள். புத்தம் புது அழிக்கதவு. பித்தளை எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பெயர்கள். எவரேனும் வேலையாட்கள் வரமாட்டார்களா என்று நின்ருள். ஆள் அரவமே தெரியவில்லை. தயங்கி விட்டுத் துணிவில்லாமல் சென்று விட்டாள்.

இருட்டுக் குடிசையில் இரண்டு குழந்தைகளும் ஒட்டிய வயிறுடன் காத்திருந்தனர். சிம்னிக்கு எண்ணெய் வாங்கி வரவேண்டும். செல்வி அவளைக் கண்டதும் ஓடி வந்தாள்.

"ஒண்ணுமில்லேயா?"

மடியில் தோசை, பலகாரம் ஏதுமில்லை. அரிசி நொய்தான் வாங்கி வந்திருந்தாள். சீமை எண்ணெய் வாங்கி வந்து சிம்னியை ஏற்றிவிட்டுச் சுள்ளியைப் போட்டு அடுப்புப் பற்ற வைத்து எல்லம்மா கஞ்சி காய்ச்சுகையில்

முருகன் பள்ளிக்கூடத்தில் சொல்லித் தந்த கதையைச் சொன்னான். செல்வி 'அத்தை தந்த மூக்குத்தி' பாடலை அபிநயித்துக் காட்டினாள். எத்தனை எத்தனையோ ஆசைக் கோட்டைகள் உயர, எல்லம்மா திருஷ்டி முறித்தாள். உண்டதும் இரு குழந்தைகளும் அவளை ஆளுக்கொரு புறமாக ஒட்டிக்கொண்டு தூங்கினார்கள். எல்லம்மாள் எப்பாடு பட்டேனும் பெரிய ஐயாவிடம் பகல் சோற்றுக்குக் காகிதம் தரச் சொல்லிக் கேட்க வேண்டும் என்று உறுதி செய்து கொண்டாள்.

மறுநாளும் எஜமானியம்மாளின் குணம் எல்லம்மாளுக்கு வாய்ப்பாக இருக்கவில்லை. எஜமானிக்குப் புருஷன் மீது கோபம் போலும்! அவர்கள் இருவரும் 'கரும் புரும்' என்று இருந்தார்கள்.

எல்லம்மாளாகக் கடைக்குச் சோறெடுத்துச் செல்லுமுன் மெத்தை வீட்டுப் பக்கம் செல்ல முயன்றபோது, வாசலில் ஒரு வேட்டை நாய் அடிக்கண்டத்திலிருந்து எழுப்பிய உறுமலில், குடல் தெறிக்கப் பின்வாங்க வேண்டியதாயிற்று. உள்ளிருந்து ஈ காகம் எட்டிப் பார்க்கவில்லை!

முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு பிள்ளைகளின் துரதிர்ஷ்டத்தை நொந்த வண்ணம் அவள் சாலையில் சோற்று அடுக்குடன் நடந்தாள். கொட்டகைப் பள்ளிக்கூடத்தில் சோற்றுப் பந்தி முடிந்தாயிற்று போலும்! தெருக் குழாயடியில்.........அட, செல்வி...செல்விதான்!

"சோறு போட்டாங்களா?" என்று விசாரித்தாள்.

செல்வி உச்சக்குரலில் கூவினாள்: "உம், வாத்தியாரம்மாவிடம், சோறு போடையிலே நாங்க ஏழைங்கோன்னு அழுதோம். போவுதுன்னுப் போடச் சொன்னாங்கோ; அண்ணனுக்கு ரொம்பப் போட்டாங்கோ, எனக்குக் கொஞ்சம்தான் போட்டாங்கோ. நீ போய்ப் பெரிய ஐயாவிடம் காகிதம் வாங்கி வரேன்னியே? காகிதம் வாங்கிட்டு வந்தால்தான் பேர் எழுதிக்கிட்டு நிறையப் போடுவாங்க."

'வாத்தியாரம்மா நல்லவங்களாகத்தான் இருக்கிறாங்க. ம், ஏழைங்களுக்குக் கடவுள் இருக்கிறாரு" என்று எல்லம்மா நடந்தாள்.

நாட்கள் ஒன்று இரண்டு என்று ஓடிக் கொண்டிருந்தன. எல்லம்மாளால் இன்னும் சிபாரிசுக் கடிதம் வாங்க முடியவில்லை. எஜமானியம்மாள் கோபித்துக் கொண்டு பிறந்த வீடு சென்று விட்டாள். மருமகள் இல்லாத சமயங்களில் வீட்டில் எஜமானனின் காதுகேளாத அம்மா பட்டணத்திலிருந்து வந்து நிர்வாகத்தைக் கவனிப்பது வழக்கம். எனவே எல்லம்மாளின் கோரிக்கை நிறைவேறவே வழியில்லை. இடையே, வாத்தியார் அம்மாள் தினமும் காகிதம் வாங்கிவரச் சொல்லிக் கொண்டே பிள்ளைகளுக்குச் சோறு தருமத்துக்குப் போட்டுக் கொண்டிருந்தாள்.

இருபது நாட்கள் சென்றபின் ஒரு சனிக்கிழமையில் எல்லம்மா சந்தையில் வாத்தியார் அம்மாளைச் சந்தித்தாள். தன்னையறியாமலே அவள் கையெடுத்துக் கும்பிட்டாள்.

"புள்ளைங்க சொல்லுது. உங்களுக்குப் புண்ணியமுங்க. பெரிய ஐயாவை மூன்று

நான் பார்க்கப் போனேன். காய் கூகது. உங்க புண்ணியம். நீங்களே சொல்லிப் பேர் பதிஞ்சுக்கிட்டால் ஒரு குடும்பம் பொழைக்கத் தண்ணீர் ஊத்துநீங்க......பொய் பெரட்டில்லே, அப்பன் ஒரு சோமாரி, ஆத்தா வலுவில்லாமல் விழுந்திட்டா......''

வாத்தியாரய்யாவுக்கு அவளை நினைவு படுத்திக் கொள்ளச் சில நிமிஷங்கள் சென்றன.

''ஓ......நீயா? ஒண்ணுந்தேதியிலேயிருந்து பதிவு செய்கிறேன். ஒழுங்காய்ப் பள்ளிக் கூடம் வரச் சொல்லு'' என்றான்.

எல்லம்மாளால் நன்றிப் பெருக்கை வெளியிட இயலவில்லை. கைகளைத்தான் தன்னையறியாமல் உயர்த்திக் கும்பிட்டாள்.

மகிழ்ச்சி பூரிக்க அவள் அன்று வீடு திரும்பியபோது, பையன் இருளில் மூலையில் படுத்து, ''வயிற்றை நோவுது, அக்கா!'' என்று பலமாகக் கத்தினான்.

''எதினாலும் வாங்கித் தின்னியா?''

''ஆயோ, இல்லே அக்கா...'' என்று வலி தாளாமல் பையன் உடலையே முறித்துக் கொண்டான்.

எல்லம்மா மூன்றும் வீட்டுத் தேவானையிடமிருந்து விளக்கெண்ணெய் கேட்டு வாங்கி வந்து வயிற்றில் தடவினாள். இரவுக்குக் 'காப்பி காய்ச்சி'க் கொடுத்தாள்.

மறுநாளும் பையனுக்குக் காய்ச்சல், வலி இரண்டும் விடவில்லை.

''பாவிப் பயலுக்குச் சீமான் வீட்டு உடம்பு!'' என்று அலுத்துக் கொண்டு எல்லம்மா மூன்று நாட்கள் தனக்குத் தெரிந்த கை வைத்தியமெல்லாம் செய்தாள். பயன் இல்லை. ஆஸ்பத்திரிக்குத் தூக்கிப் போனாள். டாக்டர் அங்கேயே அவனைப் படுக்க வைத்து விடவும், எல்லம்மா பதைபதைத்து, வீட்டுக்கு வந்ததும் வராததுமாய்க் கடைப் பையன் வேலுவைப் பிடித்துத் தங்கைக்குக் 'கார்டு' எழுதிப் போட்டாள்.

தினமும் காலையிலும் மாலையிலும் ஆஸ்பத்திரிக்கு நடந்தாள். பையனின் உடல் நிலை குணமென்றும் சொல்வதற்கில்லை, இல்லையென்றும் சொல்வதற்கில்லை. குச்சி உடம்பு கன்னியாய்க் காய்ந்திருந்தது.

''ஒண்ணுமே குடுக்க மாட்டேங்கிறாங்க, அக்கா, நான் வூட்டுக்கு வாரேன், அக்கா...'' என்று சிறுவன் இரகசியமாக அவளிடம் அழுதான். ஆஸ்பத்திரிக் கறுப்பண்ணன் வேறு, ''பிள்ளையைப் பட்டணத்து ஆஸ்பத்திரிக்கு அனுப்பி ஆபரேஷன் செய்யணும்'' என்று அவளிடம் சொல்லிவிட்டான்.

எல்லம்மாளைப் பீதி பிடித்துக் கொண்டது.

''பிள்ளைக்கு ஆத்தா வந்திருக்குதுங்க, பட்டணத்துக்கு அழைத்துப் போய்ப் பெரிய ஆசுபத்திரியிலே காட்டுறேங்குதுங்க...இட்டுப் போறேன்'' என்று டாக்டரிடம் அனுமதி கேட்டாள், குழைந்து கொண்டு.

அவர் மேலும் கீழும் பார்த்தார். யோசனை செய்தார். ''நான் சீட்டு தரேன். பெரிய ஆஸ்பத்திரிக்கு இட்டுப்போனால்தான் நல்லது. குடல் வயிறெல்லாம் வெந்து போயிருக்குது'' என்றார் டாக்டர்.

'இந்த மட்டும் 'பெற்றோம் பிழைத்தோம்'; ஆஸ்பத்திரி சகவாசமே ஆகாது இனி' என்று எல்லம்மாள் பிள்ளையை இடுப்பில் தூக்கிக் கொண்டு ஓடிவந்து விட்டாள். அன்றே நாட்டானை அழைத்து வந்து, பச்சிலை வைத்தியம் ஒரு வாரம் செய்தாள். பையன் சுமாராக எழுந்து உட்கார்ந்தான். சோறு தின்றான். பள்ளிக்கும் சென்றான்.

இரண்டு நாட்கள் பள்ளிக்கூடம் சென்று பகல் சோறும் உண்ட பையன், மாலையில் கடுங்காய்ச்சல் வயிற்று நோவுடன் திரும்ப வந்தான். இரவு பத்து மணி வரை புழுவாய்த் துடித்தான்.

எல்லம்மாள் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழுதாள். பெற்றவளைக் காட்டிலும் அதிகமாகக் கதறித் துடித்தாள். தங்கை பத்து நாட்கள் இருந்து அவளுக்குப் பதிலாக வீட்டு வேலைக்குப் போனாள். பிறகு புருஷன் இதே சாக்கில் விட்டுவிடப் போகிறானே என்ற பயத்தில் செல்வியை மட்டும் விட்டுவிட்டு, முருகனை அழைத்துக் கொண்டு போய் விட்டாள்.

எல்லம்மா அன்று பகல்தான் வேலைக்கு வந்தாள். வீட்டுக்கூடத்தில் சுப்பையா யாருக்கோ அரிசி அளந்து கொண்டிருந்தான். அரிசியா அது? கல்லும் மண்ணும், புழுவுமாக...... வீட்டில் பின்புறத்து அறையில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த அந்தப் பத்து மூட்டைகளும், மழையில் மேல்தளம் ஒழுகியதால் நனைந்து தெரியாமலே மக்கிப் பழுத்துப் போய்விட்டன. அதைக் குறித்து ஆறு மாசங்களுக்கு முன்பு அம்மாளின் கவலைக் குறைவுக்காக ஐயா பத்து நாட்கள் வீட்டில் கத்திக் கொண்டிருந்தார்.

இந்த அரிசியை யார் விலைக்கு வாங்குகிறார்கள்?

எல்லம்மா பார்த்துக் கொண்டே பின் கட்டுக்குச் சென்றாள். வேலு பின் கட்டுத் தாழ்வாரத்தில், சிவப்பாகத் துணியிலிட்டு ஏதோ பொடி சலித்துக் கொண்டிருந்தான். அருகில் சென்ற பின் அது செங்கற்பொடி என்று தெரிய வந்தது.

பாத்திரம் துலக்க, வேலு சலிக்க மாட்டானே, அதுவும் துணியிலிட்டு? அவள் பார்க்கையிலேயே, ''போதும், அரைப்படி இருக்குதல்ல?'' என்று ஐயா வந்துவிட்டார்.

அவள் கவனியாதவள் போல் பாத்திரங்களை எடுத்துக் கொல்லையில் கொண்டு போட்டுக் கொண்டு துலக்கலானாள்.

''எல்லம்மா! எல்லம்மா! இங்கெல்லாம் கூட்டு!'' என்று கூடத்திலிருந்து சுப்பையாவின் குரல் பாய்ந்து வந்தது.

அவள் துடைப்பமும் கையுமாக ஓடினாள்.

அவள் கூட்டுகையில் ஐயா ஓரமாக நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தார். சுப்பையா கணக்குப் புத்தகமும் கையுமாக நின்று கொண்டிருந்தான். அரிசியின் மக்கல் நெடி போகவில்லை.

''ஸ்கூல் ' மிட்டே மீல்ஸ்' கணக்குகள் கீழே எழுதிக்க.

''நாலு மூட்டை பச்சரிசி; இரண்டு மணங்கு புளி; க. ரகம்னு பிராக்கெட்டில் போட்டுக்க. மிளகாய்த்தூள் மூணு வீசை...''

எல்லம்மாளுக்கு நெஞ்சில் ஈட்டி பாய்ந்தாற் போல் இருந்தது. மறுநாளே செல்வியைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பவில்லை.



புதுமை பெறுக!
இதம் பெறுக!
இளமையாய் இருங்கள்! எப்பொழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத. மனோரம்மிய
மணத்துடன்.

# இருமல்!

இதமளிக்கும்
நிரந்தரமான குணத்திற்கு








# பி. ஐ. காப் ஸிரப்



பெங்கால் இம்யூனிடி

டிப்போ : மஹேந்திரா & கோ., 161, நைனியப்ப நாயக் தெரு. மதராஸ் - 3



தங்கவேலனுக்குத் தாய் தந்தையர் இல்லை. அவன் சிறுவனாக இருந்தபோது ஒரு நாள் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஊரை விட்டு மறைந்தான்.

அந்தக் காலத்தில் அவனிடம் அன்பு காட்டியவர்களில் முக்கியமாக இருவரைக் குறிப்பிட வேண்டும். கொற்றவைக் கோவில் பூசாரி பிச்சைமுத்து ஒருவர்;

# சிப்பாய் தங்கவேலன்

வி. எஸ். சுப்பையா

**கா**க்கி உடுப்புடனும் 'கிரீச் கிரீச்' என்று சத்தமிடும் ஜோடுவைச் செருப்புடனும் பெருமிதத்துடன் கிராமத்துக்குள் நுழைந்தான் தங்கவேலன். அவன் பின்னால் ஒரு ஆள் டிரங்குப் பெட்டி ஒன்றும் வர்ண ஜமக்காளத்தைக் கொண்டு கட்டப்பட்ட படுக்கை ஒன்றும் தூக்கிக்கொண்டு வந்தான். அநேகருக்கு அவனை இனம் தெரியவில்லை.

அவன் வேறு யாரும் இல்லை: பத்து வருஷங்களுக்கு முன்னால் ஊரில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் பட்டாளத்தில் சேர்ந்துகொள்ள ஓடிப்போன தங்கவேலன் தான். பட்டாளத்திலிருந்து விடுதலையாகிப் பிறந்த மண்ணை நோக்கி வந்திருக்கிறான்.

பொன்னுத்தாயிப் பாட்டி மாத்திரம் அவனை இனம் கண்டு கொண்டாள். "அட, என் கட்டி மகனே! இத்தனை நாள் கழிச்சு எப்படி அப்பா நம்ம ஊருக்கு வழி தெரிஞ்சுது?" என்று சேர்த்துப் பிடித்துக் கொண்டு உபசரித்தாள். அதன்பின்தான் மற்றவர்கள் அவனை அடையாளம் கண்டுகொண்டனர்.

மற்றொருவர் அந்தப் பூசாரியின் தங்கை பொன்னுத்தாயி. கையில் சரியான ரொக்கமும் சர்க்காரில் எங்கேயாவது வேலை கொடுக்கும்படி பட்டாளத்து அதிகாரிகள் கொடுத்த சிபாரிசுக் கடிதமும் அவன் கையில் இருந்தன. பிறந்த மண்ணிலேயே தங்கிவிடுவது என்ற தீர்மானத்தோடு புறப்பட்டு வந்து விட்டான் தங்கவேலன். இராணுவத்தில் தொண்டு புரிந்த அவனது மனம் இப்போது அடியோடு மாறியிருந்தது.

அவன் வந்ததும் வராததுமாக எண்பது வயதுக்கு மேலான பூசாரிக் கிழவரைப்பற்றி அக்கறையோடு விசாரித்தான். அவர் படுத்த படுக்கையாய்க் கிடப்பதையும் கோயில் பூசையைக் கூட மற்றவர்கள் கவனித்துக் கொள்வதையும் அவன் பார்த்தான்.

தங்கவேலனைக் கண்டதும் ஆச்சரியமடைந்த கிழவர் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து கொண்டார். தங்கவேலன் அவர் உடல் நலனை விசாரித்தபோது, ''ஊம், என் தாய் என்னை எப்போது அழைத்துக் கொள்ளப் போகிறாளோ? இனி மேல் ரொம்ப நாள் இங்கு தங்கமாட்டேன்'' என்று கூறினார்.

தாய் என்று பூசாரிக் கிழவர் குறிப்பிட்டது ஊர் அம்மனான கொற்றவையைத்தான்.

''பாட்டையா! நீங்கள் இத்தனை வருஷ காலம் சாமியாராக வாழ்ந்து இந்த ஊரை ஒரு தெய்வம் போல் காத்து வந்திருக்கிறீர்கள். நீங்கள் மறைந்த பிறகு உங்களுக்குச் சமாதி கட்டி வைக்கப் போகிறேன்'' என்று சொன்னான் தங்கவேலன்.

கிழவர் மெதுவாகப் பேசினார்: ''எனக்கு அதெல்லாம் வேண்டாம், தங்கவேலா! நான் கண்ணை மூடுவதற்குள் வந்து சேர்ந்தாயே, அதுவே போதும். இந்தக் கிழவனுக்கு ஏதாவது நீ செய்ய வேணுமென்று நினைத்தால் நான் ஒன்று சொல்லுகிறேன். செய்வாயா?'' என்றார்.

''செய்கிறேன் பாட்டையா! ஏதாயிருந்தாலும் கட்டாயம் செய்வேன். சொல்லுங்கள்'' என்றான் உணர்ச்சியுடனும் உறுதியுடனும்.

''எனக்கு நினைவு தெரிந்த காலத்திலிருந்து இதுவரை கொற்றவைக் கோவிலில் விளக்குப் போட்டு மணி அடித்துப் பூசை செய்வது நின்று போனதில்லை. இந்த ஊரைக் காத்தது நான் இல்லை; கொற்றவைதான். ஆகையால் தினமும் பூசை செய்வதை நீ கவனித்துக் கொள். பிறந்த மண்ணை விட்டு ஓடிப் போகாதே. குடியும் குடித்தனமுமாக இரு'' என்று கூறினார்.

''சரி, பாட்டையா! அப்படியே'' என்று வாக்களித்தான் தங்கவேலன் முன்பின் யோசியாமல்.

பூசாரிக் கிழவரின் கட்டளைக்கு இணங்க, மறுநாளே பூசைப் பணியை மேற்கொண்டான் தங்கவேலன். குளித்து முழுகி விட்டுச் செப்புக் குடத்தில் தண்ணீர் எடுத்து வந்து கொற்றவைக்கு நீராட்டி மிகுந்த அக்கறையுடன் பூசை செய்யலானான்.

மொத்தமாகச் சொல்லப் போனால் கிழவர் மறைந்து விட்டார் என்ற குறையை வெகு சீக்கிரத்தில் நீக்கி விட்டான் தங்கவேலன்.

* * *

கோயில் பணியை அவன் ஏற்றுக் கொண்டு மூன்று மாத காலம் கடந்திருக்கும். அவன் கண்ணில் மயிலம்மை அடிக்கடி தென்பட்டாள். ஒருநாள் அவளாகவே அவன் மீது ஒரு இள நகையை எறிந்து விட்டுச் சென்றாள். அதைக் கண்டு தங்கவேலன் அரண்டு போனான். இவ்விதம் வாய்ப் பேச்சு இல்லாமலே அவர்களுடைய நட்பு வளர்ந்து வந்தது.

எனினும், ஒரு நாள் மாலை அவன் வீட்டில் தனியாக இருந்தபோது மயிலம்மை அங்கு திடீரென்று அப்படித் தோன்றுவாள் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவே இல்லை.



''யாரு? மயிலம்மையா?'' என்று ஆச்சரியத்துடன் விசாரித்து உபசரித்தான்.

''ஏன், மயிலம்மை தான். உங்களுக்குத் திகைப்பாய் இருக்கிறதோ?'' என்று பதில் கேள்வி போட்டாள் மயிலம்மை.

''இல்லை, இல்லை! அப்படி ஒன்றும் இல்லை. சும்மாத்தான் கேட்டேன். உனக்கு என்ன வேணும்?'' என்று கேட்டான் தடுமாறிக் கொண்டு.

''போயிட்டுப் போகுது. ம்ம்ம். நீங்க பட்டாளத்திலேயிருந்து பெட்டி நிறைய வெள்ளிப் பணமாகக் கொண்டு வந்திருக்கிறதாக ஊர்முழுவதும் பேச்சு.''

''பெட்டி நிறையப் பணம் இருக்குன்னு சொல்லுகிறதெல்லாம் தப்பு. ஏதோ கொஞ்சம் கொண்டு வந்திருக்கிறேன்.''

'' மழைக்காலத்துக்கு முன்னால் எங்கள் வீட்டைப் பிரிச்சுக் கட்டக் கொஞ்சம் பணம் தேவை. நீங்க நூறு ரூபாய் கடனாகக் கொடுத்தீங்கன்னா !''

தங்கவேலனுக்குச் சட்டென்று என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. அவளது துணிச்சலும் அலட்சியமான பேச்சும் அவனை என்னவோ செய்தன.

'' மயிலம்மை! சொல்லப் போனால் என் பணம் என் கையில் இப்பொழுது இல்லை. ஒரு நம்பகமான புள்ளியிடத்திலே கொடுத்து வைச்சிருக்கேன்.''

''அப்படியா ? நான் உங்ககிட்டே வந்து கேட்டேன் பாருங்க. அதைச் சொல்லணும். நான் போயிட்டு வரேன்'' என்று சொல்லி விட்டு வந்த சுவடு தெரியாமல் காற்றாய் மறைந்து விட்டாள்.



தங்கவேலன் தன் அசட்டுத்தனத்தைக் குறித்து வருந்தினான்.

தோப்பிலும் துரவிலும், வாய்க்காலிலும் வரப்பிலும் தங்கவேலன் மயிலம்மையைக் காணும்போதெல்லாம் அவளுடன் பேசத் துடிப்பான். ஆனால் அவள் உறுத்து அவனைப் பார்த்து விட்டு வெடுக்கென்று திரும்பிப் போய் விடுவாள். இந்தப் பெண்ணிடம் எப்படிப் பேசலாம் என்பதற்குப் பலவாறாக யோசித்து இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தான். அதாவது அவள் கேட்ட நூறு ரூபாயும் அவளிடம் கொடுத்து விடுவதுதான். அதை நேரில் கொடுப்பதற்கும் துணிச்சல் இல்லை. மயிலம்மை மறுத்தாலும் மறுத்து விடுவாள் என்ற பயமும் இருந்தது. எனவே ஒரு அமாவாசை இருட்டில் ஊர் அடங்கிய பின்னர், அவள் வீட்டுக்குச் சென்று தலைவாசல் படிக்கட்டில் ரூபாய் நோட்டுகளை ஒரே கட்டாகக் கட்டி வைத்து விட்டுத் திரும்பி வந்துவிட்டான்.

இரண்டு நாட்கள் கழித்த பின்னர் அவன் பூஜையை முடித்துக் கொண்டிருந்த போது ஒரே ஒரு நபர் மட்டும் திருநீறு வாங்கிக் கொள்வதற்காக வெளியில் காத்திருந்தது தெரிந்தது. அது வேறு யாருமில்லை, மயிலம்மைதான்.

திருநீற்றைக் கொடுத்துக் கொண்டு, '' என்ன உன்னைப் பார்ப்பதே குதிரைக் கொம்பாக இருக்கிறதே ?'' என்றான்.

'' அதெல்லாம் இருக்கட்டும். நாளைக்கு இருட்டின பிறகு எங்கள் வீட்டுக்குப் பின் பக்கமாயுள்ள தோப்புக்கு வாங்க. உங்கள் பணத்தை வாங்கிக் கொண்டு போங்க, ஒருத்தருக்கும் தெரியாமல்.''

' சரி ' என்றான் தங்கவேலன்.

*            *            *

**ம**றுநாள் காலையிலிருந்தே அவன் மனம் ஒரு நிலையில் இல்லை. இந்தச் சிக்கலில் இருந்து விடுபட ஏதாவது வழி உண்டா என்று மோட்டு வளையைப் பார்த்துக் கொண்டு வெகு நேரம் யோசித்துக் கொண்டிருந்தான். ஒன்றும் அவன் புத்தியில் பிடிபடவில்லை. அந்தச் சமயம் பொன்னுத்தாயிப் பாட்டி வந்து அவன் சிந்தனையைக் கலைத்தாள்.

'' அப்பா தங்கவேலா! என்ன வீட்டில் தான் இருக்கிறாயா ?'' என்று பேச்சை ஆரம்பித்தாள் பாட்டி.

'' ஆமாம்! வீட்டில்தான் இருக்கிறேன். கொற்றவை வயலுக்குப் போய்விட்டு வரலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.''

'' சரிதான், சரிதான். அண்ணாரு இருந்த போது கோயிலை எப்படிப் பார்த்துக் கொள்வாரோ, அப்படியே நீ பார்த்துக் கொள்றதைப் பற்றி ஊராருக்கெல்லாம் ரொம்ப சந்தோசம். அதைக் கேட்கிற போது எனக்கும் மனசுக்குத் திருப்தி.''

'' ஹும்ம்...'' என்றான்.

'' ஆமாம்! கலியாணத்தைப் பற்றி ஏதாவது முடிவுக்கு வந்திருக்கிறாயா ?''

'' ஹும்ம்...கலியாணமா? ஆமாம், பாட்டி! ஒண்ணு யோசிச்சு வைச்சிருக்கிறேன். கலியாணம் பண்ண வேண்டியதுதான். வீட்டு வேலை செய்ய ஆள் இல்லாமல் சங்கடமாகத்தான் இருக்குது.''

'' அதைத்தானே நானும் அந்த நாள் பிடிச்சுச் சொல்லிக்கிட்டு இருக்கிறேன்.''

'' வந்து......வந்து நம்ப ஊரிலே மயிலம்மை'ன்னு ஒரு பொண்ணு......''

பாட்டி ' உம் ' கொட்டவில்லை. அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''......அவளைக் கட்டிக்கிட்டால் என்னன்னு ஒரு யோசனை......''

'' நல்ல யோசனை பண்ணினே, போ. இருந்து இருந்து அவளைப் போய் யாராவது கட்டுவாங்களா ? வேண்டாம், தங்கவேலா! அவள் ஒரு வாயாடிப் பொண்ணு, துஷ்டப் பொண்ணு என்று எல்லாரும் சொல்றாங்க. கலியாணங் கட்டிக் கொள்றது கசப்படறதுக்கா—சங்கடப் படறதுக்கா?''

'' சரிதான், சரிதான் !'' என்றான் தங்கவேலன்.

'பாட்டியிடம் மயிலம்மையைப் பற்றி ஏன் பேச்சை எடுத்தோம் ' என்று வருந்தினான்.

நன்றாக இருட்டி ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாமல் இருந்தது. ஒருவரும் அறிந்து கொள்ளாத வண்ணம் தோப்பை நோக்கி நடந்தான். மயிலம்மை அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். போனதும் பணத்தைக் கொடுப்பான், வாங்கிக்கொண்டு வந்துவிட வேண்டும் என்பதுதான் அவளுடைய எண்ணம்.

'' மயிலம்மை! நீ கேட்டேன்னுதானே பணத்தைக் கொடுத்தேன் '' என்று தயங்கிய படியே சொன்னான்.

'' பணம் கொடுக்கிற லட்சணமா இது. ஒருவருக்கும் தெரியாமல் திருடனைப் போல் வந்து எங்கள் வீட்டில்—''

# உங்களுக்கு அதிக சக்தி அவசியம்

நீங்கள் சரீர தளர்ச்சியினால், சோர்வுற்று இருக்கிறீர்களா ?

நீங்கள் சக்தியற்றவர்களாக இருக்கிறீர்களா? அப்படியென்றால், உங்களுக்கு க்ளுகோவிடா அவசியம். க்ளுகோவிடா உங்களுக்குத் சக்தியை ஊட்டுகிறது. க்ளுகோவிடாவில், ரத்தத்துடன் சீக்கிரமே கலந்துகொள்ளும், சர்க்கரை சேர்ந்துள்ளது. இதனால் க்ளுகோவிடா, உங்கள் தேகத்திற்கு அவசியமான சக்தியை உங்களுக்குத் தேவையான சமயத்தில் அளிக்கிறது.

க்ளுகோவிடாவிலுள்ள விடமின்கள், உங்களை பலமுள்ளவர்களாக்கி, சுறுசுறுப்புடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கச்செய்கின்றன.

## க்ளுகோவிடா

**வெகு விரைவில் சக்தியூட்டுகிறது**






கார்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

பம்பாய்-1

ஏஜெண்டுகள் : பாரி அண்ட் கம்பெனி லிமிடெட்

"இருடன் பணத்தைக் கொண்டு வந்து வைத்து விட்டுப் போவானோ?"

"தெரியாமல் செய்கிற எந்தக் காரியமும் திருட்டுத்தான்!"

"வேண்டாம், மயிலம்மை! அந்தப் பணம் உனக்குத்தான். நீயே வைச்சுக்கோ."

"இந்தாங்க. உங்க பணத்திலே ஐம்பது ரூபாய் இருக்குது. மிச்சம் நாளை இதே நேரத்திலே இங்கே வந்து வாங்கிக் கொள்ளுங்க" என்றாள்.

"சரி! மயிலம்மை நாளைக்கு வருகிறேன். இப்போ பூசை நேரம் கடந்து போகப் போவுது" என்று சொல்லிய வண்ணம் ஒரே ஓட்டமாக அங்கிருந்து கோயிலுக்கு ஓடினான்.

அன்று நேரம் தவறாமல் பூசை நடந்தது அம்மன் செயல் என்றுதான் சொல்ல வேண்டும். பூசைப் பணியை ஏற்றுக் கொண்டதிலிருந்து இதுவரை அவன் இவ்வாறு தடுமாறியதில்லை. 'சே! என்னவானாலும் இனி அந்த மயிலம்மையைப் பற்றி நினைக்கவே கூடாது' என்று தீர்மானித்துக்கொண்டான். "அம்மா, தாயே! நீதான் அவளைப் பற்றி நினைக்காதிருக்க மனத்தில் வலு கொடுக்க வேண்டும்" என்று தோப்புக்கரணம் போட்டுக் கன்னத்திலும் அடித்துக் கொண்டு நெடுஞ்சாண்கிடையாக அம்மன் முன் விழுந்து கும்பிட்டான்.

ஆனால் ஏனோ அந்தப் பொல்லாத மனம் அவளையே நினைத்து நினைத்து மருகியது. கோபத்தோடு அவள் பேசும்போது கூட அவளைப் பார்த்துக் கொண்டிருக்கலாம் போல் இருந்தது. பலவாறாகச் சிந்தித்து இறுதியில் ஒருவிதமான முடிவுக்கு வந்தான். ஒன்று அவளைப்பற்றி நினைக்காமல் அம்மன் பூசையை ஒழுங்காகச் செய்ய வேண்டும். அல்லது அந்த ஊரை விட்டுப் போய் விட வேண்டும். இரண்டில் எதைச் செய்வது என்ற பிரச்னை அவன் மனத்தில் தீவிரமாக எழுந்து நின்றது. வாயாடிப் பெண் என்று பெயரெடுத்த அவளைக் கல்யாணம் செய்து கொண்டால் ஊரார் என்ன சொல்லுவார்களோ என்ற பீதியும் அவன் மனத்தை அரிக்கத் தொடங்கியது. மிகுந்த மன தைரியமும் உறுதியும் வாய்ந்த அவன், பாட்டியின் கோபத்திற்கும் ஊரார் ஏச்சுக்கும் அஞ்சினான்.

மறுதல் நாள் கோயில் மணி வெகு நேரம் அடிக்கவில்லை. வழக்கத்துக்கு மாறாக இரண்டொரு தரம் ஒலித்துவிட்டு நின்றது. தங்கவேலனுக்கு உடம்பு சரியில்லையோ என்று சிலர் பேசிக் கொண்டது கூட அவன் காதில் விழுந்தது. எது என்னவானாலும் மயிலம்மையை மீண்டும் சந்திக்க வேண்டும் என்று ஆத்திரப்பட்டுக் கொண்டிருந்தான்.

இருட்டியது. தோப்புக்குத் தலைமறைவாகப் போனான். அவள் அவனுக்காகக் காத்திருந்தாள்.

"இந்தாங்க உங்கள் ரூபாயில் இன்னொரு ஐம்பது" என்றாள் மிடுக்காக.

"மயிலம்மை! அந்த ரூபாயை நீயே வைச்சுக்க. இந்த மாதிரி என்னை வதைக்காதே" என்று கெஞ்சியவண்ணம் சொன்னான் தங்கவேலன்.

ஒருவர்: தலை இரும்புக் குண்டாய்க் கனக்கிறது. உலைக்களமாக உடம்பு கொதிக்கிறது! பூட்டுக்குப் பூட்டு விட்டுப்போவதுபோல் வலிக்கிறது. டாக்டரிடம் போகலாம் என்று கிளம்பினேன்!

மற்றவர்: டாக்டரிடமா? கொல்லன் பட்டறைக்கு அல்லவா போகணும்?



"உங்க ரூபாயை வைச்சுக்கிறதுன்னு அதுக்கு என்ன அர்த்தம்? நீங்க எனக்கு யாரு?" என்று ஒரு பெரிய கேள்வியைக் கேட்டாள் மயிலம்மை.

"நான் யாரோதான் மயிலம்மை. ஆனால் உன்னைக் கலியாணம் செய்து கொள்ளணும்னு எனக்குக் கொள்ளை ஆசை. உன்னைக் கலியாணம் கட்டிக்கிட்டு இந்த ஊரில் நான் எப்படிக் குடியிருப்பது!"

"என்ன சொன்னீங்க? என்னைக் கட்டிக்கிட்டு இந்த ஊரில் எப்படிக் குடியிருப்பதா? நல்லா இருக்கே உங்க பேச்சு. ஏன் நான் ஒரு பெண்ணாக உங்க கண்ணிலே படல்லியோ?" என்று அவன் முகத்துக்கு நேராகக் கேட்டு விட்டாள்.

தங்கவேலன் பட்டாளத்து வீரன்தான். அசல் யுத்த காலத்திலே துப்பாக்கியை நீட்டிச் சண்டை போட்டிருக்கிறான். இருந்தாலும் அந்தப் பெண் சீற்றத்துக்கு முன்னால் அவன் நடுநடுங்கினான்.

"மயிலம்மை ஒன்று கேக்கிறேன். என் கூட வந்து விடுகிறாயா? எங்கேயாவது கண் காணாத தேசத்துக்கு ஓடிப் போய்விடலாம்."

"ஏன் ஓடிப் போகணுமாம்?" என்று கேட்டாள் அவள்.

"வரத் தயார் என்றால் நாளைக்கு இதே நேரத்துக்கு இங்கே வந்து இரு. என்ன?"

மயிலம்மையிடமிருந்து பதில் இல்லை.

"சரி என்று சொல்லு. உன்னுடைய பதிலில் தான் என் தீர்மானமும் இருக்கிறது!"

"சரி" என்றாள் மயிலம்மை. அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

"சரியாக இதே நேரத்தில் இங்கு வருவேன். எட்டரை மணிக்குக் கிழக்கே போகும் ரயிலில் போய் விடலாம்" என்றவன், "பூசை நேரம் வந்துவிட்டது" என்று சொல்லிவிட்டு ஓட்டம் பிடித்தான். அவனைப்பார்த்துக்கொண்டு அசையாமல் நின்றாள் மயிலம்மை.

அன்று வழக்கத்துக்கு மாறாக அதிக நேரம் மணி அடித்தான் தங்கவேலன். அவனுடைய கண்களில் மளமளவென்று கண்ணீர் சரிந்து கொண்டிருந்தது. அம்மன் முகத்தைப் பார்க்க அவனுக்குத் தைரியம் இல்லை. குனிந்த முகத்தோடு கோயில் திருக்கதவுகளை இழுத்துச் சாத்திப் பூட்டிவிட்டுத் திறவுகோலை இடுப்பில் செருகிய வண்ணம் யோசனையே உருவாக வீட்டை நோக்கி நடந்தான்.




மாலை ஆனதும் அரவம் காட்டாமல் கோவிலுக்குப் போனான். ஒரு திருடனைப் போல் கோவிலுக்குள் நுழைவது அவன் இருதயத்தைப் பிழிவது போலிருந்தது. விளக்குக்கு அபரிமிதமாய் எண்ணெய் ஊற்றினான். நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கும்பிட்டான். பின்னர் கதவுகளை இழுத்துப் பூட்டி விட்டு வீட்டை நோக்கி நடந்தான்.

பெட்டியிலுள்ள ரொக்க ரூபாயும் வேட்டி சட்டைகளையும் எடுத்து ஒரு சிறு பொட்டலமாகக் கட்டினான் தங்கவேலன். சர்க்காரில் எங்கேயாவது சிப்பந்தி வேலை கொடுக்கும்படியாக அதிகாரிகள் அவன் பட்டாளத்தை விட்டு நீங்கும்போது கொடுத்த சிபாரிசுக் கடிதத்தைப் பத்திரமாக எடுத்துச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான்.

குறித்த நேரம் நெருங்கிக்கொண்டிருந்தது. மழைக்கால இருட்டு. இலேசாகப் பிசுபிசு வென்று வேறு தூறிக் கொண்டிருந்தது. எட்டரை மணிக்குக் கிழக்கு நோக்கிச் செல்லும் வண்டியைப் பிடித்தாக வேண்டும்.

மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு தோப்பை நோக்கி நடந்தான் தங்கவேலன்.

மயிலம்மை அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். அவன் கொண்டு வந்த பொட்டலத்தை அவள் கையில் கொடுத்தான். "என்ன யோசிக்கிறாய், நட" என்றான்.

மயிலம்மை முன் நடந்தாள். தங்கவேலன் அவள் நிழலைப்போல் தொடர்ந்தான். தோப்பைக் கடந்து மதகுப் பாலத்துக்கு அவர்கள் வந்து விட்டார்கள்.

கோவிலில் கணகணவென்று மணி அடிக்கும் சத்தம் கேட்டது! தங்கவேலனுக்குத் 'திக்' என்றது. "நில், மயிலம்மை" என்று சொல்லி விட்டுத் தன் இடுப்பைத் தடவிப் பார்த்தான். இடுப்பில் செருகிய கோவில் திறவுகோல் பத்திரமாய் அப்படியே இருந்தது. அதைக் கோவில் படியிலேயோ அல்லது தன் வீட்டிலேயோ வைக்க மறந்து போய் விட்டான். அவன் மனத்தில் அது பாறாங் கல்லைப் போல அழுத்திக் கொண்டிருந்தது. அதோடு அறுபது ஆண்டுகளுக்கு மேலாகத் தினந்தோறும் ஒலித்துக் கொண்டிருந்த மணி இனி ஒலிக்கப் போவதில்லையே என்ற ஏக்கம் வேறு சேர்ந்து கொண்டது.

ஆனால் கோவிலைத் திறந்து மணி அடித்துப் பூஜையை நிறைவேற்றியது யார்? தன்னுடைய செயலை எல்லாம் மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்தது யார்?

"மயிலம்மை! திரும்பு, நாளை புறப்பட்டுப் போகலாம். நான் கோவிலைப் போய்ப் பார்க்க வேண்டும்." அவனுடைய வேகம், துடிதுடிப்பு எதையும் நிறுத்த முடியாது என்று கண்டாள் மயிலம்மை. அவனைப் பின் தொடர்ந்து திரும்பி வந்தாள்.

"நீ வீட்டுக்குப்போ. மயிலம்மை, நாளை தோப்பில் சந்திக்கலாம்" என்று சொல்லிவிட்டுக் கோயிலை நோக்கி விரைந்து நடந்தான்.

கோயிற் கதவு பூட்டியது பூட்டியபடியே இருந்தது. விளக்கு பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. கதவைத் தள்ளிப் பார்த்தான். பூட்டியிருக்கும் கதவு எப்படித் திறக்கும்? அதுவும் கொற்றவைக் கோயில் கதவுக்கு ஒரே திறவுகோல்தான் உண்டு என்று சொல்லியிருக்கிறார்கள்.

இடுப்பில் இருந்த திறவுகோலை எடுத்துக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனான். யாரும் வந்து போனதற்கு ஓர் அறிகுறியும் இல்லை. நாலாபக்கமும் பார்த்தான்.

மணி மட்டும் தரையில் உருண்டு கிடந்தது. அதைச் சுவரிலுள்ள பலகையில் வைத்ததாக ஞாபகம். மணி எப்படி உருண்டு விழுந்தது?

மணியை எடுத்து அது இருக்க வேண்டிய இடத்தில் வைத்தான்.

"தாயே! என்னை மன்னித்து விடு. இனி நான் உன் காலடியை விட்டு எங்கேயும் ஓட மாட்டேன்" என்று நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கும்பிட்டான்.

மறுநாள் ஏதோ விடா மழை பெய்து வெறிச்சாற்போல் அவனுக்குத் தோன்றியதே தவிர, ஊரில் வேறு மாறுதல் எதுவும் இல்லை. எல்லாம் அது அதன்படி நடந்து கொண்டிருந்தது.

அன்று மத்தியானமாகப் பொன்னுத்தாயிப் பாட்டி வந்தாள்.

"அப்பா, தங்கவேலு! நேற்றே உன்னைத் தேடிப் பார்த்தேன். ராத்திரி கூட ரொம்ப நேரமா வரலியே. பூசை முடிஞ்சவுடனே எங்கே போயிட்டே?" என்று கேட்டாள்.

"ஏன் பாட்டி?"

"இல்லே, எத்தனை நாள் ஒத்தைக் கட்டையா இருக்கப் போறே? என் கண் உள்ளபோதே, ஒரு பெண்ணைக் கட்டிக்கோ. நீ ஆசைப்பட்டால், உனக்குப் பிடித்திருந்தால், அந்த மயிலம்மையையே கல்யாணம் செய்து கொள்ளேன். நானா வேண்டாம் என்கிறேன். அவள் நல்லவள்தான். 'வெடுக் வெடுக்'கென்று பேசுவாள், அவ்வளவுதான். கல்யாணம் ஆனால் சரியாகப் போயிடும்."

"எனக்கு அவளைப்பற்றி எல்லாம் ஒன்றும் தெரியாது. உனக்குச் சம்மதமானால் சரிதான். உன் இஷ்டப்படியே செய். ஆனால் ஊரார் ஏதாவது சொல்லுவாங்களோ?"

"அப்படிச் சொல்லுடா, என் கண்ணு! இப்பவே எல்லா ஏற்பாட்டையும் பண்ணி விடுகிறேன். நான் சம்மதித்து விட்டால் ஊரார் என்ன சொல்லக் கிடக்குது?" என்று குதூகலத்துடன் சொன்னாள் பாட்டி.

பாட்டியின் மனமாற்றத்துக்குக் காரணம் கொற்றவையின் அருள்தான் என்று எண்ணியவனாய்க் கொற்றவையை மனத்தில் நினைத்துக் கும்பிட்டான் தங்கவேலன்.

பத்தொன்பதாம் அத்தியாயம்

## சினிமாவுககுப் புறப்பாடு!

மூத்தம்மாளுக்குத் தன் தம்பி போலீஸ் உத்தியோகத்தில் இருப்பதில் எவ்வளவோ பெருமை தான். கந்தசாமியும் தினந்தோறும் அவளிடம் ''இந்தத் திருடனைப் பிடித்தேன். அந்தச் சேடியை லாக்கப்பில் தள்ளினேன். ஊரே அசந்து போச்சு:

# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி



பட்டணமே அதிர்ந்து போச்சு!'' என்று எதையாவது அளந்து கொண்டே இருந்தான். இப்படி ஊர் பூராவையும் கலக்கும் சூரத் தம்பி பக்கத்து வீட்டு மருதம்மாளின் கொட்டத்தை அடக்குவதற்கு ஒரு வழியும் பண்ணவில்லையே என்று வெகுவாகக் குறைப்பட்டுக் கொண்டிருந்தாள் அவள். அந்தப் பேட்டை முழுவதும் போலீஸ்காரன் வீடு என்று

பயபக்தியுடன் அஞ்சலி செலுத்திக் கொண்டிருக்க, இந்த ராங்கிக்காரி மாத்திரம் துளிக்கூட மரியாதையின்றி, அவனைக் கண்டாலே ஏளனமாகச் சிரித்துக் கொண்டிருந்ததைக் கண்டு அவனது மனம் புண்பட்டுக்கொண்டிருந்தது. தம்பியும், ''சும்மா இரு, அக்கா!



'பிளான்' போட்டுக்கிட்டே இருக்கிறேன்!'' என்று வெகு நாட்களாகச் சமாதானப் படுத்திக்கொண்டே வந்தான். அன்று காலையில் முத்தம்மாள் தெரு வாசலில் தண்ணீர் தெளித்துப் பெருக்கி லட்சணமாகக் கோலம்போட்டு விட்டு உள்ளே நுழைந்தாளோ இல்லையோ, மருதம்மாள் ஒரு முறம் குப்பையைக் கொண்டு வந்து அவள் போட்டிருந்த கோலத்தின் மேல் கொட்டிவிட்டாள். கந்தசாமி அப்பொழுது வீட்டில் இல்லை. வெளியே போயிருந்தான்.

''ஏய்! நானும் பார்த்துக்கிட்டே வர்றேன். ஏது வர வர உன் திமிர் ஏறிக்கிட்டே போகுது? குப்பையை எடுத்து வந்து கோலத்து மேலே கொட்டுகிறியே!'' என்று யுத்தத்தை ஆரம்பித்து வைத்தாள் முத்தம்மாள்.

''என்ன! 'ஏய் ஏய்' என்று மாடா ஓட்டுறே! நான் குப்பை கொட்டுகிற இடத்திலே கோலம் போட்டு வைச்சுட்டு என்னமோ குதிக்கிறயே!'' என்று எதிர் பாணம் தொடுத்தாள் மருதம்.

சுமார் அரைமணி நேரம் வரையில் மின்னலும் இடியும் மழையும்போல் யுத்தம் முழங்கி ஓய்ந்தது. மருதம்மாளின் மகனுக்கு இதெல்லாம் வேடிக்கையாக இருந்தது. அவர்களது யுத்தத்தை அவன் வெகுவாக ரசித்தான்.

கந்தசாமி வீட்டுக்கு வந்ததும் வராததுமாக முத்தம்மாள் விஷயத்தை அவனிடம் கூறி முறையிட்டாள்.

அவன் தணிவான குரலில் கூறினான்:

''கப் சிப் என்று இரு அக்கா! என் 'பிளான்' வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. வலையை வீசி விட்டேன். சுண்டி இழுக்கவேண்டியதுதான் பாக்கி! தங்கவேலுவும் அவங்க அத்தையும் நம்ப பிடியிலே வசமா மாட்டிக்கிட்டாங்க!''

''ஆமாம், இதை நீயும் எத்தனையோ தாளா சொல்லிக்கிட்டே இருக்கே!'' என்று அலுத்துக்கொண்டாள் அவள்.

''இதுதான் உனக்கு அவசரப் புத்தி என்கிறது! செய்கிறதை வழியாகச் செய்யணும்! பார்த்துக்கிட்டே இரு!

இன்னும் இருபத்திநாலு மணி நேரத்திலே அந்த மருதம்மா உன் காலிலே வந்து விழாதபோனால், நான் என் மீசையை எடுத்து விடுகிறேன்!'' என்று சபதம் செய்தான் கந்தசாமி. முத்தம்மாள் அந்த வீரனின் கர்ஜனையைக் கேட்டு மலைத்துப் போனாள்.

மறுதினம் ஸ்டேஷனுக்குப் போன கந்தசாமிக்கு எத்தனையோ முக்கியமான அலுவல்கள் இருந்தன. முத்துப் பிள்ளை சரிவரப் புகார் கொடுத்தாரா, மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள் என்றெல்லாம் விசாரித்துத் தெரிந்து கொண்டு வந்தான். புலவருக்கு அவன் சொல்லிக் கொடுத்த பாடம் வீண் போகவில்லை என்று தெரிந்தது. இன்ஸ்பெக்டரும் ஸ்டேஷன் ரைட்டரும் கான்ஸ்டபிள் வேலப்பனுடன் அவருடைய வீட்டுக்குச் சென்றார்கள் என்றும் கண்ணம்மாளும் தங்கவேலுவின் மீது சந்தேகம் என்று விஷயத்துக்குக் கண் மூக்கெல்லாம் ஒட்ட வைத்துச் சொல்லியிருக்கிறாள் என்றும் வேலப்பன் மூலமாகத் தெரிந்து கொண்டான் கந்தசாமி.

மாலையில் அவன் வீடு திரும்பியபோது முனியம்மாள் அவனைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். அவனைக் கண்டாலே புலியைக் கண்டதுபோல் பதுங்கும் முனியம்மாள் அன்று அவனைப் பார்த்து விட்டதும் புன்னகை புரிந்ததைக் கண்டு கந்தசாமி அதிசயித்தான்.

முத்தம்மாள் கூறினாள்: ''நம்ப முருகேசன் வந்திச்சு, தம்பி! சினிமாவுக்கு இரண்டு பேருக்கு ஒரு பாஸ் கொடுத்துட்டுப் போயிருக்குது. ராத்திரி ஆட்டத்துக்கு முனியம்மாளை அழைச்சுக்கிட்டுப் போய் வந்துடு!''

''சரிதான்! முருகேசன் வந்தானா!''

''பாவம், நல்ல பிள்ளை! நீ இல்லாத சமயத்தில் வந்து உன் உடம்பைப்பற்றி விசாரிச்சுட்டுப் போகுது!''

''நியாயம்தானே, என் உடம்பை விசாரிக்கணுமானால் ஸ்டேஷனிலே கேட்காமல் நான் இல்லாதபோது இங்கே வர்றதுதான் சரி! அப்படி வந்தபோது சினிமாவுக்குப் பாஸ் வேணுமென்று கேட்டீங்களாக்கும்!''

''நான் கேட்கவில்லை'' என்று சொன்னாள் முனியம்மாள்.

''சரிதான் தெரியுதே! ஏன் எங்கப்பா குதிருக்குள்ளே இல்லேங்கறே! அவனையே வந்து உன்னை இட்டுக்கிட்டுப் போகச் சொல்லக் கூடாது?''

''நல்லாச் சொன்னே! ஒரு வயதுப் பொண்ணை ஊரான் கூடவா அனுப்புவாங்க?'' என்றாள் முத்தம்மாள்.

''அவன் கூட அனுப்பினால் என்ன? அவன் நல்ல பிள்ளையாச்சே அக்கா!...



இல்லேன்னு நீயே அவளை அழைச்சுக் கிட்டுப் போ!'' என்றான்.

''எனக்கு உடம்பு சரியாக இல்லை, கந்தசாமி. நான் சொல்கிறதைக் கேளு. முனியம்மாவும் சீக்கிரத்தில் ஊருக்குப் போகப் போவுது......''

''ஊருக்கா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டான் அவன்.

''ஆமாம், மாமாவுக்கு நான் கடுதாசு எழுதியிருக்கிறேன். கல்யாண விஷயத் தைத் தை பொறந்ததும் யோசித்துக் கொள்ளலாம்னு......''

''அப்படியானால் முனியம்மாளைச் சினிமாவுக்கு மாத்திரமில்லே, ஊருக்குக் கூட நானே அழைச்சுக்கிட்டுப் போறேன்! ஐயோ பாவம், ஊருக்குப் போயிடப் போவுது; அதற்குத்தான் நம்மை விட்டால் யார் இருக்காங்க!'' என்றான் கந்தசாமி.

''ஆமாம் தம்பி, நல்ல யோசனைதான். நாலைந்துநாட்கள் லீவு எடுத்துக்கிட்டு அழைச்சுப்போனால் மாமாவுக்கும் சந் தோஷமாக இருக்கும்'' என்று ஆமோ தித்தாள் முத்தம்மாள்.

*   *   *

அத்தானோடு சினிமாவுக்குப் போகி றோம் என்ற சந்தோஷத்தில் முனியம் மாள் தலைகால் புரியாமல் சதிர் நடை போட்டுக்கொண்டு நடந்தாள். போகும் வழியெல்லாம் கந்தசாமி சும்மா இல்லை. முருகேசன் விஷயமாக அவளது வாயைக் கிளறிக்கொண்டே சென்றான்.

''முருகேசனும் நானும் எவ்வளவு சிநேகம் என்று தெரிஞ்சா நீ என்னிடம் விஷயத்தை இப்படி ஒளிக்க மாட்டே! அவன் எந்த விஷயமானாலும் என்கிட்ட சொல்லாமல் இருக்கமாட்டான் நீயும் அவனும் பேசிக்கிட்டது முழுதும் எனக் குத் தெரியும்!......''

முனியம்மாள்வெட்கத்தினால் தலையை ஒரேயடியாகக் குனிந்து கொண்டாள்.

''பயப்படாதே, முனியம்மா! எனக்கு இந்த விஷயத்திலே ரொம்பத் திருப்தி. முருகேசன் தங்கமானவன். மாமாவிடம் நானே சொல்லுகிறேன். அவர் உன் னைக் கேட்டால் மீன மேஷம் பார்க்கா மல் 'முருகேசனைத்தான் கட்டிக்கு வேன்' என்று சொல்லிவிடு.'' கந்தசாமி அவளது முகத்தைப் பார்த்தான்.

அவளும் அரை நம்பிக்கையோடு அவனை ஓரக்கண்ணால் பார்த்தாள்.

''அட மெய்யாகத்தான் சொல்கி றேன், முனியம்மா! நீ தைரியமாக மனசில் இருக்கிறதைச் சொன்னால்தான் காரியம் நடக்கும்! புரியுதா?'' என்று நயமாகக் கேட்டான் அவன்.

குனிந்த தலையை மெதுவாக ஆட்டிச் சம்மதம் தெரிவித்தாள் அவள். ''அப் பாடி! ஒரு தொல்லை தீர்ந்தது!'' என்று நினைத்தான் கந்தசாமி.

## இருபதாம் அத்தியாயம்

# மறக்கமுடியாத இரவு

படக் காட்சி இரவு சுமார் ஒரு மணிக்கு முடிந்தது. கந்தசாமி பெண்க ளுடைய 'கேட்டு'ப் பக்கம் காத்திருந்து முனியம்மாளை அழைத்துக் கொண்டு புறப்பட்டான். அந்த நேரத்தில் வீடு திரும்புவதற்குப் பஸ்ஸை எதிர்பார்க்க முடியாது. வீதியோரத்திலிருந்த ஒரே ஒரு ரிக்ஷா வண்டியைத் தவிர வேறு சாதனங்களெதுவும் காணப்படவில்லை. அவனுக்கு அவளோடு சேர்ந்தாற்போல் ரிக்ஷாவில் உட்கார விருப்பமில்லை. எனினும் அவளை மாத்திரம் ஏறிக் கொள்ளச் சொல்லி, தான் கூடவே நடந்து செல்லலாம் என்று உத்தேசித் தான். ஆனால் நாட்டுப்புறத்து முனி யம்மாள் ரிக்ஷா வண்டியில் ஏறக் கூச்சப் பட்டாள். எனவே கால் நடையாகவே இருவரும் புறப்பட்டனர்.

பனி கொட்டிக் கொண்டிருந்தது. தெருக்களில் ஜன நடமாட்டமே யில்லை. நகரம் முழுவதுமே மோனத்தில் ஆழ்ந்து கிடந்த அந்த நேரத்தில் கந்தசாமியின் செருப்புச் சத்தம் 'கர்முர்' என்று கேட்டது. குறுகிய சந்துகளின் வழி யாக அவன் விரைப்பாக நடந்தான். சங்கோசம் காரணமாக அவனுக்குச் சற்றுப் பின்னால் வந்து கொண்டிருந்த முனியம்மாள் அவனுடைய நடையின் வேகத்தைப் பின்பற்ற முடியாமல் ஓட்டமும் நடையுமாகத் திணறிக் கொண்டே வந்தாள்.

மெதுவாக முனியம்மாளை ஊரில் கொண்டு போய்த் தள்ளி விட்டால், பிறகு முத்தம்மாளையும் 'தாஜா' செய்து விடலாம் என்று சிந்தித்துக் கொண்டே நடந்த கந்தசாமி, சிறிது தூரத்தில் காலடிச் சத்தத்தைக் கேட்டுத் திடுக் கிட்டான். அவனது போலீஸ் மூளையில் ஏதோ சந்தேகம் தோன்றியது. அந்தச் சந்தின் மறுகோடியில் ஒரு உயரமான மனித உருவம் சுவரோரமாகப் பதுங்கி நின்றதைக் கண்டான். அந்தச் சிறு சந்தில் விளக்குகள் ஒன்றுகூட இல்லா

புதியதைவிட
அதிவெண்மையாகவும்
பிரகாசமாயும்
சலவை செய்யுங்கள்!




Godrej

சலவை
சோப்புத் தூளினால்




பிரகாசிக்கச்செய்யும் "ஆப்டிகல் ரஸாயனம்" கலந்துள்ளது

97% சுத்தமான சோப்

சோடா கிடையாது

100% சுதேசி

விலை மலிவு துரித வேலை சிறந்தது

இது ஒரு கோத்ரெஜ் உன்னத தயாரிப்பு

டிப் - கோத்ரெஜ் வாஷிங் சோப்புத் தூள்கள்
பவுடர் ரூபத்தில் வரும் நாளை எதிர்பாருங்கள்

